# துரிய வெளி

## அல்லது

# எனது அனுபவம்







பின்னலூர் துரியானந்தர்

# துரிய வெளி

அல்லது

# எனது அனுபவம்




ஆசிரியர் :

பின்னலூர் **துரியானந்தர்**

(ஸ்ரீரமண மகரிஷியின் மூத்த சீடருள் ஒருவர்)

**வேமன் பதிப்பகம்**

19, நியூ காலனி, ஜோசியர் தெரு,

நுங்கம்பாக்கம், சென்னை – 600 034.

☎ : 2821 1134

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| பெயர் | : | துரியவெளி அல்லது எனது அனுபவம் |
| தொகுப்பாசிரியர் | : | பின்னலூர் இரா. சிவானந்தம் |
| உரிமை | : | பின்னலூர் இரா. சிவானந்தம் |
| மொழி | : | தமிழ் |
| நூல் வகை | : | ஆன்மிகக் கட்டுரைகள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பாண்டு | : | 2009 |
| தாள் | : | 14.4 கி. |
| நூலின் அளவு | : | டெம்மி (14 X 21.5 செ.மீ) |
| எழுத்து | : | 12.5 |
| பக்கம் | : | 160 |
| வெளியீடு | : | **வேமன் பதிப்பகம்**<br>19, நியூகாலனி, ஜோசியர் தெரு,<br>நுங்கம்பாக்கம், சென்னை – 34.<br>☎ : 2821 1134. |
| ஒளியச்சு | : | வேமன் பிரிண்டர்ஸ்,<br>சென்னை – 34. |
| அச்சு | : | சீனு கிராப்பிக்ஸ்,<br>சென்னை – 14. |

**விலை : ரூபா. 80–00**

# முகவுரை

அனாதி காலமாக மனிதனை இறப்பு பிறப்பு என்னும் அந்தகாரத்தில் ஆழ்த்தி வீழ்த்தி வருவது மனத்தின் மறைப்பேயாகும் ஆகவே மனத்தின் உற்பத்திஸ்தானத்தையும், அதன்பரிணாமசக்தி வல்லமையையும், முடிவையும் சாஸ்திர மூலமாகவும், பெரியார்கள் மூலமாகவும், அனுபவ வாயிலாகவும், சந்தேகமின்றி கூறு கூறாகக் கண்டறிய வேண்டுமென்று எனக்குப் பேரவா உண்டாயிற்று, **"எண்ணிய நான் எண்ணிய வாறு எனக்கருளும் தெய்வம்"** என்று தைரியத்தைக் கொடுத்து, என்னை ஞானத்துறையில் இறங்கும்படி செய்தது. ஆங்கு அனுபவித்த கஷ்ட நஷ்டங்களையும், அரும் பாடுகளையும், அதனால் கிடைத்த ஆன்ம லாபத்தையும், அன்பினிற் சிறந்த அறிஞர்களாகிய நம்மவர்களெல்லாம் அவ்வருட் கூற்றை அனுபவ வாயிலாகக் கண்டு அதிசயித்து ஆனந்திக்க வேண்டுமென்ற ஆசையால், ஆவிக்கு நல்லுணவை நல்கும் இச்சிறு நூலை வரையலானேன், உலகத்தில் முன் தோன்றிய பெரியோர்கள் செய்யுள் முறையில் எவ்வளவோ சாஸ்திரங்களைச் செய்திருக்கின்றனர். அதற்குபின் தோன்றிய பாஷ்யக்காரர்கள் விருத்தியுரைகள் செய்திருக்கின்றார்கள் அவைகளை எல்லோரும் அதி லகுவில் அறிந்து கொள்ள இயலாதென நினைத்து எனது சொந்த அனுபவத்தை மிக்க எளிய வசனநடையில் **$** "துரியவெளி அல்லது எனது அனுபவம்" என்னும் புத்தகம் வாயிலாக வெளியிட்டுள்ளேன்.

முக்கிய நோக்கமாவது, இதிலடங்கியுள்ள விஷயத்தை அனுபவமென்னும் முயற்சியால் மனதை நிரந்தர வாழ்வில் ஒருமைப்பட்ட மனத்துடன் நிறுத்தி, "துரிய தரிசனம்" என்னும்

புனிதப் பேற்றை எல்லோரும் கிரகித்து, அனுபவித்து அடைய வேண்டுமென்பதே எனது விருப்பமாகும். இந்நூலானாது பக்குவமில்லாதவர்கட்கு நாவலாகவும், பக்குவிகட்கு ஞானப் பொக்கிஷமாகவும் விளங்கும்.

இவ்வனுபவ சாஸ்திரம் குயுக்திகள் பேசுவோருக்கோ, அல்லது அனுபவம் சிறிது மின்றி மூளையைக் கலக்க வல்லவராய் சரமாரியாகப் பொழியும் வசனாலங்கிருத பண்டிதர்கட்கோ, இந்நூல் பயன்படுமென்று நான் நினைக்கவில்லை. என்னைப் போன்ற முமூட்சுகட்கே இது ருசிகரமாயிருக்கும். "துரியவெளி" என்னும் இந்த உணர்ச்சி ஏற்படாமலிருப்பின் அம்மனிதரைக் கேவலம் பாக்கியமில்லாதவர் என்றே சொல்ல வேண்டும். அப்படிப் பட்டவனுக்கு இறைவனே காளை வாகனத்துடன் நேரில் தோன்றி உபதேசம் செய்தாலும் ஞானமுண்டாக மாட்டாது. ஏனெனில்? அவனுடைய மனதானது கர்ம வாசனையினால் அதிக மூடமாயிருக்கின்ற தாகும்.

தனது ஞான அனுபவத்தைப் பற்றி நடந்ததை நடந்தபடி எழுதுவதில் சிலர் பார்வைக்கு சாஸ்திரத்திற்கும் அவர்கள் அனுபவத்திற்கும் முரணாக இருக்கலாம். உலகம் எப்படி நினைத்தாலும் நினைக்கட்டும். ஒருவருக்கு உண்டாகும் காட்சி போலவே மற்றவருக்கும் அக்காட்சி உண்டாக வேண்டு மென்னும் நியதியில்லை. பலருக்கும் பலவிதமாகத் தோன்றலாம், அல்லது எனது அனுபவம் போலும் தோன்றலாம். அதைக் கொண்டு யோசிக்க வேண்டுவது ஒன்றுமில்லை. ஆகவே தடைசி முடிவான சொரூப நிலையில் எல்லோருக்கும் ஒரே அனுபவந்தான். போய்ச் சேருமிடமும் ஒன்றுதான். ஆனால் போகும் வழி பலவழியாகவும் அவ்வழியைப் பொறுத்துப் பல காட்சிகளாகவும் இருக்கலாம்.

பண்டை காலத்தில் மெய்ப் பொருளைக் காண விரும்பினவர்கள் உலகை முற்றுந் துறந்து தபசிகளாகவோ, மடவாசிகளாகவோ போயினர். ஆனால் நான் அவ்விரண்டையும் சார்ந்தவன் அல்ல. நான் அறிய வேண்டியதை இல்லறத் திலிருந்தே அறிந்து, பூர்வ வாசனையின் பலத்தினால் விவகாரங்கள் செய்து கொண்டு வருகிறேன்.

அவரவர்கள் உள்ளுக்குள்ளே கிடைக்கும் உண்மைப் பொருளைக்காண விருப்பமுடையார்க்கு, விளக்கிக் காட்டுவதே இந்நூலின் வேலையாகும். தேடிக் கொண்டிருக்கும் பேரின்பம் அவரவர் இதயத்தில் மனத்திலேயே மறைந்து கிடக்கின்றது.

எனது அனுபவத்தை முதலில் முதற் பதிப்பாக 50-பக்கம் கொண்ட சிறு நூலாக வெளியிட்டேன். அதைக் கண்ட பக்குவிகள் ஆர்வமுடன் கொண்டார்கள். அந்நூலுக்கு அவ்வளவு மதிப்பு இருக்குமென்று எனக்குத் தெரியாது. அந்த சிறுநூலைப் போற்றி உலகம் தேடுவதைக் கண்டு, இரண்டாம் பதிப்பாக 170 பக்க அளவில் மறுபதிப்பு வெளியிட்டேன். உடனே அதுவும் செலவாகிவிட்டது. தேடிக் கேட்போருக்குப் பதில் சொல்ல முடியவில்லை. இப்படியிருக்க இரங்கூனில் 30-6-1936 ல் பல்லாயிரக் கணக்கில் வெளியான ''கல்வி'' என்ற மாத சஞ்சிகையில் ''துரியவெளி அல்லது எனது அனுபவம்'' என்னும் ஞானப் பொக்கிஷம் அனேகமாத இதழ்களில் வெளியாகி பூர்த்தியாயின. முன்னிரண்டு பதிப்புகளிலும் வெளிவராதுள்ள பல முக்கிய அனுபவங்களைச் சேர்த்து நவீன முறையில் இம்மூன்றாம் பதிப்பு அமைக்கப் பட்டிருக்கிறது.

முன்னிரண்டு பதிப்புகளிலும் ஆக்கியோன் இராமலிங்கம் எனக் குறித்தேன். இம்மூன்றாம் பதிப்பில் இயற்றியது பின்னலூர் ''துரியானந்தர்'' எனக் குறித்துள்ளேன், திருவருணை ஸ்ரீ ரமணச்சிரமத்திலும், மற்றும் பல இடங்களிலும் மேற்படி புத்தகத்தைக் கண்டோர் என்னைக் கண்டவுடன் துரிய வெளிப் பேர்வழி துரியானந்தர் என்றே அழைக்கத் தலைப் பட்டனர். அது காரணம் பற்றியே ''துரியானந்தர்'' என்று புனைப்பெயரிடத் துணிந்தேன்.

---

**$** *துரியம் என்பது - மனம் வாக்கு காயங்களைக் கடந்திருக்கும் பரிசுத்தமான ஆன்மநிலை.*

*வெளி என்பது - ஆன்மாவுக்கு ஆதாரநிலையாகிய மறைப்பில்லா சிதாகாசப் பெருவெளி.*

*எனது என்பது - என்னுடைய.*

*அனுபவம் என்பது - ஆழ்ந்து அறிதலாகும்.*

*(1949-ஆம் ஆண்டு மூன்றாம் பதிப்பிற்கு எழுதப்பட்ட முகவுரை)*



திரைப்பட உதவி இயக்குநர், நாடகாசிரியர், இந்நூலின் பதிப்புரிமை
பெற்ற பின்னலூர் இரா.சிவானந்தா
(துரியானந்தரின் மூத்த புதல்வர்) வழங்கிய

## இன்னுரை

இம் மலக்கூடு என்றைக்கிருந்தாலும் ஒர்நாள் அழியக்கூடியதே, ஆகவே இவ்வுடலை இதுகாறும் உலவச் செய்வது எது என்பதை அறிய வேண்டும். கருவி கரணங்களாலமையப் பெற்ற மனிதவுருவத்தையே மனிதர்கள் மனிதனென நினைப்பதை மறந்து மனித மாளிகைக்குள் விளங்கும் மனிதனை அதாவது மனித உருவத்தைப் பிரகாசிக்கச் செய்கின்ற அருட்பெருஞ்ஜோதியை உண்மை உருவெனக் கொண்டு தெளிந்து தேர வேண்டுமென்பதே இந்நூலாசிரியரின் உள்ளக்கிடக்கை. அந்த அன்பு மயமான, அறிவு மயமான, தேஜோமயமான, அருட்பெருஞ்ஜோதியன்றி மனித உருவத்திற்கு இருப்பதில்லை, இன்பமில்லை, இயக்கமில்லை, அவ்வருட்பெருஞ் ஜோதியே உலகமெல்லாம் நிறைந்து ஒவ்வொரு ஜீவர்கள் உள்ள மெல்லாம் நிறைந்து எங்கும் பரவி

எல்லாமியற்றுகின்றது. அதிகம் சொல்வானேன் அருட்பெருஞ் ஜோதியன்றி அதற்கன்னியமாய் அணுவளவுமில்லை. ஜோதியின் உண்மையினை உணர்ந்து, தன்னுள் கோயில் கொண்ட ஜோதி ஒளியைக் கண்டபிறகு தான், மனிதருள் மனிதனும் அபேதமாயுள்ள மனிதக் கடவுளுமாகிறான். ஒளியைக் கண்ட விடத்தில் இருளேது. ''தன்னுள்ளத்தொளிரும் அருட் செல்வத்தை அடையாதவன் தன் வீட்டில் புதைந்து கிடக்கும் நிதிக் குவியலை எடுத்து, உபயோகிக்கத் தெரியாமல் பசியால் வருநதும் பிச்சைக்காரனுக்குக் சமானமானவன்'' ஆகையால், அருள் ஒளியைக் காண ஒவ்வொருவரும் முயலுதல் அத்யாவசியமே.

எனது தந்தையாரின் இந்நூலினை சுமார் அறுபது ஆண்டுகள் கழித்து தற்பொழுது சில மாற்றங்களுடன் தொகுத்துள்ளேன்.

எனது தந்தையார் துரியானந்தர் நூற்றாண்டு நிறைவு விழா நினைவு மலர் ஒன்றினை துரியானந்தரின் மகள் வயிற்றுப் பெயரன் (என் தங்கை சரஸ்வதியின் மகன்) பின்னலூர் மு. விவேகானந்தன் முயற்சியால் 8-6-1991 இல் வெளியிட்டோம். அம்மலரில் என் தந்தையாரால் ஏற்கனவே எழுதப்பட்ட ''ஞான வாழ்க்கை'' என்னும் கட்டுரையை பிரசுரித்திருந்தோம். அதை அப்படியே இந்நூலின் இறுதியில் இணைத்துள்ளேன். இந்நூல் மீண்டும் வெளிவர பெரிதும் உதவிய விவேகானந்தனுக்கு என் தந்தையின் பூரண ஆசிகள் என்றும் உண்டு. அனைவரும் இந்நூலினைப் படித்து ஆண்டவனருளைப் பெறவிழைகின்றேன்.

134,2–வது குறுக்குத்தெரு,
கனகசபை நகர்
சிதம்பரம்–603001.

**- பின்னலூர் இரா. சிவானந்தம்**

# பொருளடக்கம்




வெண்பா.

சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்கு
அபாய மொருநாளு மில்லை-உபாயம்
இதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும். -ஔவையார்.




# 1. அம்பலவாணரின் ஆனந்த தரிசனம்

**சி**தம்பரம் பொற்சபையிலே கண்டாமணி "டாண் டாண் டாண்!" என அடிக்க ஓ....ம் ஓ....ம் ஓ....ம் என்று ஓசை காதில் ஒலிக்கின்றது. நாயனகாரர் ஆனந்தமாக பைரவி ராகம் வாசிக்கிறார், தவுல்காரர் கோடையிடியென குமுறுகிறார், சந்நிதானத்தில் நந்திசுத்த மத்தளத்தைத் தன்னை மறந்து வாசிக்கிறார் ஒருவர். படலில் நிறைய ஊது பத்திகளைக் கொளுத்தி சபையை மணக்க வைக்கின்றார் ஒரு பக்தர். சாம்பிராணி கலசத்தில் தசாங்கத்தூளைக் கொட்டி, விசிறி, புகையவிட்டு மணங்கமழ பக்திமான்களை பரமன் சந்நிதியில் பரவசப் படுத்துகின்றர் மற்றொரு பக்தர். பம்! பம்!! பம்!!! என சங்கை ஊதுகின்றார் ஓர் தனி பக்தர். சர்வாங்கமும் விபூதி ருத்திராக்ஷமணிந்து இரண்டு கைகளையும் சிரமீது குவித்து ஆனந்தக் கண்ணீர் ஆறாய்ப் பெருகி பரவசப்பட்டு சிவ.... சிவ.... சிவ ஹர... ஹர... ஹர மஹாதேவ என்கின்றார் ஒருவர். ஓம் சிவாய நம: என்று வாயினால் பஞ்சாட்சரத்தை உச்சரித்துக் கொண்டும் கையில் 108 மணிகள் கொண்ட ஜெபமாலையை உருட்டிக் கொண்டும் தரிசிக்கின்றார் ஒருவர். ஹா! பொன்னம்பலம் உன் திருவடி சரணமென்று இங்கு வந்தேன், கைவிட வேண்டாம் என்கின்றார் ஒருவர். மனமுருகிக் கண்ணீர் ததும்ப உரோமம் சிலிர்ப்ப சிவநாமங்களை இடைவிடாது உச்சரித்து எக்கலிக்கின்றார் ஒருவர். வேத மந்திரத்தை முணு முணுக்கின்றார் மற்றொரு சிவபக்தர்.

பஞ்ச் துந்துபி வாத்தியம் ஒலிக்க பதஞ்சலி வியாக்ர பாதர் காண ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ மந்நடராஜப் பெருமான்

மானிடர்கள் கடைத்தேறும் வண்ணம் அருள்மாரி பொழிந்து கொண்டிருக்கிறார். ஸ்படிக லிங்க மெனும் ஆகாய லிங்கத்திற்கு முறைப்படி அபிஷேக தூப தீப ஆராதனை நைவேத்தியமும் சங்கம் பாத்திர அர்க்கியமும் கொடுத்து அமர்த்தி, நிருத்த தரிசனம் கொடுக்கும் பெருமானுக்கு சந்தனம், புஷ்பம் சாத்தி அடுக்கு அலங்கார தீபம், பஞ்சஹாரத்தி, பில் வார்த்தி, ஏக ஹார்த்தி, விருஷபார்த்தி, நாகார்த்தி, மயூரார்த்தி, குதிரை யார்த்தி, யானை ஹார்த்தி, அம்ஸ ஹார்த்தி, புருஷார்த்தி, பஞ்ச தட்டு, ஹிரண் பாத்திர குடதீபம், சுருட்டி, சாமரம், குடை, கண்ணாடி, விசிறி நட்சத்திர தீபம், அக்கினி தீபம் முதலிய சோடச உபசாரம் கற்பூர தீப ஆராதனை, ஐந்து கிளை தீப ஆராதனை, பஸ் மரட்சை முதலியவைகளை பிரணவாகாரமாக ஆராதித்து வேதத்தினாலும, ஆகமத்தினாலும், புராணத்தினாலும், இதிகாசத்தினாலும் உபசரித்த பின்னர்;

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றால்
மனித்த பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

என்று தமிழ் வேத பாராயணம் ஓதுகின்றார் தேசிகர் ஒருவர்.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த வாரமுதே
பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவ பெருமானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேனினி
யெங்கெழுந் தருளுவ தினியே".

என்று கனிவுடன் பாடுகின்றார் மற்றொரு பரமபக்தர் அத்தகைய அடியவர் கூட்டத்தில் இவனும் ஒருவனாக நின்று கை கூப்பித் தொழுது ஆனந்தமடைகின்றான். கடைசியாக பக்தர்களுக்கு சிவப் பிரசாதத்தைத் தீட்சதர் வினியோகித்தார்.

C C C

---

கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக

## உ. சொற்பனந் தன்னில் அற்புதக் காட்சி

*என்னே ஆண்டவனின் அருட் கருணை!*

முன் சொன்ன முறையில் சிதம்பரம் நிருத்த சபையில் நடராஜர் தரிசனக் காட்சி பின்னலூரில் உள்ள எனது நிலையத்தில் நள்ளிரவில் சொற்பனத்தில் அபிஷேக அலங்கார ஆராதனை தீப தசினக் காட்சியை சுமார் அரைமணி நேரம் கண்டு ஆனந்தித்து விழித்தெழுந்து பகவான் கருணையே இதுவெனவும், நல்ல சொற்பனமெனவும் மகிழ்ந்துபின் உறங்கிவிட்டேன். தொடர்ந்து இரண்டாம் நாளும் முன்சொன்ன முறைப்படி நடராஜர் தெரிசனம். நள்ளிரவில் சொற்பனத்தில் அக்கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு விழித்தெழுந்து, ஆனந்த பரவசமானேன். இது என்ன கூத்து! முதல்நாள் கண்ட சொற்பனப்படி இரண்டாம் நாளும் அம்முறையே பிசகாமல் காண்பது என்ன வினோதம்! எல்லாம் அவன் செயல் எனத் துணிந்து பின் உறங்கிவிட்டேன் முதல் நாளும் இரண்டாம் நாளும் கண்டபடியே மீண்டும் மூன்றாம் நாளும் அவ்வற்புதக் காட்சி ஆனந்தக் காட்சியை இன்பக் கனவினில் கண்டேன்! கண்டேன்!! கண்டேன்!!! அம்மாயோன் மாயவித்தை விளங்கிய என்னப்பன் என்னை ஆட்கொண்டான். இதில் சந்தேகமில்லை இனியும் சந்தேகமில்லை.

"எல்லாம் உனது அருள், எல்லாம் உனது மயம்,
எல்லாம் உனது அறிவு, எல்லாம் உனதுசெயலே".
"அன்பே உனது தலம், அன்பே உனது முடி,
அன்பே உனது மயம், அன்பே உனது நிலையே".
"நானோ உனது குலம், நானோ உனது வழி,
நானோ உன தடிமை, நானோ உனது மகனே".
"நீயே எனது பதி, நீயே எனது மதி,
நீயே எனது நிதி, நீயே எனது கதிரே."

இப்படிப் பலவாறு பகவானை நினைத்து உளமகிழ்ந்து **"எண்ணம் எதுவோ அது செய்வாய்"** என்று அவன் மீது பாரத்தைப் போட்டு உலக நடையில் உழன்றேன். இந்த நடராஜர் தரிசனக் காட்சி எனது சங்கற்பத்தினின்றும் உண்டானதல்ல. பின்னென்னவெனில் அது ஆண்டவனின் விருப்பம் போலும்.

**C C C**

---

## 3. சொற்பனந்தன்னில் நற்பதக்காட்சி

**இ**ரவு 3 மணிக்கு விழிப்பு நிலையில் சமாதியில் உட்கார ஆரம்பித்தேன். அப்போது உடனே "ஞானமாம்! ஞானம்!! அனுக்கிரகமாம்! அனுக்கிரகம்!! இதில் மோட்சம் என்ன வேண்டியிருக்கிறது? இந்த அனுபவம் சாதனை ஒன்றுமே வேண்டாமிந்த அமர்க்களத்தில்". என்று வாழ்க்கைக் கோலத்தை நிந்தித்து பின்னுறங்கிவிட்டேன்.

நடராஜர் சந்நிதியிலுள்ள துவஜஸ்தம்பத்தின் கீழ்பால் போகும் பிரகாரத்தின் பாதை ஓரம் சுமார் 3-அடி உயரமுள்ள கருங்கல்பக்க மேடைமேலமர்ந்திருக்கிறேன். அவ்வழியாக ஒட்டைசிவிங்கி, கோயில் ரிஷபம், யானை முதலிய கூட்டங்கள் வந்து எனது ஓரமாகப் போவதை பார்த்துப் பயந்து அவதிப்படுகிறேன். அதாவது ஒட்டைச்சிவிங்கி முட்டித் தள்ளிவிடும் என்றும், ரிஷபம் கொம்பால் குத்திவிடும் என்றும், யானை தன் தந்தங்களாலும் தும்பிக்கையினாலும் கொன்றுவிடுமென்றும் துஷ்டமிருகங்களிடம் பயந்து பீதி அடைந்திருந்தேன். இப்படியிருக்க,

திடீர் என்று எனக்குப் பின்புறம் எதிர்பாராதவிதமாக மூன்று பெரியார்கள் பண்டார சந்நிதிகளைப் போல சிவவேடம் தரித்தவர்கள் என்னைத் திரும்பச் செய்து ஒரு ஞானி என்னிருகைகளிலும் விபூதியை நிறையக் கொட்டியும், மற்றொரு ஞானி என்னை வாயைத் திறக்கும்படி செய்து தூளாக உள்ள ருசியற்ற பண்டத்தைக் கொட்டியும், மற்றொரு ஞானகுரு என் தலையில் கையை வைத்து அழுத்தவும்.....

நான் மனம், வாக்கு, காயங்களைக் கடந்த பெரிய மௌன சமாதியில் சொல்லும், பொருளும் அற்ற, இருந்த அதனை இருந்தபடி காட்டிய நிலையில், ஞான அனுபவ உணர்ச்சியில் அப்படியே அனேக நிமிஷத்திற்கு மேலிருந்துவிட்டேன், ஆகவே ஏககாலத்தில் மூன்று குருமார்கள் எனக்கு அனுக்கிரகத்தால் அடைந்த வல்லபத்தையும், அனுபூதி நிலையையும் சொல்லத்தரமன்று.

சாக்கிரத்திற்கு வந்தவுடன் ஞானத்தைப்பற்றிக் கேவலமாகவும், அல்லல் கோலத்தை அலட்சியமாகவும் நினைத்தது பிசகென்று பட்டது. ஆண்டவனின் அருள் என்றுமே இடைவிடாது என் மீது உள்ளது என்று துணிவு பட்டு, தெளிந்து சாந்தமடைந்தேன்.

C C C

# 4. நற்பதமடைய அற்புத ரகசியம்

**உ**லகிலுள்ள பல்வகைத் தோற்றங்களிலும் மனிதப் பிறவியே மேலானதென்பது எவருமறிந்ததே. இத்தகைய மனிதப்பிறவி புண்ணிய வசத்தால் நமக்குக் கிடைக்கப் பெற்றும், சிறு குழந்தை விளையாட்டு போன்று நாம் அதனை உணராது, மதிமயக்குற்று வாணாளை வீணாக்குகின்றோம். இனியேனும் பிறவிப் பெரும்பயனை எய்த வேண்டி; "நாம் ஏன் சிதம்பரம் நடராஜப் பெருமானை தரிசனம் செய்ய வேண்டும்? அவரை தரிசிப்பதெப்படி? அவரை தரிசிப்பதால் வரும் பயன் என்ன? என்பன போன்ற விஷயங்களே அறிந்து கொள்து அவசியமல்லவா?

ஐம்பூதத் தலங்களில் ஆகயாத்தலமானதும், முத்திதரும் தலங்களில் முதன்மையானதும், பதஞ்சலியும் வியாக்ர பாதரும், நாளைப் போவாரென்னும் நந்தனாரும் முத்தி பெற்றதும், நடராஜரின் திருவருள் பெற்று உமாபதி சிவம் பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச் செடிக்கும் முறையே மோட்சமளித்ததும் இத்தலமே.

எவ்வுயிரையும் காத்தளிக்கும் எம்பெருமான், எம்போன்ற சீவர்கள் மீது கொண்டுள்ள அருள்நோக்கால் தில்லை யம்பதியில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளால், என்ற பஞ்சகிருத்திம் நடனம் செய்கின்றர், அதன் கருத்து யாதெனில் எல்லையற்ற வுயிர்கள் மீண்டும் பிறவா நெறிபெற்று பேரின்ப முறுதலேயாகும்.

உலகம் என்பது ஒரு பெரிய நாடகமேடை, உலகத்துள்ளார் அனைவரும் அதன்மீது நடிப்பவர்களே. ஒவ்வொருவருக்கும் வாழ்க்கை எனும் நாடகத்தில் ஒவ்வொரு வேடம் கொடுக்கப்பட்டுள்ளது. அதனை நமக்குக் கொடுத்தவர் நாடகசாலைத் தலைவராகிய துரிய பதங்கடந்த ஸ்ரீ நடராஜபதி. அந்த ஸ்ரீமத் நடராஜப் பெருமான் நிருத்தம் செய்யும் தனிக்குறிப்பாவது, முதன் முதலில் ஜாலவித்தைக் காரன் தனது டமாரத்தை அடித்து மக்களைக் கூட்டுவது போன்று, நடராஜப் பெருமான் தனது வலக்கையிலுள்ள டமருகத்தை மிக்க ஒலித்து அன்பர்களே! வாருங்கள்!! வாருங்கள்!!! துள்ளி விளையாடும் மானைப்போதன்ற உங்களுடைய மனதை சதா மாயாந்த காரத்தில் மூழ்குவிக்காமல், ஆணவ மாயையான முயலகனை என் பாதத்தின் கீழ்மிதித்துத் தொலைப்பேன் என்று அழைப்பதைக் குறிக்கும். மற்றொரு வலக்கை

அஞ்சேல்! அஞ்சேல்!! உங்கள் பழவினைகளை என் இடது கையிலுள்ள ஞானத்தீயினால் எரித்து, மற்றொரு இடக்கையால் தனது குஞ்சிதபாதத்தில் சேர்த்து அனுக்கிரகிப்பேன் என்பதையுணர்த்தும். இத்துணைப் பெருமை வாய்ந்தது நடராஜப் பெருமானின் தரிசனம், ஆகவே அன்பர்களாகிய நாம் ஸ்ரீ நடராஜப் பெருமானின் நடனத்தைப் பகிர்முகத்தில் தரிசித்து அகத்துள் நடிக்கும் ஆனந்தக் கூத்தனைக் கண்டு களித்துப் பேரின்ப சித்திப் பெருவாழ்வை பெறுவோமாக.

C C C

## 5. பிறந்ததை அறிய மறைந்தவன் பிறந்தான்

எனது அனுபவ சரித்திரத்தை நான் எழுதுவதில் பலர் பலவாறாக நினைக்கலாம். பலர் பலவாறாகப் பேசலாம். எனது பகிரங்கச் செய்கைகள் பார்ப்போருக்குப் பலவாறாகத் தோன்றலாம். அந்தரங்கத்து பரமாத்மா ஒன்றையே நாடியிருக்கிறேன். இதற்கு என்னை நடத்துவோன் தான் சாஷி. எனது ஆரம்பத்திலிருந்து அனுபவத்தை எழுதுவதில் சிற்சில தவறிய வழிகளுமிருக்கலாம். சரியான வழியுமிருக்கலாம். இதனால் எனக்குப் புகழோ பெருமையோ உண்டாக வேண்டுமென்னும் அகம்பாவத்துடன் இதை எழுதவில்லை. உண்மையை உணர ஆரம்ப காலத்தில் எவ்வளவோ கஷ்டப்பட்டேனல்லவா? அன்பர்களாகிய ஞானத்துறை யிலிறங்குவோருக்கு அக்கஷ்டங்களெல்லாம் நீக்கி நேரான பாதையை அடைய இது ஒரு தைரியம் கொடுக்கும் ஊன்று கோலாகுமென மதித்து எழுதுகிறேன்.

தென்னிந்தியாவில் மிக விசேஷிக்கப் பெற்ற பஞ்ச பூத ஸ்தலங்களில் ஒன்றாகியதும், என்றும் தில்லைவாழ் அந்தணர்களால் பூஜிக்கப் பெற்று சிறப்புற்றோங்கியதும் அருள்வடிவக் கடவுள் ஞான ஸ்வருபத்தை குறிக்கும் சிதாகாசத்தையும், ஸ்ரீ சிவகாம சுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ மந் நடராஜப் பெருமானையுங்கொண்ட திவ்யஸ்தலமுமாகிய சிதம்பரத்திற்கு வடமேற்கே பதின்மூன்று மைல் தூரத்திலுள்ளதும், ஸ்வருபானந்த ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்று பாடு துறை முதலிய விஞ்ஞான நூல்களைச் செய்த ஞானானுபவச் செல்வராகிய மஹான் தத்துவராய சுவாமிகள் விதேக கைவல்யம் பெற்று ஆலயமாகக் கொண்ட கதம்பவனமென்னும் எரும்பூர் திவ்ய க்ஷேத்திரத்திற்கு வடகிழக்கு மூன்று மைல் தூரத்திலுள்ளதும், திருவருட்பிரகாச வள்ளலாராம் இராமலிங்க சுவாமிகள் அன்பர்கள்

அருட்பெருஞ்சோதி தரிசனம் கண்டு களித்துக் கடைத்தேறும் வண்ணம் ஞான சபையை ஸ்தாபித்த வட சிதம்பரம், பார்வதிபுரம், உத்தரஞான சித்திபுரம் எனப்படும் வடலூரென்னும் திவ்ய க்ஷேத்திரத்திற்கு நேர் தெற்கு நான்குமைல் தூரத்திலுள்ளதும், சுவாமி மலையைப் போல் கருங்கல்லினால் கட்டப்பட்ட சிறு மேட்டின் மேல் இராமேச்வர ஐதீகப்படி ஸ்ரீபர்வதவர்த்திரி அம்பாள் சமேத ஸ்ரீ இராமலிங்கேச்வரர், இராமபிரான் முதலியவர்கள் கோயில்கொண்ட கிராமமாகிய **பின்னலூரில்** வடராஜ வாய்க்கால் நதிதீரத்தின் மேல் கரையிலுள்ள நந்தவனத்திலும், மடத்திலும் வடலூர் ராமலிங்க சுவாமிகள் ஒரோர் சமயம் வந்தமர்வதும் என் தந்தையார் சிதம்பரம் பிள்ளை, பாட்டனார் வைத்தியனாத பிள்ளை முதலியோர் சமாதி கொண்டுள்ளதுமான, புராதன மடத்தை ஸ்தாபித்த காருகாத்தாரென்னும் சைவ வேளாள குலத்து செம்பு தரிய வம்சப் பெரியார் வழிவந்த **சிதம்பரம் பிள்ளைக்கும்** மனைவியார் **அருந்தவம் அம்மாளுக்கும்** நான் (இராமலிங்கம்). ஜனித்தேன்.

**இராமலிங்கம் பிறந்த தேதி 3-6-1891. அதாவது கலியப்தம் 4993. கர வருடம் வைகாசிமீ 22உ புதன்கிழமை அசுவதி நட்சத்திரம் உதயாதி 24-32க்கு துலாலக்கினத்தில் கேதுதிசை 2-வருடம் 6-மீ 6-நாள் 54 நாழிகை 38 வினாடி.**

| | சந்தி புதன் சுக் | சூரிய ராகு | செவ் |
|---|---|---|---|
| குரு | ராசி | | |
| | | | சனி |
| | கேது | ல | |

**C C C**

---

கோபத்தால் நாய் போல் குலைக்காதே

## 6. பெயரில்லானுக்குப் பெயரொன்றிட்டது

**எ**னது மாதா பிதாக்கள் வடலூர் இராமலிங்க சுவாமிகளை நேரில் தரிசனம் செய்தும், சம்பாஷித்தும் அவர் அனுக்கிரகத்தின் பயனாகப் பிறந்தவனானபடியினால் எனக்கும் மேற்படி மகான் **இராமலிங்க** சுவாமிகளின் பெயரையே இராமலிங்கமென திருநாமஞ்சூட்டி வளர்த்து வரும் நாளில், இராமலிங்க சுவாமிகளின் திருஅருட்பாவை எனது தாயார் **அருந்தவம் அம்மாள்** மிகீ உருக்கமாக ஆழ்ந்த கருத்துடன் படித்துக் கண்ணீர் கானாறாக பெருக அழுது தன்னை அறியாமற் புலம்புவதைப் பார்த்து சிறியேன் ஆச்சர்யப்படுவேன். எனது தந்தை **சிதம்பரம் பிள்ளை** அவர்கள் யோகத்தண்டுடன் யோகம் பழகுதலும், விடியற்காலை மூன்று மணிக்கு மேற்படி அருட்பாவை தோத்திரம் செய்தலும் பழக்கம். ஆனால் அக்காலத்தில் அவர்கள் படிப்பதன் நோக்கம், யோகம் செய்வதின் சாராம்சம், எனக்கு ஒன்றுமே தெரியாது.

C C C

## 7. அரி ஓம் என்று அறிவித்த குரு

**எ**ங்கள் வீட்டில் பரதேசிகளுக்கும், பசித்து வந்தோர்களுக்கும் சாப்பாடு போடுவதுண்டு. மேலும், குடும்பத்தில் பூர்வீகமாக எப்பொழுதுமே ஒரு சாமியார் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் ஆசாரசீலமாய் இருப்பதுடன் பக்தி யோகத்தில் சிறந்தவர். அவருடைய சொந்தவூர் ஆனத்தூர் என்று சொன்னார். அவர் பெயர் ஆறுமுக சுவாமி. கருநிறம், குள்ளம், தடித்த உருவம், நெற்றியில் எப்போதும் காலணா உருவுள்ள சந்தனப் பொட்டணிந்து அதற்கு மத்தியில் ஒரு பைசா அகலமுள்ள குங்குமப் பொட்டணிந்திருப்பார். ஓர் சமயம் "**சுப்ரமண்யம்**" என்பார். ஓர் சமயம் "**ஷண்முகா**" என்பார். இப்படித் தினம் அநேக தடவை திடுக்கிடும் சமயம், அயர்வு ஆகிய நேரங்களில் தன்னையறியாமல் சொல்லிக் கொண்டிருப்பார். எப்பொழுதும் இரவும், பகலும் தூங்கும்போதும் கூட கையில் (அரை அங்குல கனம், ஒரு முழ நீளம் இரும்பினால் ஆன) ஓர் தலைப்பில் வேலும், மற்றோர் தலைப்பில் எழுத்தாணியும் போன்ற கூறாயுதம் ஒன்று இருக்கும். அவ் வேலை வைத்துத்தான் அபிஷேக ஆராதனை செய்து, தூப தீபம் கொடுத்து

பூசித்து வருவார். அதற்குச் சத்திவேல் என்று பெயர் சொல்லுவார் அன்னாளில் வழங்கும் பழக்கப்படி பனை ஓலையில் அவர் எழுத வேண்டுமாயின் அவ் வேலாயுதத்தால் தான் எழுதுவார். மகா நிபுணர்; அறிவாளி. தயக்கமின்றி கவிகள் வரைவார் முன்பக்கம் வைத்து எழுத்து போன்றே தன் கைகளை பின் கொண்டுபோய் ஓலையில் கவி எழுதிக் காண்பிப்பார். இம் மகானுபாவரை எனக்கு முதற்குருவாக பகவான் தேர்ந்து எடுத்து அனுப்பி வைத்தார் போலும்!

எனக்கு ஐந்து வயதாம் அரியாப் பருவந்தனில் நல்ல சுபமுகூர்த்த நாளில் அகலமுள்ள கூந்தல் பனை ஏட்டில் ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை. திருச்சிற்றம்பலம் ஹரி நமோத்து சிந்தம் "அ ஆ இ ஈ" என உயிர் மெய்யெழுத்துக்களை வரைந்து எனக்கு மங்கள ஸ்னானம் செய்வித்து சிகப்புப் பட்டாடை உடுத்தி இரு விளிம்பிலும் சரிகைப் பட்டை பூணிட்டு பூவேலை செய்துள்ள கருப்புத் தொப்பியை தலைக்கு அணிவித்து சூழ்ந்திருந்தவர்கட்கு காப்பரிசி முதலியவை வழங்கி வெகு சிறப்பாக ஹரி ஓம் என்னும் செம் பொருளை ஓதி உணர்வித்தார். ஆறுமுக குரு.

அதுவே எனது பிற்கால வாழ்க்கையில் "தொட்டிற் பழக்கம் சுடுகாடு வரை" என்பதைப் போல அந்த ஹரி ஓம் என்ற பதத்தை அறியச் சொன்னபடி அறிந்தேன், அறிகிறேன், அறிவேன்.

எந்தக் காரணத்தைக் கொண்டு அந்த ஆறுமுக சுவாமி வேலாயுதத்தால் பனையேட்டில் பிரணவத்தை எழுதி எனக்கு ஓதுவித்தாரோ அதன் கருத்து அந்த ஆறுமுக சுவாமிக்கு எனக்குள்ளிருந்து ஆட்டுவிக்கும் அருட்குருவுக்கும் தான் (அதன் ரகசியம்) தெரியும்.

C C C

## 8. பிள்ளைப் பருவமும் பிள்ளையார் பூஜையும்

**எ**னது எட்டாம் வயது ஞானம் எட்டாப் பருவமதில் எனது தந்தையார் சிதம்பரம் பிள்ளை எனக்கென்று வீட்டின் சுவரில் ஓர் சிறிய அலமாரி அமைத்து, அதில் விநாயகர் செம்பு விக்கிரஹம் ஒன்று அமைத்தும், இன்னும் பழனி ஆண்டவர் படம் ஸ்ரீ நடராஜமூர்த்தி படம் முதலியவைகளை ஸ்தாபித்து அதற்கு விநோத ரசக்குண்டு முதலியவை அலங்கரித்தும், விக்கிரஹம் படமுதலியவைகட்டு

ருத்ராக்ஷமாலை அணிவித்தும், எங்களது வம்சப் பரம்பரை மடத்தின் நந்தவனத்திலுள்ள புஷ்பங்களை எடுத்துவர புஷ்பக்குடலைகள் அமைத்துக் கொடுத்தும் சுத்த பக்தியோடு பூஜை செய்து வரும்படி ஆக்ஞாபித்தார்.

தொல்லைக் குடும்பத் துயரதனில்
தொலைத்தே னந்தோ காலமெலாம்
அல்ல லகற்றிப் பெரியோரை
யடுத்து மறியேன் அரும்பாவி
செல்வத் தணிகைத் திருமலை வாழ்
தேவா வுன்றன் சந்நிதிக்கு
வில்வக் குடலை யெடுக்காமல்
வீணுக் குடலை யெடுத்தேனே. (அருட்பா)

அதன்படி நடக்க ஓர்நாள் சிறுபிள்ளை விளையாட்டில் புஷ்பமெடுக்கத் தவறி விட்டபடியால் வேண்டியது கிடைத்தது. ஓர் நாள் பூசை செய்து தூப தீப நைவேத்தியம் முடிக்காமல் அலட்சியமாக சாப்பாட்டிற்கு உட்கார்ந்து விட்டேன். இதைக்கண்ட தந்தையார் இவன் ஸ்நானம் செய்யாமலும் பூசை முடிக்காமலும் சாப்பாட்டிற்கு உட்கார்ந்துவிட்ட படியால் சாப்பாடு போடாதே யென்று தாயார் அருந்தவம் அம்மாளுக்கு கண்டிப்பான உத்திரவு செய்தார். என் செய்வேன்? உடனே அவர்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து ஸ்நானம் செய்து, பூசை முடித்து சாப்பிடலானேன். இதில் மற்றொரு விசேஷமாவது "ஔவையார்" அருளிச் செய்த ஆறுபைசா விலையுள்ள விநாயகர் அகவல் என்ற புத்தகத்தை வாங்கிக் கொடுத்து, அதை தனியே என் கையினாலேயே எழுதி பாராயணம் செய்து, தன்னிடம் ஒப்புவிப்பதுடன், பூசை பண்ணும்போது விநாயகரிடம் தோத்திரம் பண்ணிவர சட்ட திட்டங்கள் அமைத்தார்.

C C C

## 9. தந்தையின் உபதேசம் பந்த நிவர்த்திக்கே

ஓர் நாள் விநாயகருக்கு அபிஷேக ஆராதனை செய்யும் போது ஐந்து நிமிஷம் சொல்ல வேண்டிய அகவலை இரண்டே நிமிஷத்தில் (போட்மெயிலைவிட அதிக துரிதமாக) ஒன்றை விட்டு ஒன்று சொல்லி முடுக்கி, முடிக்க ஆரம்பித்தேன். பார்த்தார் தந்தையார், சாவதானமாக

என்னை ஓரிடத்தில் உட்காரவைத்து சொல்லுகிறேன் கேளென்று ஔவையார் கதையைத் துவக்கினார்:

"முன்பு ஒரு காலத்தில் சேரமான் பெருமான் நாயனார் என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கைலாயத்திற்குப் போவதைத் தெரிந்து, விநாயகர் பூசை செய்துகொண்டிருந்த ஔவை யென்பவள் தானும் அவர்களுடன் கையலாத்திற்குப் போக விருப்பங்கொண்டு, மிக்க துரிதமாக பூசை செய்தாள். அப்பொழுது விநாயகர் ஔவையைப் பார்த்து, "ஔவையே நீ சாவதானமாக பூசை செய், அவர்களுக்கு முன்னதாக நீ போய்ச் சேர்வாய்", என்றார். அப்படியே துரிதமில்லாமல் பூசை செய்து இந்த அகவலை தோத்திரமாகப் பாடினார். விநாயகர் தாம் சொன்னடியே தனது தும்பிக்கையால் ஔவையாரைத் தூக்கி கைலாயத்தில் சேர்த்துவிட்டார். ஔவை கையலாயத்திற்சென்று முன்னதாக வந்த சேரமான் பெருமான் நாயனாரைக் காணமற்றி கைத்து வரும் வழியை பார்க்க அப்பொழுதுதான், 'முகில்போன் முழுங்கி அதிர நடந்திடும் யானையும், தேரும் அதன்பின் குதிரையும், நாயனாரும் காதவழி தூரத்திற்கப்பால்' வந்து கொண்டிருக்கிறார் களாம்".

இவ்வளவு மகிமை பொருந்தியது இந்த அகவற்பா எனவுரைத்து இனி மிகவும் சாவதானமாக வார்த்தையின் பொருளைச் கவனித்து நிதானித்து பூஜை செய் என்றார். நாளடைவில் அதிலுள்ள பதங்களின் சாராம்சத்தைக் கவனித்தேன்.

C C C

## 10. வினையை ஒழிக்கும் விநாயகர் அகவல்

சீதக்களபச் செந்தாமரைப்பூம்
பாதச்சிலம்பு பலவிசைபாட
... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ...
இப்பொழுதென்னை யாட்கொளவேண்டித்
தாயாயெனக்குத் தானெழுந்தருளி
மாயாப்பிறவி மயக்கமறுத்துத்

---

பாவியென்ற நாமம் படையாதே

திருந்தியமுதலைந் தெழுத்துந்தெளிவாய்
பொருந்தவேவந்தென் னுளந்தனிற்புகுந்து
குருவடிவாகிக் குவலயந்தன்னில்
திருவடிவைத்துத் திறமிதுபொருளென
வாடாவகைதான் வந்தெனக்கருளிக்
கோடாயுதத்தாற் கொடுவினைகளைந்தே
உவட்டாவுபதேசம் புகட்டியென்செவியில்
தெவிட்டாதஞானத் தெளிவையுங்காட்டி
ஐம்புலன்றன்னை யடக்குமுபாயம்
இன்புறுகருணை இனிதெனக்கருளிக்
கருவிகளொடுங்குங் கருத்தினையறிவித்
திருவினைதன்னை அறுத்திருள்கடிந்து
தலமொருநான்குந் தந்தெனக்கருளி
மலமொருமூன்றின் மயக்கமறுத்தே
ஒன்பதுவாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக்கதவை அடைப்பதுங்காட்டி
ஆறாதாரத் தங்குசநிலையும்
பேராநிறுத்திப் பேச்சுரையறுத்தே
இடைபிங்கலையின் எழுத்தறிவித்துக்
கடையிற்சுழிமுனை கபாலமுங்காட்டி
மூன்றுமண்டலத்தின் முட்டியதூணின்
நான்றெழுபாம்பி னாவிலுணர்த்திக்
குண்டலியதனிற் கூடியவசபை
விண்டெழுமந்திரம் வெளிப்படவுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழுகனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்தே
அமுதநிலையும் ஆதித்தனியக்கமும்
குமுதசகாயன் குணத்தையுங்கூறி
இடைச்சக்கரத்தின் ஈரெட்டுநிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையுங்காட்டிச்
சண்முகதூலமுஞ் சதுர்முகசூட்சமும்

---

பிறக்கும்பொழுது கொண்டு வந்ததில்லையே?

எண்முகமாக
புரியட்டகாயம்
தெரியெட்டுநிலையுந்
கருத்தினிற்கபால
இருத்திமுத்தி
என்னையறிவித்
முன்னைவினையின்
வாக்குமனமும்
தேக்கியேயென்றன்
திருள்வெளியிரண்டுங்
அருடருமானந்தத்
எல்லையில்லா
அல்லல்களைந்தே
சத்தத்தினுள்ளே
சித்தத்தினுள்ளே
அணுவிற்கணுவாய்
கணுமுற்றிநின்ற
வேடமுநீறும்
கூடுமெய்த்தொண்டர்
அஞ்சக்கரத்தின்
நெஞ்சக்கரத்தி
தத்துவநிலையைத்
வித்தகவிநாயக

இனிதெனக்கருளிப்
புலப்படவெனக்குத்
தெரிசனப்படுத்திக்
வாயிற்காட்டி
இனிதெனக்கருளி
தெனக்கருள்செய்து
முதலைக்களைந்து
இல்லாமனோலயம்
சிந்தைதெளிவித்
கொன்றிடவென்ன
தழுத்தியென்செவியில்
ஆனந்தமளித்து
அருள்வழிகாட்டிச்
சதாசிவங்காட்டி
சிவலிங்கங்காட்டி
அப்பாலுக்கப்பாலாய்க்
கரும்புள்ளேகாட்டி
விளங்கநிறுத்திக்
குழாத்துடன்கூட்டி
அரும்பொருடன்னை
னிலையறிவித்துத்
தந்தெனையாண்ட
விரைகழல்சரணே

முற்றிற்று

வெண்பா

சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்கு
அபாய மொருநாளு மில்லை—உபாயம்
இதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும் — ஔவையார்.

இப்படி விநாயகருக்கு சுமார் இருபது வருஷம் தினம் புஷ்பமெடுத்து பூஜை செய்யும் மேற்படி அகவலைச் சொல்லி

---

அருச்சனை செய்தும் வந்திருக்கிறேன். இப்பொழுதும் அந்த விநாயகருக்கு வீட்டில் பூஜை நைவேத்தியங்கள் நடந்து வருகின்றன. ஆனால் இந்த அகவல்சொல்லி பக்தி சிரத்தையாச் செய்வோரைத்தான் காணோம். யானும் செய்வதில்லை. எதற்காக எவன் தந்தை விநாயருக்கு பூஜை செய்யும் படிக்கும் அகவற்பா தோத்திரம் செய்தே தீரவேண்டுமென்றும் வற்புறுத்தியிருப்பாரோ? அது அந்த விநாயகருக்கும் இதைப்படிக்கும் வாசகர்கட்கும் தான் தெரியும். இந்த அகவலில் மாயப் பிறவி மயக்க மறுக்கும் உபாயமும், ஐம்புலன்களையும் கருவிகளையும் ஒடுக்கும் வழியும், ஆணவமலம், மாயாமலம், கன்மமலம் என்னும் மும்மலத்தை அறுக்கும் விபரமும், ஒன்பது வாசலுள்ள இந்த வீட்டில் ஒரு ஐந்தெழுத்தின் மந்திரத்தினாலே ஐம்புலக்கதவை அடைக்கும் விபரமும், குண்டலி சக்தியை விழிப்பிக்கச் செய்து தன்னை யறிந்து ஆத்ம தரிசனம் பண்ணவும் சோபான முறைகளை முறையே நம் மூதாட்டி தெரிவித்திருப்பதை ஆழ்ந்து நோக்கின் வாசகர்கட்கு உண்மை எளிதில் விளங்குகிறதன்றோ?

C C C

## 11. ஞாலங்கடந்த மூலக்காட்சி

இப்படிக் காலம் செல்லும்போது உலக நடைக்குள்ள வழியில் என் மனமிருப்பினும், வயது ஏற ஏற அருட்பாவின் மதுரங்கனிந்த அற்புதபாசுரத்தின் உட்பொருளுக்கு ஆசைப்பட்டு முக்கிய பாட்டுகளை மனனம் செய்தேன். வயது பத்து இக்காலத்தில் எனது தாய் தந்தையர்கள் என்னைச் சிதம்பரம் நடராஜர் சந்நிதானத்தில் தரிசனம் செய்ய அழைத்துப்போய் அங்குள்ள தீட்சதரால் கனக சபையிலுள்ள ஸ்ரீமந் நடராஜப் பெருமானை தரிசனம் செய்வித்து அதன் பின்பு பக்கத்திலுள்ள ஒரு சிகப்புத் திரையால் மறைக்கப்பட்டிருந்த இரகசிய தரிசனம் காட்ட தீட்சதருக்கு ரூபாய் ஒன்று கொடுக்கப் பெற்றுக்கொண்டு கற்பூர மேத்தி அங்கிருந்த படுதாவை நீக்கி வெட்ட வெளியாகிய ஆகாயத்தைக் காண்பித்தனர். நான் எனது தந்தையைப் பார்த்து என்ன அப்பா! அங்கு ஒன்றையும் காணோமே என்றேன். இதைக்கேட்டு ஆங்குள்ள தீட்சதர்களும் தாய் தந்தையரும்

கொல்லென்று சிரித்தனர். பின்பு தந்தை என்னை விளித்து நன்றாகப் பார்த்தனையா? என்றனர். ஆங்கு ஊன்றிப் பார்த்தேன். வில்வதளத்தினாலமைந்த சரம்போல தங்கமயமான இரண்டு மூன்று கொத்துக்கள் தொங்கிக் கொண்டிருந்தது தோன்றியது. பார்த்தபின்பு அதோ! தோன்றுகிறதே அதுதானா? என்றேன். அதற்கு அவர்கள் ஆகாயரூபத்தைக்காட்ட அத்தளத்தைக் காண்பித்திருக்கின்றனர் என்றனர். தரிசனம் செய்த பின்புபடுதாவால் உடனே மறைத்துத் திரும்பிவிட்டனர். ஏன் ஒன்றுமில்லாத இடத்தைக் காண்பித்து ரூபாய் வாங்கினர் என்று கேட்டேன்? இந்த ஆகாய ரூபம்தான் ரகசியத்தின் உண்மை என்றார்கள் என்னவோ அக்காலத்தில் எனக்கு மனதிற்கு விளங்கவுமில்லை அதன் உட்கருத்தை அறிய ஆவலுமில்லை. தகுந்த பரிபக்குவமுமில்லை. இது எப்படி இருக்கினும் இருக்கட்டும் இது என் பிற்காலப் பக்குவ வாழ்வின் அதாவது இப்பொழுது எழுதும் “துரியவெளி அல்லது எனது அனுபவம்” என்னும் சகஜ வாழ்வாம்,

*குறிப்பு : -*

சிதாகாசம் எல்லாவற்றிற்கும் நிலையமானதினால் மனிதப் பிறவி எடுத்தவர்கள் கண்டு தரிசிக்க வேண்டியது இஃதேயெனக் குறிப்பாக உணர்த்தப் பெரியோர்கள் சிதம்பரம் கனக சபையிலும் வடலூர் ஞானசபையிலுமிதனை அமைத்தனர் போலும். சித்-அம்பரம் சிதம்பரம், சித்-ஞானம். அம்பரம்-ஆகாஸம். இதுவே சிதம்பர ரகஸ்யமென்பது.

C C C

## 12. நிருவாண சாமியாரின் நித்திய தரிசனம்

எனது, 5 வயது முதல் 12 வயதுவரையில் எங்கள் வீட்டிற்கெதிரில் சிறு கூரைவீட்டினுள் நிருவாணசாமியார் ஒருவர் தனியேயிருந்தார். அவருக்கு நான் ஆகாரம் கொண்டு போய்க் கொடுப்பதுண்டு ஒருநாள் அவரை தங்கள் பெயர் என்னவென்று கேட்டேன். அவர் “பட்சி” என்றார். அக்காலம் எனக்கு, பட்சி என்றால் விளக்கம் பண்ணிக்கேட்க பக்குவமில்லை, அவர் சங்கற் விகற்பங்களை பட்சித்துப்பட்சிகள் யதேச்சையாய் ஆகாயத்தில் சஞ்சரிப்பது போல் அவர் உளம் இருந்த நிலையில் “பட்சி” என்றார்

என்று இப்போது நினைக்கின்றேன். எனது தாயாரும் நானும் அடிக்கடி அவர் சந்நிதானத்தில் போய் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பது பழக்கம். அவர் நெற்றியில் சதா குங்குமப்பொட்டு காலணா அகலம் அணிந்திருப்பார் அதைக் கொண்டு அவருக்கு அம்பாள் உபாசனையிருக்கலாமென்று நினைக்கிறேன். மேலும் பேசும்பொழுது இரவில் அம்பாளுடன் நிஷ்டாகாலத்தில் பேசுவதாகச் சொல்வார், அவர் குழந்தையைப் போல மழலைமொழிகளில் தான் பேசுவது வழக்கம். அழுகண்ணிசித்தர் பாடலில் முக்கிய பாட்டுகளை பாடிக் காண்பித்து எங்களுக்கு உப தேசிப்பார். "உங்களுக்கு அம்பாள் அருள் செய்வாள்", என சிரித்துக் கொண்டு சொல்லுவார், ஓர்சமயம் என் தலைமீது கைவைத்து ஆசீர்வாதம் செய்திருக்கிறார். அது எந்த நிலையில் ஆசீர்வதித்தாரோ! எனக்கு என்ன வந்ததோ! அது அவருக்கும் கடவுளுக்கும் தான் தெரியும். இவருடைய சமாதி **புவனகிரியைச் சார்ந்த "வத்தராயன்தெத்து"** என்னும் ஊரின் மேல்பால் உள்ளது.

C C C

## 13. துற்பலம் செய்யும் பற்பல எண்ணம்

எனது அறியாத சிறு பருவ காலத்தில் அந்தோ! வடலூர் இராமலிங்கப் பெருமானை நேரில் பார்க்கும் படியான, பேசும்படியான, வணங்கும்படியான அனுக்கிரகம் பெறும்படியான பாக்கியத்தைப் பெறவில்லையேயென விசனிப்பேன். அவ்வள்ளலாரை இதுசமயம் நேரில் கண்டால் தெண்டாகாரமாய் விழுந்து, அவருடைய இரு பாதங்களையும் கெட்டியாய் பிடித்துக்கொண்டு, எனக்கு ஒருவழி சொல்லிவிட்டுப் போங்கள் என விடாக்கண்டனாகக் கேட்பேன். ஆனால் இது முடிகிற காரியமாவென நினைத்து ஆகூலப்படுவேன். எனினும் பரமன் செயல்படி நடக்கட்டுமென நினைத்து மனம் தேருவேன்.

இக்காலம் வீட்டின் வாயிற்படியில் ஓர் வயோதிக சுவாமியார் தலைப்பாகைபோல் தலையில் ருத்ராட்சமும், காதில் நாகபாச ருத்ராட்ச குண்டலமும், கையிலும் கழுத்திலும் நிறைய ருத்ராட்ச மாலைகளையும், விபூதியையும் சர்வாங்கமும் அணிந்து இடதுகையில் சங்கிலிகட்டிய திருவோடு வைத்துக் கொண்டு, வலக்கையால் சங்கிலியை திருவோட்டில் தாளமடித்து "தானே தானே

தானே தானே தானறியவேணுமே" என்று பாடிக்கொண்டு நின்றார். என் தாயார் அத்திருவோட்டிற்கு அரிசி தந்தாள். திருவோட்டில் சங்கிலியால் அடித்துப் பாடியது எனக்கு வேடிக்கையாயிருந்தது. "தானே தானே தானறிய வேண்டு" மென்ற அப்பெரியார் தெருப்பாட்டிலும் வேதாந்தம் விளங்கியது. ஆனால் அது காலம் அச்சொல்லின் பொருளுக்கு அர்த்தம் விளங்கவில்லை இது காலம்.....

C C C

## 14. மாய வாழ்வில் மனத்தில் குதூகலம்

இப்படி உலக நடைக்குள்ள வழியில் என்மனம் சென்றுகொண்டிருக்க, அக் காலத்திற்கேற்ப நான்காவது படித்து பிரைமெரி பாஸ் செய்து சர்டிபிகேட் பெற்றுபின்னர் சிலகாலம் உபாத்திமைத் தொழிலிலிருந்தும், கலியாண பண்டு, மரண பண்டு முதலிய கம்பெனிகளுக்கு ஏஜெண்டாக இருந்தும், அவைகளையும் விட்டு சுமார் பத்துவருடங்கள் வரை போட்டோகிராப் படமெடுத்தல், சித்திரங்கள் வரைதல்; கெடியாரம் ஆர்மோனியம், கிராமபோன், சைக்கிள், மோட்டார் சைக்கிள், மோட்டார், ஆயில் எஞ்ஜின் முதலியன ரிப்பேர் செய்து கொண்டும் இருந்ததல்லாமல் ரப்பர் ஸ்டாம்ப் எங்கிரேவிங் வேலைகள், ஆர்மோனியம் சொந்தமாகச் செய்தல், நாடகங்களுக்கு கால் ஆர்மோனியம் வாசித்தல், மேடையில் பல வேடங்களில் நடித்தல் முதலான காரியங்களிலும் ஈடுபட்டிருந்தேன்.

சில சமயங்களில் வள்ளித் திருமணம், பக்த நந்தன் சரித்திரம் முதலியவைகளை பக்கவாத்தியம்பின் பாட்டுகளுடன் பாகவதரைப் போல காதகாலக்ஷேபமும் செய்தேன்.

### *"தந்தையடைந்த விந்தை"*

இம்மாதிரியான தொழில்களைச் செய்துவரும் நாளில் காசி, இராமேஸ்வரம் முதலிய க்ஷேத்திரங்களை தரிசனம் செய்துவந்த எனது தந்தையார் சிதம்பரம் பிள்ளையவர்களின் தேகம் நழுவ அவரது தகப்பனார் (எனது பாட்டனார்) சமாதி நிலையின் முன்புறம் அவரது சமாதிகிரியையும் முடிந்தது. பின்பு தந்தையார் எனக்கு ஏதேனும் பொருள் வைத்திருப்பாரா? என ஆராய்ச்சி செய்தேன். ஒன்றுமில்லை. ஆனால் இரண்டு இருந்தது. அதாவது பாட்டும் உரையும் கூடிய "கைவல்ய நவநீதம்" புத்தகம் ஒன்றும், இருபக்கமும் யாளிமுக

மமைந்ததும் கருங்காலி மரத்தில் கடைந் தெடுத்ததுமான யோகத் தண்டு ஒன்றும் தான் கிடைத்தன. எனக்கு அஞ்ஞானப் பொருள் வேண்டாம், மெய்ஞ்ஞானப் பொருளையடைய திறவு கோல்தான் கொடுக்க வேண்டும் என்பது கடவுளின் நோக்கம் போலும். வாழையடி வாழையாகக் கிடைக்கத் தக்கதுதான் கிடைக்கும் எனத் தீர்மானித்துத் தெளிந்தேன்.

C C C

## 15. ஞானம் உணர ஞானக்கேள்விகள்

அனுபவமுள்ள பெரியார்களை நாடி, அருட்பாவில் கண்ட **"அருட்பெருஞ் ஜோதி"** கியாஸ் லைட்டைப் போல எத்தனை காண்டில் பவர்கொண்ட வெளிச்சமிருக்கும்? அல்லது எலக்ட்ரிக் டயனமோ வொயர் மூலமாக பல்பில் பிரகாசிக்கும் வெளிச்சத்தில் எத்தனை வாட்ஸ் கொண்ட வெளிச்சமாகவிருக்கும்? அதைப் பார்த்தால் கண்கள் மிகக் கூசுமா? எனக்கேட்டேன். அதற்கவர்கள் இந்தச் சிக்கலான பிரச்னையைக் கேட்டு சிரித்தார்கள். என்ன ஒன்றும் சொல்லாமல் மௌனமாயிருக்கின்றீர்களே என்று விடாக்கண்டனாகப் பேசினேன். அதற்கவர்கள் நீ நினைக்கும் (பேசும்) எல்லா வெளிச்சத்திற்கும் மனம் வாக்கிற்கு மெட்டா அகண்ட மூல வெளிச்சம் அது, பார்க்க உனக்கு கிடைக்கும் என்றார்கள். இது எனது அறியாமைத்தனமான கேள்வியல்லவா?

மற்றோர்சமயம், வேதாந்த சாஸ்திரங்களை வாயினால் சரமாரியாகப் பொழியும் பெரியார் ஒருவரைக் கண்டு உண்மையை உணரவேண்டி அருட்பா மஹாதேவ மாலையிலுள்ள

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர்யோக
ஏறிஞர்மல ரயன்முதலோ ரனந்தவேதங்
களவிருந்துங் கரணாதி யிறந்துஞ் செய்யுங்
கடுந்தவத்துங் காண்பதரிதாங் கடவுளாகி
யுளவறிந்த வெம்போல்வா ருள்ளத்துள்ளே
யூறுகின்ற தெள்ளமுத வூறலாகிப்
பிளவிருந்து பிண்டாண்ட முழுதுந்தானாய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரியதேவே!

"உளவறிந்த எம்போல் வாருள்ளத்துள்ளே ஊறுகின்ற தெள்ளமுதே" என்று சொல்லியிருக்கின்றாரே. அது சித்தர்கட்கும்,

யோகர்கட்கும், அறிவாளிகட்கும். பிர்மா, விஷ்ணு, ருத்திரன் மூவர்கட்கும், தேவர்கட்கும், கருவிகரணங்கள் இறக்கப்பெற்ற தவசிகட்கும், காண அரிதாகவுள்ள கடவுளை, உளவு கண்டுபிடித்த என்னைப் போலொத்தவர்கட்கு வெளிப்படுங் கடவுளே என்கின்றாரே, அது என்ன உளவு, எல்லாம் தெரிந்த தாங்கள் அந்த உளவை எனக்குச் சொல்லி கொடுங்கள் என்றேன், திறு திறு என்று விழித்தார்! அவர் விழித்ததில், இவன் மஹா அதிகப் பிரசங்கி என்று நினைத்ததாகவே தென்பட்டது. யோசித்தார் சரியான விடைகூற முடியவில்லை...... நான் அந்த இடத்திற்கு இன்னும் செல்லவில்லை. எனக்குந் தெரிந்த அளவில் வாயினால் போதிப்பது பழக்கம். ஆனால் நீவிர் கேட்பதோ முற்றும் முடிந்த விடம், தெரிந்த பெரியோர்களைக் கேட்டுத் தெளிந்து கொள்ளுங்கள் என்று சமாதானமாகவே சொன்னார்.

C C C

## 16. ஜல ஸ்தம்பனமும் ஜாலக் காட்சியும்

ஓர் நாள் கடப்பை சச்சிதானந்த யோகீஸ்வரர் எழுதிய புஸ்தகத்தை கண்ணுற்றேன். அதில் ஜலத்தின் மேல் சின்முத்திரை யுடன் காலைமடக்கி பத்மாசனத்தில் படுத்திருப்பது, கால்களை நீட்டிப்படுத்திருப்பது முதலிய போட்டோபடங்களைக் கண்டேன், அதைப் போல் சுமார் இரண்டு தினங்கள் அப்பியாஸித்தேன். பூர்த்தியாயிற்று. இப்படி நாட்கணக்கில் ஜலத்தின்மேல் படுத்திருக் கலாம். ஓர்நாள் ஓர் ஊரிலுருள்ள குளத்தில் ஜலத்தின் மேல் படுத்து பிரேதம்போல மிதந்து கொண்டிருந்தேன். ஜனங்கள் யாரோ ஒரு பெரியவர் ஜலத்தில் நிஷ்டையில் படுத்திருக்கிறாரென, கரையில் ஏராளமான கூட்டங்கூடிவிட்டது. திருவிழா தான்! என்ன பைத்தியக்கார உலகம், பைத்தியக்காரன் வேலையிலுள்ள விசேஷமாவது, நாதஸ்வரக்காரனுக்கும் தவில்காரனுக்கும் பின்னால் விடாமல் தொடர்ச்சியாக ஒரே சத்தமாக ஒத்து ஊதுகிறானே அவன் வேலைதான் அந்த வேலை. அதற்கு வயிற்றில் ஆகாரமில்லா திருப்பதுநலம். வயிற்றில் காற்று இருக்கவும் வேண்டும். விடவும் வாங்கவும் வேண்டும். இ∴து ஓர் பழக்கமாகும். கைகளைப் பின் புறமாக நீட்டுவதில் சமன் எடை (பாலெனசு) இருக்கிறது. சுரைக்குடுக்கைபோன்று மிதக்கவேண்டும். சுவாசத்தை (ரெகுலேட்) அடக்கி சரி பண்ணிக்

கொண்டிருப்பது தான் மிதப்பதற்குக்காரணம். இதை இழிவுபடுத்திக் கூறிய தாக நினைக்க வேண்டாம். எனது அப்பியாசத்தைச் சொன்னேன். மிதப்பில் ஞானம் இருக்காதென்றே நினைக்கிறேன்.

ஓர்நாள் எண்பத்துநான்கு யோக ஆசனங்கள் போட்டுப் பழகும் அடயோகப் பிரதீபிகை புத்தகம் ஒன்று கிடைத்தது. அதன்படி பழக வேண்டுமென்று, எண்ணம் உதித்தது. மறுநாள் சிதம்பரமிருந்து தற்செயலாய் திருவிடைமருதூருக்கு டிரெயினில் போய்க் கொண்டிருந்தேன். அவ்வண்டியில் லங்கோடு கௌபீன தாரியாக சுமார் 15 - வயதுள்ள சிறுவன 84 - யோக ஆசனங்களையும் போட்டுக்காட்டியும் அடிவயிற்றையொக்கி நௌலிபிடித்துப் பம்பரம் போலக் கிறுகிறென்று சுழற்றிக்காட்டியும், கடைசியில் பல்லைக்காட்டிக் கெஞ்சி என்னைப் போல அங்கு உட்கார்ந்திருந்தவரிடமெல்லாம் பைசா காலணாவிற்கு கையேந்தி நின்றான். கொடுத்தோம், பைசா பொறாத இந்த யோக ஆசனங்களைச் சிந்திக்கவே வேண்டாமென அற மறந்தேன். பார்ப்போர் பிரமிக்கும்படி இது பால்ய மிருந்து அவயவங்களை பண்படுத்தி வைக்கும் ஓர் சாதன சர்க்கஸ் வேலையேயாகும். இதில் ஞானம் இருக்காதென்றே நம்புகிறேன். ஆனால் முறைப்படி செய்யும் பல ஆசனப் பழக்கம் நௌலிகர்மம் இவைகளால் நாடி சுத்தியாகிதேகத்தைப் பிணியில்லாமல் வைத்துக் கொள்ளலாம்.

C C C

## 17. மனிதனுக்குள்ள மஹத்துவ சக்தி

மனிதனுக்கு இருதயம் ஒரு டயனமோ (Dianamo) போன்றது. அதிலிருந்து இடைவிடாமல் (கரண்டு) சக்தி வந்துகொண்டிருக்கிறது. அந்த சக்தியை நாம் வாயால் பேசுவதற்கும் கையால் எழுதுவதற்கும், காலால் நடப்பதற்கும், கண்ணால் பார்ப்பதற்கும் மனத்தினால் நினைப்பதற்கும், இன்னம் பற்பல விதமாக செலவழிக்கிறோம். இதிலொரு பெரும் பிசகு செய்கிறோம். அதாவது காரணமின்றி கைகால்களை அசைத்தல், வீண் வார்த்தைகளைப் பேசுதல், பிரயோஜன மற்ற, கவைக்குதவாத வீண் எண்ணங்களை எண்ணுதல் ஆகிய பலதுறைகளில் மின்சார சக்தியை வீணாக்குகின்றோம் ஆகவே. ஞானப்பியாசி முக்கியமானவைகட்கு மாத்திரம் அதற்கு

சக்தியை உபயோகித்து, மிகுதி சக்தியை மூளையில் அடக்கம் பண்ணினால் இணையில்லாத ஆபூர்வமான வேலைகள் செய்வதுடன் இதனால் ஆண்டவன் அருளையும் எளிதில் பெறலாம். அவ்வருளே கிடைக்குங்காலத்தில், மற்றவை எல்லாம் அவ்வருளுக்கு உட்பட்டவைகளே! அவன் நினைத்தால் எல்லாம் முன் வந்து நிற்கும்! இத்தைரியத்தினால் தான் என்னப்பன் வள்ளற் பெருமான் **"எண்ணிய நான் எண்ணிய வாறு எனக்கருளும் தெய்வம்'** என்றார். இதை சிந்தித்துப் பாருங்கள்.

## 18. உற்றுப் பார்த்தால் உள்ளது வெளிச்சம்

**இ**ப்னாடிஸம் மெஸ்மெரிஸம் மனோவஸ்ய சாஸ்திரம் என்று சொல்லும் புத்தகம் ஒன்று (அப்பியாசம் செய்யப் பிரிண்ட் செய்த சக்கரத்தின் படத்துடன்) முதன்முதலில் கிடைத்தது. அதில் சொல்லியபடி நிலைக்கண்ணாடியில் உருவத்தின் கண் கருவிழிகளின் மத்தியில் தோன்றும் நமது பிரதிபிம்ப சூட்சுமச்சாயலை உற்றுப் பார்த்துப் பழகினேன். இப்னாடிஸ சக்கரத்தின் மத்தியிலுள்ள புள்ளியையே நோக்குவது, கண்மூடி புருவ மத்தியில், ஓர் சிறு வெள்ளை அல்லது கருப்பு புள்ளி இருப்பதாகப் பாவித்து ஊன்றி நிற்பது, ஆகிய இம்முறையிலும் ஈடுபட்டுப் பழகினேன்.

C C C

*ஆரம்ப ஞானாப்பியாசிக்குரிய*

## மனோ வஸ்யச் சக்கரம்



*குறிப்பு* : எனக்குப் பின்புறமாக வெளிச்சமுள்ளவிடத்தில் முன்பக்கம் சுவற்றிற்கு சுமார் இரண்டரையடி தூரத்தில் இந்தச் சக்கரத்தின் நடுமையம் புருவத்திற்கு நேரே அமையும்படி அமைத்து, அதிலுள்ள சிறு வெள்ளைப் புள்ளியையே கவனித்து, ஒரே சிந்தனையாக ஊன்றிப் பார்த்தேன். நேரம் ஆக ஆக அப்புள்ளி நட்சத்திரமாக மாறியது. மேலும் தொடர்ந்து நோக்கினேன். அச்சிறு நட்சத்திரமே நேரம் ஆக ஆக பெரிய சந்திரன் போலாகி மேலும் அவ்வொளி வடிவமே அளவுகடந்த பெரியதாகி மனதின் செயலற்று உட்கார்ந்திருக்கும் இடம், வெளிச்சம், தேகம் முதலியவை மறந்த, மனம் அந்தர் முகத்திற்குச் சென்றுவிட்டது. மத்தாப்பு வெளிச்சம்

---

போன்ற ஒரே ஒளி தவிர வேறொன்றும் தோன்றவே இல்லை. இது மனோலயத்திற்குச் சரியான எனது அனுபவ வழி.

*அனுஷ்டான முறைகள்:* மிதமான காற்றுள்ள சுத்தமான தனித்த அறை. அன்னியர்கள் அங்கு பிரவேசித்தல் கூடாது. ஆசன பலகையில் வெள்ளை வஸ்திரம் மடித்து அதன்மேல் சுகாசனத்தில் அமர்தல். உட்காருமுன் மன அமைதியைக் கொடுக்கும் தசாங்கப் புகை பரிமள வத்தி உபயோகித்தல் நலம், **பிரார்த்தனை,** எல்லாம் வல்ல தனித்தலைமைக் கடவுளே! நீயே கதி, என் மனம் அடங்கும் நிலையையும், உம் உண்மை நிலையையும் சித்தியும் எனக்கு அருளுக என்று பிரார்த்தித்து நோக்கிப் பார்க்கவும்.

C C C

## 19. மெய்ஞ்ஞான விருப்பும் அஞ்ஞான வெறுப்பும்

**ஆ**ச்சரியமாக எனக்குத் திடீரென்று உலகத்தில் மிகுந்த வெறுப்பும், விவஹாரங்களில் மிகுந்த கசப்பும், இதை விடுவிக்க சீக்கிரம் முயற்சி செய்ய வேண்டுமென்று அதிக ஆவலும் உண்டாயின. இனி இல்லறத்திலேயே இருக்கக் கூடாதென்றும், பெரியவாளிடம் காஷாயம் வாங்கிக் கொள்ள வேண்டுமென்றும், சாஸ்திர விதிப்படி இருக்குமிடத்திலிருந்து 200 மைல்களுக்கப்பால் செல்ல வேண்டுமென்றும் அப்படி சென்றால்தான் சொந்தக்காரரின் பந்தம் வாராதென்றும் ஏதேதோ கருதினேன். எனது தந்தையார் காலமானபின் அக்குடும்ப பாரம் என்னைத் தாக்கியது. ஞானபாரம் ஒரு பக்கம் தாக்கியது. தம்பிக்கோ உலக நடைக்கு வேண்டிய அறிவு போதாது. எங்களிருவரையும் பெற்ற தாயாரோ பேதை. நாங்கள் இருவர் உதிக்குமுன்னம் பிள்ளையில்லாக் குறையால் அம்மான் மகன் ரத்தினம் என்பவனை ஸ்வீகார புத்திரனாக எடுத்து வளர்த்தாள். அவன் ஒரு காட்டு மிருகம். இந்நிலையில் நான் குடித்தனத்தைவிட்டு வெளியேறினால் மற்றுமுள்ளவர்கள் கதி அதோகதிதான். தாயைத் தள்ளி விட்டுப்போக மனம் வரவில்லை. தாய், தம்பி விதரணை யில்லாமல், நிலம் இருப்பதை யொழித்துப் பின்னால் அன்ன வஸ்திரத்திற்கு கஷ்டப்பட்டால் என் செய்வது? இதற்கோர் ஒழுங்கு பண்ணி நாம் எங்கேனும் துறவியாய் விடலாம் எனத் தீர்மானித்தேன்.

எனது பங்காளியிடம் ஒரு அறிக்கையிட்டேன். அதாவது "இப்பொழுதிருக்கும் (4 காணி நிலங்கள், வீடு, தோட்டம், மாடு இவைகள்) ரூ. 5000, பெறக்கூடிய சகல சம்பத்தையும் செட்டில்மெண்ட் மூலமாக இனாம் சாசனம் செய்கிறேன், எங்கள் காலம் வரையில் அன்னவஸ்திரம் அளித்தால் போதும்" என வார்த்தைவிட்டேன். இதற்கு எனது தாய் தம்பிகள் ஒப்பமாட்டேனென்றார்கள். நாங்கள் இருக்கும் காலம் வரையில் இயல்பில்லாவிடில் நிலங்களை விற்றேனும் சாப்பிடுகிறோம். உனக்குப் பிரியமில்லாவிடில் உன் வேலையைப்பார் என்றனர். அவர்களுக்கு இதமாக வேண்டிய புத்திமதியைச் சொன்னேன், **வாழைப்பழம் வேண்டாமென்னும் குரங்கு உண்டா?** எனது பெரிய தகப்பனார் குமாரர் வைத்தியநாத பிள்ளை 40-ரூபாய்க்கு பத்திரம் வாங்கிவர, சகல சொத்துக்களையும் செட்டில்மெண்ட் மூலமாக ரிஜிஸ்தர் செய்து கொடுத்துவிட்டேன். இனியெனக்கு குடும்பபார மென்பதில்லை நிலம் வீடென பந்தம் இல்லை நிம்மதியானேன். இனி நான் செய்யப்போகும் வேலைக்கு போராடும் குந்தகமில்லை. இதுவும் பகவான் திருவருட் சம்மதம் போலும்.

இப்படி குடும்பபாரம் முடிவு பெற்றது. ஊரெங்கும் செய்தி பரவிற்று, என்னைப் பார்த்து யாவரும் பரிகாசம் செய்ய ஆரம்பித்தனர். "என்ன அறிவில்லாப் பைத்தியமானாய்! இப்படிக்கூட உலகத்தில் உயிருள்ளபோதே சர்வ சுதந்திரமாக ஒருவருக்குக் கொடுப்பார்களா? நாளைக்கு உங்கட்கு சாஸ்வதமாக சாதிப்பார்கள் என்பது என்ன நிச்சயம்? தொலைந்தவன் நீ தொலைந்தாலும் பாக்கி இருக்கிறவர்கள் வைத்துக் கொண்டிருக்க மாட்டார்களா? படுபாவி கெடுத்துவிட்டாயே! அவர்கட்கென்று சொத்திருந்தால் தான் அந்தியகாலத்தில் கௌரவமாக காப்பாற்றுவார்கள். முன்னதாகக் கொடுத்துவிட்டால் மதிப்பார்களா?" இப்படி என்னென்னவோ வசை மொழிகளைக் கூறினார்கள். பிற்காலத்தில் ஷை வைத்தியநாத பிள்ளை, செட்டில்மெண்டு பத்திர ஷரத்தின்படி நடந்து கொள்ளாமல்..... நடந்தார் எப்படி இருக்கினும் இருக்கட்டும்.

C C C

---

ஆஸ்தியுள்ளவன் ஆஸ்திக்கு அடிமை

## 20. தலைவனைக் காணத் தந்திர முறைகள்

முதலில் ஆரம்ப அப்பியாசத்தில் வெளியில் வரும் சப்தம் என் மனதைக் கலைத்து விடுமென்று பஞ்சை விளக்கெண்ணையில் தோய்த்து இருகாதுகளிலும் வைத்து மூடி, உண்ணோக்கி யிருந்தேன். இது எனது அறியாமைத்தன மல்லவா?

இருகாதுகளிலும் இரண்டு ஆள்காட்டி விரலால் உட்செலுத்தி அழுத்திமூடி ஆங்கு உள்ளே உண்டாகும் சமுத்திர இரைச்சலையே இடைவிடாது அநேகநேரம் ஊன்றிக் கேட்டுக் கொண்டிருப்பேன். (இதை நாதாந்த யோக மென்பார்கள்).

ஆரம்ப காலத்தில் மணியடிக்கும் கடிகாரம் பக்கத்தில் அமைந்திருந்தேன், ஏனெனில் இரவில் கண்மூடி ஒருமணி நேரம் உட்கார்ந்திருந்தால் மணி ஓசை இல்லாவிடில் ஒன்பது மணி நேரம் உட்கார்ந்து விட்டதாக மனம் பிரமிக்கின்றது. ஆகையால் மனம் மலைக்காதிருக்க மணியடிக்கும் கடிகாரம் பக்கத்தில் வைத்துக் கொண்டேன். காற்றை ரேசித்துக் கும்பித்துப் பூரிக்கும் வாசியோகம் முதலியவை கூடாதென்பது எனது வைராக்யம். அதனால் ஏதோ சிலருக்கு நன்மையும் சிலருக்கு பிராண ஆபத்தும் நேர்ந்திருக்கிறதாக கேள்விப்பட்டிருக்கிறேன். மனமென்றாலும், ஜீவனென்றாலும், பிராணனென்றாலும், மாயையென்றாலும், அவித்தை யென்றாலும் ஒன்றே. ராஜயோகமே சிறந்ததென விருப்ப முண்டாகியது. யோகமில்லாமல் ஞானம் வாரா.

ஓர் சமயம் கண் மூடியிருக்கும்போது, என்னென்ன விச்சித்திரங்கள் நம் முன்னே நடக்கின்றன? நடப்பன நடக்கட்டும், எதுவரையில் நடக்கும் பார்க்கலாமென்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

எனது ஆரம்ப அப்பியாச காலத்தில், ஒரு தடவை தியானத்திற்கென ஆரம்பித்தால், ஒரு முகூர்த்த காலத்திற்குக் குறைந்து செய்தால் பயன்படாதென அடிக்கடி நினைப்பதுண்டு.

இராமகிருஷ்ண பரமஹம்சர் உபதேச ரத்னமாலையில் ஓர் வசனம் ஞாபகத்திற்கு வந்தது. அதாவது சுத்த மாயையேயில்லாத ஒருவன், ஒரு முகூர்த்த காலத்திற்கு மேல் இல்வுலகில் ஜீவித்திருக்க முடியாது. ஒரு முகூர்த்தமென்பது மூன்றே முக்கால நாழிகை,

மணிகணக்கில் ஒன்றரை மணி நேரம். இந்த ஒன்றரை மணி நேரமும் மனதை அசையாமல் வைத்தால் அற்புத மறுவுலகம் கிடைக்குமென திடமுண்டாகியது. எனக்கு சுமார் வயது இருபது அக்காலம் சிறிதளவு உண்முகப் பயிற்சியும் உண்டு. அவ்வயதுக் கேற்றபடி தலைநிறைய குடுமி மயிர் உண்டு. அதற்கு சுத்துக்குடுமி, முன்வெட்டு, பின்வெட்டு, அலங்காரங்களெல்லாம் உண்டு. அடர்ந்து அடித்து நீண்ட கரிய தலைமயிரை அவிழ்த்துவிட்டால், இடுப்பிற்குக் கீழ் தாரளாமாய் வந்து விழும், அது காலம் சிதம்பரத்தில் போட்டோ கிராபர் எனது நண்பர் ஊ.ஆ. நாராயணசாமி செட்டியாரிடம் நான் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்போது வடலூர் இராமலிங்க சுவாமிகளின் நேர் மாணவர்மாயவரம் டாக்டர் ஷண்முகம் பிள்ளை யென்பாரொருவர் என்னைப் பார்த்ததும் அவருக்கு எப்படி யிருந்ததோ உட்கார்ந்திருந்த அவர் எழுந்து, என் குடுமிக்கு முன் அழகுபடுத்த கத்திரித்துவிட்ட நீண்ட அம் மயிரை தன் கையினால் பிடித்து முன்னும் பின்னும் மூன்று நான்கு தடவை ஆட்டி, "என்ன இது", என்று பரிகசித்தார்! ஆகவே எனக்கு வெட்கம் ஒருபக்கம், ஆத்திரம் ஒருபக்கம், பீதி ஒரு பக்கம், நான் சமாளித்துக் கொண்டு சுவாமி என் தலைமயிரைப் பார்த்தீர்களே தவிர என் மனதைப் பார்க்கவில்லையே? யென்று சொன்னவுடன் தலைமயிரை ஆட்டின கையை யெடுத்துவிட்டு வெலவெலத்து நின்றுவிட்டார். பின் என் நண்பர் செட்டியாரை இவர் யாரென்று வினயமாய் பணிவுடன் கேட்டேன். அதற்கவர் வடலூர் இராமலிங்க சுவாமிகளின் மாணவர் என்று விபரமாய்ச் சொன்னார். பின்பு நான் அதிகப் பிரசங்கித்தனமாய் பேசியதற்கு மிகவும் விசனித்தேன். அன்றுடன் அச்சிகையலங்காரத்தையும் தொலைத்தேன்.

C C C

## 21. நடக்கும்போதும் மனத்தை அடக்கும் பழக்கம்

ஓர்நாள் மாலை, நடந்துகொண்டிருக்கும்போது, மனதை நிறுத்திப் பழக்கவேண்டுமென்று எனக்கு அவாவுண்டாயிற்று. இதற்கு மாலை நான்கு மணிக்கு மேல் ஆறு மணி வரையில் தகுந்த காலமெனக் கொண்டேன். சென்னையிலிருந்து கும்பகோணம் செல்லும் 9-நெ. ட்ரங்ரோட் எங்களூர் மத்தியில் போவதால், அந்த ரோட்டில் பெரிய மைல்

கல்லுகளும், அதற்கிடையே பல பர்லாங்கு கல்லுகளுமுண்டு. அதில் ஓர் கல்லிலிருந்து பல பர்லாங்கு கல்லுகளுமுண்டு. அதில் ஓர் கல்லிலிருந்து மற்றோர் கல்லிற்குப் போய்ச்சேர, பிரயத்தன பூர்வமாக நிதானித்து மனதை உண்முகத்தில் இருதயத்தில் திருப்பி, அப் பார்வையுடன் மூச்சை தம்கட்டின மாதிரி நிலையில், ஓர் நினைவும் உதிக்காமல் அடிமேல் அடி வைத்து அடுத்த பர்லாங்கு கல் போய்ச் சேர்வேனாயின் எனக்கு ஞானம் கிடைத்துவிடும் என நினைத்து, மனதில் சந்தோஷிப்பேன். இப்படி தினந்தோறும் பழகும்போது, சைகிளை முதலில் விட கற்றுக் கொள்ளும்போது பாலென்சு எடுப்பதிலும் ஏறி விடுவதிலும் பலதடவை தவறுவது போல் அநேக தடவைகள் என்னை அறியாமல் எண்ணங்களில் தவறி விழுவேன். மீண்டும் மீண்டும் விடாமுயற்சியுடன் மூச்சடங்கின மாதிரி தம் பிடிப்பதுபோல, நிதானமாக நடந்து, சில மாதத்தில் ஒரு மைல் கல்லிலிருந்து மற்றோர் கல் போய்ச் சேரும்வரையில் ஓர் எண்ணமும் உள்ளே புகவிடாது வெற்றி பெற்றேன். ஞானமடைந்து விடுவேன் என்பதாக எண்ணுவேன். இது பகிரங்க வேலையல்ல. அந்தரங்க வேலை. இது எனது அப்பியாசம்.

C C C

## 22. ககனக் காட்சியில் மாமனம் தகனம்

**சி**லநாள் மாலை நேரம், இரவு பகல் சிந்திக்குங் காலம், அரை மணி நேரம் கயற்றுக் கட்டிலிலோ, தரையிலோ, தலையணையுடன் சுகமாகப் படுத்துக்கொண்டு, மாசி மப்புகளற்ற வெறும் ஆகாயத்தைப் பார்ப்பேன். மனதில் எண்ணங்களற்று சுத்த வடிவமாக யிருப்பேன், இது பிற்கால துரியநிலை வாழ்க்கையாகிய தெய்வக்காட்சிக்கு மிக்க அனுகூலமாயிற்று.

C C C

## 23. மாதவமடைய ஆதவன் பழக்கம்

**பி**ன்னலூரில் எங்கள் தெருக் கோடியில் சுமார் இருபது அல்லது இருபத்தைந்து அடி உயரமுள்ள வாலாஜா ஏரிக்கரை ஒன்று உண்டு. அக்கரை சுமார் இரண்டு மைல் நீளமிருக்கும். அந்த உயரமுள்ள கரையில் சௌகர்யமான இடத்தில், சூரியன் உதிக்கும்போதும்,

அஸ்தமன காலத்தும், உட்கார்ந்து, பத்து நிமிஷங்கள் வரை. வானத்தின் இயற்கையழகுக் காட்சிகளையும் பின்பு சூரியனையும் உற்று நோக்கி உறுதியாகப் பார்ப்பேன். மனம் நிம்மதியாயிருக்கும். சூரியனின் எழில் மங்கி மறையும் வரையில் பொழுது போக்குவேன். இம்முறை காலந் தவறி உக்ரமான வேளைகளில் பார்த்துப் பழகுதல் கூடாது,

C C C

## 24. மங்களமாகத் திங்களைப் பார்த்தேன்

**மு**க்கால் அல்லது முழுச் சந்திரனாக யிருக்குங் காலம், உச்சியிலிருக்கும் போதும், உதய அஸ்தமன காலத்தும், மனம் சங்கற்ப விகற்பமற, சந்திரனைக் கண் குளிரப் பார்த்து பரவசப் பட்டிருப்பேன்.

C C C

## 25. கணபதி முன்பு கதறியழுதது

**எ**னது குறைகளை (பின்னலூருக்கு வடக்கே ஒரு மைல் தூரத்திலுள்ள) கரைமேட்டுப் பிள்ளையாரிடம் நேரில் தெரிவித்தால் குறைகள் நீங்குமென்று தைரியம் உண்டாயிற்று. வேண்டிய வரத்தைக் கொடுக்கும் அப்பிள்ளையாரிடம் பகல் மூன்று மணிக்கு. ஏகாந்தமாக நேரில் சென்று கண்ணீர் ஆறாகப் பெருக நின்று "மஹா கணபதே, விநாயகப் பெருமானே, ஔவையார்க்கு அருள் கொடுத்த ஆதிமூலமே, பிரணவப் பெருமானே, இவ்வுலக சுக துக்க கஷ்ட நஷ்டங்களால் அலுப்புண்டு, மனம் வெம்பித் துயரடைந்து, எவ்வளவு நாளைக்குத் துக்கப்படுவேன், தேவரீரை சதா நினைத்துள்ள அடியேனுக்கிந்த விசாரம் வரலாமா? ஏன் இப்படி பராமுகமா யிருக்கின்றீர்? பக்தியில்லாத பகல்வேஷக் காரனென்று நினைத்தீரோ? இப்படி விசாரப் படுதவற்குத்தான் என்னை மனிதனாப் பிறப்பித்தீரோ? அந்தோ! கொடுமை! நான் ஏன் பிறந்தேன்? நான் கற்ற கல்வி யெல்லாம் கதையாய் முடிந்ததோ? கேட்ட கேள்வியெல்லாம் கேடாய் முடிந்ததோ நான் அறிந்த அறிவெல்லாம் அவலமாய்விட்டதோ? தெளிந்த

தெளிவெல்லாம் தீங்காய்விட்டதோ? நீதியில்லையே, நெறி யில்லையே'', என்று இங்கு எழுத முடியாதளவு பலவாறகப் புலம்பிக் கண்ணீர் மாலை மாலையாய் சொரிய மாடுபோல் கதறி ஹோவென்று அழுவேன். ஐயோ இப்படிப் புலம்புவது யாருக்கேனும் தெரிந்தால் பைத்தியக்காரத் தனமாகுமே யென்று நினைத்து அம்மேட்டுப் பாங்கை விட்டுப் பக்கத்திலுள்ள விழல்வெளி மைதானத்தில் தனியாக வேண்டிய வரையில் அழுது பின்பு வீடு திரும்புவேன். இப்படிச் சுமார் மூன்றுமாத காலம் நடந்தன.

மேலும் எனக்குப் பிரதி பந்தமாகவிருக்கும் சகலத்தையும் சீக்கிரம் ஒழிக்கவேண்டுமென்று நினைத்தேன். அப்படியே ஒழித்தேன்.

மிகுந்த நூல்கள் கற்பதற்கு நாட்கள் போதாவென்று வசன நடையிலுள்ள கைவல்லியம், ஞானவாசிஷ்டம், சசிவர்ணபோதம், பகவத்கீதை, ஒழிவிலொடுக்கம், ஆத்ம புராணம், ரிபுகீதை, முதலியவைகளை சங்கிரகமாக சந்தேகநிவிருத்திக்குப் பார்த்தேன். பின்பு மிக்க அனுபவமுள்ள ஓர் பெரியார் வேண்டுமென்றும் அன்னார் வாயிலாக உண்முக அந்தரங்க வேலைகளின் சந்தேகங்களை நிவிருத்தி பண்ணிக் கொள்ள வேண்டுமென்றும் ஓர் எண்ணம் உதித்தது.

C C C

## 26. ஈசனைப் பிடிக்க ஈசற் காட்சி

ஓர்நாள் அதிகாலையில் ஆறுமணிக்கு பின்னலூர் ஏரிக்கரை வழியே போய்க்கொண்டிருக்கும் போது கரை ஓரத்தில் புற்றில் ஒருவன் ஜலமுள்ள ஒரு பாத்திரத்தை இடக்கையில் வைத்துக் கொண்டு வலக்கையால் புற்றின் துவாரத்திலிருந்து வரும் ஈசல்களைப் பிடித்துப் பிடித்து ஜலத்தில் போட்டுக் கொண்டிருந்தான். இப்படி துவாரத்திலிருந்து வர வர எல்லாவற்றையும் பிடித்து காலை பத்து மணிக்குள் வேலை முடித்தான். இதை நான் சமீபமிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். நாழி ஆக ஆக மேற்கொண்டு புற்றில் ஈசல் இல்லாமையால் வேலை முடிவடைந்த்து.

எனக்கு இதைப் பார்த்தவுடன் உள்ளமெனும் புற்றிலிருந்து வரும் எண்ணமென்னும் ஈசலைப் பிடிக்க அவாவுண்டாகியது. அன்று

---

காதற்ற ஊசியும் வாராதுதான் கடை வழிக்கே

மாலையே ஆறுமணிக்கு உட்கார்ந்து கண்மூடி, அவனைப் போலவே கண்ணுங் கருத்துமாக உள்ளமென்னும் துவாரத்தை நோக்கி மனமென்னும் ஈசலைப் பிடித்து, மௌனமென்னும் ஜலத்தில் போட்டு பத்து மணி வரையில் காத்திருந்தேன். உள்ளமென்னும் புற்றில் நாழி ஆக ஆக எண்ணமென்னும் ஈசல் இல்லை போலும்.

நாசிக்கு அதோமுகம் பன்னிரெண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லீரேல்
மாசித்தி யோகம் வந்துதலைப் பெய்தும்
தேகத்துக் கென்றும் சிதைவில்லை யாமே.

(திருமூலர் – திருமந்திரம்)

C C C

## 27. அகிலத்தை ஏமாற்ற அதிசய எண்ணங்கள்

நான் ஓர்நாள் ஏகாந்தமாகயிருக்கும்போது மனம் எண்ணியமனோ மாயக் கோட்டையாவன: தலை நிறைய மயிர் வளரச் செய்து, அதில் நிறைய சடை வளர்த்து, சடாமுடிதாரியாயும் நிலையங்கி காஷாய உடையணிந்தும், மூன்று காலம் விடாது ஸ்நானம் செய்தும், கை விரல்கள் பத்திலும் ஆறங்குல நீளம் நகங்களை நேராகவும், முறுக்காவும் வளர்த்து தனிமையாக குகைகளில் இருந்து கொண்டும்; ஆகாராதிகளை விட்டு பால், பழம், கிழங்கு வகைகளை மாத்திரமே சாப்பிட்டும்; காதிற் கவச குண்டலமணிந்து உருத்ராட்சங்களைக் கழுத்திலும், தலையிலும், கைகளிலும், முழங்கைக்கு மேல் முண்டாக்களிலும், நிறைய அணிவித்தும்; கையில் தண்டு, கமண்டலம் பிடித்தும், காலில் குமிழிக் கட்டைமேல் நடந்து கொண்டும், ஊமையைப் போலிருந்து புலித்தோல், மான்தோல் ஆசனங்களிலமர்ந்தும், பார்த்தோர் பிரமித்து பயந்து பாதத்தில் விழுந்து நமஸ்கரித்துப் போகும் நிலையிலுள்ள படாடோப பயங்கரச் சாமியாராகவும், பின்னர் சிலகாலம் கழித்து உடைகோவணம் ஒன்றுமே இல்லாமல், நிர்வாணமாகவே திகம்பரமாக சஞ்சரிக்க வேண்டுமென்றும், அகங்கார ஜீவன் முக்தராக விளங்க வேண்டுமெனவும் ஆசை தூண்டிற்று. மேலும் தினம் ஒருபடி விபூதியை பாதாதி கேச பரியந்தம் விடாது பூசிக் கொண்டும் இருந்து நிலவ பலவாறான என்னென்னமோ சிந்தையில் எண்ணி மனோராஜ்யம்

செய்து ஆரம்ப ஞானப்பியாச காலத்தில் சங்கல்பத்தை ஒழிப்பதற்காக தியானத்திலமர்ந்த நான் இடைவிடாமல் மனோ கற்பித சங்கற்ப விகற்பத்திலாழ்ந்து, மிதந்து ஊசலாடுவேன்.

இந்தச் சிந்தனைக் கிளர்ச்சியில் என் ஆன்ம மனத்துடன் போராடியபோது எனது ஆன்ம மனம் மாயா ஜாலத்தில் மயங்கும் பேய் மனதைக் கேட்டதாவது;

தலை நிறைய மயிர் வளரச் செய்வதினால் அதில் மோட்ச மடைய சாதக மிருக்கிற்தாகக் கருதுகிறாயே, ஐந்தறிவு மிருகங்களில் கரடி, கவரிமான், குரும்பாடு முதலியன சடைசடையாய் மயிர் வளர்த்திருப்பதினால் மோட்சமடைந்திருக்கிறதா?

காஷாயம் அணிய ஆசைப்பட்டாயே தெருவில் பிச்சை எடுக்கும் பரதேசி கூடத்தான் காவி அணிந்துள்ளான் அவன் மோட்ச மடைந்ததாகக் கேள்விப்பட்டாயா? மேலும் மூன்று காலமும் விடாமல் ஸ்னானம் செய்வதினால் மோட்சம் வந்துவிடும் என நினைத்தாயே தண்ணீரிலேயே வசிக்கும் தவளை, மீன், பாம்பு இவைகளைப் பற்றி என்ன நினைக்கிறாய்?

கை விரல்களில் அங்குலக் கணக்கில் நகம் வளர்க்க ஆவல் படுகிறாய் ஆனால் மனிதக் குரங்கு, புலி, சிறுத்தை முதலியன நகம் வளர்த்துள்ளனவே அவை மோட்சமா அடைந்தன?

குகைகளில் நரிமுதல் சிங்கம் வரை வசிக்கின்றன அதனால் அவை மோட்சத்தையாவது கேள்விப்பட்டிருக்குமா? நீயும் மிருகம்போல் குகையிலிருக்கப் பிரியப்படுகிறாயே! நீ பால், பழத்தை மாத்திரமே தின்பதாக வைத்துக் கொள்வோம் நீயே சோற்று ஆகாரமே கிடைக்காத சில அசந்தர்ப்பமான இடங்களில் பாலும், பழத்தையும் சிலகாலம் சாப்பிடும் படி நேர்ந்தால் மோட்சம் கிடைத்துவிடும் என்ற எண்ணமா? அல்லது சிறு குழந்தைகள் பாலையும், பழத்தையும் சாப்பிடுகிறதே அதனால் அவைகளுக்கு உடனே மோட்சமா?

காதில் கவச குண்டல ருத்திராட்ச படாடோபங்களை யணிந்து போலிச் சாமியாரைப் போல் விளங்க ஆசைப்படுகிறாய் அதனால் அந்த போலிச் சாமியாருக்கோ, அதை யணியும் உனக்கோ மோட்ச வாசனையே அடிக்காதே! தெரியுமா? மூட மனமே! மீண்டும் கேள். வாய் பேசாமல் மௌனமாக அமர்ந்துவிட்டால் மோட்சம் கிடைக்காது. அப்படி

---

தன் குற்றம் உணரான் பிறர் குற்றம் கூறுவான்

நீ நினைத்தால் பிறவிலேயே ஊமையா யிருப்பவர்களுக்கு மோட்சம் கிடைத்திருக்க வேண்டுமே! அத்துடன் அல்லாமல் நிர்வாணமாக இருக்கப் பிரியப்படுகிறாய், இதை வெளியே சொல்லாதே நீ நிர்வாணமாய் மிருகங்களைப் போலிருந்து பார்ப்பவர் மனம் கூசும் நிலையில் இருந்துதானா மோட்சம் அடைய வேண்டும்? அதுவும் நாட்டு வாழ்க்கையிலிருந்து கொண்டா?

விபூதியை மேலெல்லாம் பூசிக் கொண்டால் ஞானவானாக ஆகிவிடலாம் என முட்டாள் அர்த்தம் செய்கிறாய். விபூதிக்குச் சமதியாயுள்ள சாம்பல் மேட்டில் நாய் கிடந்து உழன்று வருகிறதே அது ஞானசக்தி உடையதாக ஆகிவிடுமா?

இவைகளெல்லாம் பார்க்கப்போனால் நீ உலகத்தையே ஏமாற்றும் பெரிய போலிச் சாமியாராய் விளங்க ஆசைப்படுகிறாய் போலும். வேண்டாமப்பா! சுத்த மனதும் ஒன்று பட்ட ஞான ஊக்கமும் போதும் வேறு எதுவும் வேண்டாம் எனப் பலவகையாகப் போராடி என்னை நல்ல நிலைக்கே கொண்டு வந்துவிட்டது.

C C C

## 28. நான் பிறந்திருந்தால் ஏன் பேசமாட்டேன் ?

நான் இந்தியாவில் பிறந்திருந்தால் தாய் நாட்டில் மதிப்பை வைத்து இந்தியாவே உயர்வான தென்றும், பண்டைய கால இலக்கிய நாகரீக கலை வளர்ச்சிக்கு இடமான வளம்பொருந்திய நாட்டில் பிறந்த தமிழன் என்று சிறப்பித்துப் பேசுவேன். மேலை நாட்டில் பிறந்திருந்தால் இக்கால நாகரீகத்திற்கும், வருங்கால நாகரீகத்திற்கும், முன்னேற்ற திற்கும் வேண்டிய சாதனங்கள் அடங்கிய இடமெனவும் காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்காமலே (பல் விளக்காமல்) காபி சாப்பிடுவது தான் நிலையான நாகரீகம் என்று சிறப்பெய்திக் கூறுவேன்.

நான் பிராமணனாய்ப் பிறந்திருந்தால் அந்த ஜாதியை உயர்வு என்றும், பிராமண ஜாதியினால் தான் பிரம்மத்தை அறிய முடியும் என்றும், மற்றவர்களால் அறிய முடியாதென்றும் இறுமாந்து கூறுவேன்.

நான் க்ஷத்திரியர்களில் ஒருவனாகப் பிறந்திருந்தால் நாட்டின் வெற்றிக்கும், வீரத்திற்கும் காரணமாயுள்ளது போர் தான் என்று சிறப்பித்து மொழிவேன்.

---

நான் வைசியனாகப் பிறந்திருப்பின் நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்கான வாணிபமே சிறந்ததென சொல்லுவேன்.

நான் ஒரு சில கூட்டத்தாரால் அழைக்கப்படும் ஓர் சூத்திரனாகப் பிறந்திராவிட்டால் உலகம் உய்வதற்கு வேறு வழியே இல்லை என்றும்; பிறந்திருந்தால் "பார் முழுதும் ஏர் முனையிலே" என்றும் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்லுவார்" என்ற வள்ளுவர் வாக்கைச் சொல்லியும் "உழவனுக்கு நிகர் அரசனும் இலை" என மெய்ப்பிக்கவே நான் பிறந்தேன் ஆகவே எனது குலமே உயர்ந்தது என மெய்ப்பித்துக் கூறுவேன்.

நான் சிவ மதத்தில் பிறந்திருந்தால் சிவமதமே உயர்வென்றும் சிவன் அன்னியில் கடவுள் இல்லை என்றும் வாதிப்பேன்.

நான் வைஷ்ணவ மதத்தில் பிறந்துவிட்டால் விஷ்ணுவே உயர்வானவர் என்றும், அவரைத் தவிற மற்றயர்களால் உலகத்தை இரட்சிக்க முடியாது எனவும் வீரம் பேசுவேன்.

நான் பௌத்தமதத்தில் பிறந்திருந்தால் ஜீவகாருண்யமே உருவான புத்தர்தான் தலைவன் என்றும், வேறு எந்த மதமும் இவ்வளவு தெளிவாக ஜீவகாருண்யத்தைப் போதிக்க வில்லை என்றும், இவ்வற நெறியைத் தவறி பிறநெறியிற் சென்றால் உலகம் உய்யாது எனவும் எடுத்துரைப்பேன்.

நான் ஜைன மதத்திடையே ஓர் ஜைனனாகப் பிறந்திருப்பின் அம் மதத்தைப் போல் சுத்தநெறி வழுவாத துறவறத்திலிருந்து ஞான மார்க்கத்தை மேற்கொள்ளும் வேறு எந்த சமயமும் கிடையாது என உளமகிழ்ந்து கூறுவேன்.

நான் ஓர் கிருஸ்துவனாகப் பிறந்திருந்தால் உலக இரட்சகராகி அஞ்ஞானத்தைப் போக்கிய பிதா ஏசுநாதரே சிறந்தவர் எனவும், மாதா தான் நிலையான தெய்வம் என்றும் புகழ்ந்து கூறுவேன்.

நான் மகமதியனாய்ப் பிறந்திருந்தால் எனது மகம்மது நபிநாயகமே சிறந்தவரென்றும் அவருடைய வாய்மொழியான குரான் வேதமே பொன்மொழி எனவும் மனமாரக் கூறுவேன்.

மேலும் நான் ஆரிய, பிர்ம சமாஜ்யங்களில் உதித்திருந்தால் பிர்மத்தைக் காண இதையன்றி வேறு வழியில்லை என சாதிப்பேன்.

---

ஆகவே நான் உதித்த இடம், தேசம், காலம் இவைகளை உத்தேசித்து பூர்வவாசனைப் பலத்தினால் ஒன்றை உயர்த்தியும், மற்றொன்றைத் தாழ்த்தியும் உலகம் அதிசயிக்கத் தக்கமுறையில் அபாரமாகப் பேசுவேன்.

*அந்தோ? என்ன விந்தை!*

இவைகளெல்லாம் உத்தேசித்தே வள்ளல் பெருமானார் ஜாதி, மதம், சமயம், சாஸ்திரம், குலம், கோத்திரம் இவைகளெல்லாம் பொய் என்றும், இவைகளில் புகுந்து வாணாளை வீணாளாக்க வேண்டாம் என்றும், ஆண்டவன் ஒருவனே என்றும் அறைகூவிப் போனார்.

C C C

## 29. பரமன் அருளில் பரவசக் கண்ணீர்

பெரியார் சரித்திரப் புத்தங்களைப் படிக்கக் கேட்கும் போதும், பெரியார் கதைகளைச் சொல்லும்போதும், நாடகங்களிலோ, சினிமாவிலோ, ஆண்டவனின் அனந்த கல்யாண குணங்களைச் சொல்லும்போதும், ஆண்டவன் பக்தர்களுக்கு அருள் செய்யும் போதும், பக்த துருவனுக்கு பகவான் மகாவிஷ்ணு சங்கு சக்ரதாரியாக நேரில் வந்து அனுக்கிரகம் செய்தார் என்பது போன்ற சரித்திர லீலா வினோத விசித்திரங்களை கேட்கும்போதும், பார்க்கும்போதும், மயிர்க்கூச்செரிந்து என்னையறியாது வாய்விட்டு ஓலமிட்டலறி அழத்தொடங்கி விடுவேன். அதிலும் ஆழ்ந்து கேட்டு விட்டாலோ ஹோவென்று பைத்தியக்காரத்தனமாக பெருஞ்சத் தம் போட்டு அலறி அலறி அழ ஆரம்பித்து விடுவேன். ஏன் அழுகிறேனென்று எனக்கும் தெரியாது. அறியாமையால், அழும் விஷயம், பைத்தியக்காரத்தனத்திற்கும் கேலிக்கும் கூட்டத்திலிடமாகுமென்று தனித்து விலகி, ஆரவாரத்தை அடக்கிக் கொள்ளுவேன். அதிகம் கேட்டால் அளவு கடந்து விடுமென்று அஞ்சி அவ்விடத்தை விட்டு அகன்று விடுவேன். இதற்காக வேண்டியே பக்தர்களுடைய கூட்டத்திற்கோ, பெரியவர்களின் சங்கத்திற்கோ போகாமல் மனதிற்கு வினோத காரியங்களிலும், உபசாந்தத்தின் போக்கிலும் நிற்பேன். எப்படியும் பைத்தியக்காரத்தனம் வெளிப்படாமலிருப்பது நன்மை யல்லவா?

---

N.B.:- இது விஷயமாக மகரிஷியைக் கேட்டேன் அதற்கவர் தன்னுடைய யதார்த்த ஸ்திதியை விட்ட யிடத்தில் எல்லாம் வரும் என்று குறிப்பாகச் சொன்னார். உணர்ந்தேன்.

C C C

## 30. யோகம் செய்யத் தாகமாயலைதல்

நிஷ்டை சாதிக்கப் பிரியமிருக்கிற தென்றும் அதற்குரிய வழிகளைச் சொல்ல வேண்டுமென்றும் துறவிகைளத் தேடிக்கேட்டேன். அதற்கவர்கள் நிஷ்டை சாதிப்பது சுத்தபைத்தியக்காரணத்தனம், நாமே பிரம்ம சொரூப மென்று நினைந்திருப்பதே ஞானம். நாங்களெல்லாம் அப்படித்தான் இருக்கிறோம், நீங்கள் கஷ்டப்பட வேண்டாம் என்றார்கள். யோஜித்தேன் வேதாந்த புஸ்தகங்களைப் படித்து பொட்டை நெட்டுரூப் போட்டும் இவர்கள் தெரிந்திருப்பதாக எனக்கு விளங்கவில்லை. (ஆனால் நூற்றிலொரு அனுபவி எனக்குத் தெரியாமலிருக்கலாம் அவர்களைப் பற்றிப் பேசவில்லை) தாயுமானவர் சாஸ்திரம் பார்த்தேன்.

வெண்பா

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ – நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோ தான்
பொய்யாம் பிறப்பிறப்பு போம். (தாயுமானார்)

நிஷ்டை கட்டாயம் வேண்டுமென துணிவுபட்டது.

தலைவனைக் காண தாகமெடுத்தது, எனினும் அக் கடவுளை எப்படி அடைவது, காண்பது, என ஒன்றும் புலப்பட வில்லை. தெய்வக் காதல் கொழுந்துவிட்டெரிந்தது.

ஆகம விதங்களறிவார்க ளபரமறிவார்
யோகமோ டுறங்கு மவரே பரமுணர்ந்தோர்.
(சசிவர்ண போதம்)

சாதாரண ஜனங்கள் இவ்வுலகில், சாக்கிர சொர்ப்பண சுழுத்தி இம் மூன்றவத்தைதான் அனுபவிப்பர். ஞானியோ இம்மூன்றையும் தாண்டி, அப்பால் துரியம், துரியாதீதம் என்னும் ஜோதி வெளியில்

தன்னைத் தானறிந்து ஆனந்தமுற்றிருப்பான். இவ் வெளியை ஒருமுறையேனும் கண்டு கலந்து களிக்க எனக்கு மிக்கவிருப்பமுண்டாகியது. **"அழுத குழந்தைக்குத்தான் பால் கிடைக்கும். தட்டினவனுக்குத்தான் கதவு திறக்கப் படும்"** என்னும் பழமொழியை நம்பினேன்.

ஞான அனுபூதிச் செல்வர்களாகிய துறவியை நான் எந்தயிடத்தில் கண்டாலும் மனதில் முன்பின் யோஜியாது பாதத்தில் வீழ்ந்து வணங்குவது எனது முதற் பழக்கம்.

C C C

## 31. அருட்குரு ரமணர் ஆனந்தம் அருளல்

விருத்தம்

பகவனின் னாச்சிரமம் வலம்வந்து கைகூப்பி
அஞ்சலிகள் செய்துமறியேன்
பக்தியோடு சந்நிதியி லொருமைமன தாகியுள்
பாதமில் வீழ்ந்துமறியேன்,
ஜகமெலாம் புகழுநின் னடியார்கள் சங்கமதி
லன்போடு சார்ந்துமறியேன்
சத்தாகும் ரமண நூற் கொத்தினு ளமைந்ததேன்
சற்றேனு மாந்தியறியேன்,
இகபரம் விளங்குநின் னற்புதக் கீர்த்தியை
யுளத்தினில் கொண்டு மறியேன்
ஈரெட்டு வயதினி லருள்பெற்ற மணியேநின்
னற்புத மென்னசொல்வேன்.
திகழகில வுலகுபுகழ் அருணை மகரிஷிரமண
திவ்யஅவ தாரமாகி
திருவரு ளடைந்திட்ட மோனமுறு மெய்ஞ்ஞான
தேசிக சிரோரத்னமே.

கருணைமணங் கந்திக்கும் கமலத்தே யினிக்கும்
கதிக்குவழி காட்டிவிடும் வேதமணம் நாறும்
பொருணிறைந்த சிவயோக மணம்வீசும் ஞானம்
பொங்கிவரும் வேதாந்த மணங்கமழும் பொல்லா
மருணீக்கு மாமலராம் மோனமணம் மணக்கும்
மதிபெருகும் சித்தாந்த மணம்பரிம ளிக்கும்
அருணைவாழ் ரமணகுரு ஆனந்த மருளும்
அவதார அண்ணலடி அருமலரி னிடத்தே.

---

எழுமின் சாந்தியடைவ மௌன விழிமின்

தற்செயலாக மிகுந்த இளமை உருவமுள்ள படம் ஒன்று கிடைத்தது. அதில் திருவண்ணாமலை, பிராமணஸ்வாமி ரமண மஹரிஷி என்ற விபரம் இருந்தது. மனவண்டியை முடுக்கியாயிற்று. 21-வயதுள்ள தவராஜன் படத்தைக் கண்டதும் வெட்கமும், ஆத்ம வீரமும், மனதைக் கவர்ந்தன. அந்தோ! வாழ்நாளை வீணாக்கினோமே என விசனப்பட்டேன். அப்பெரியாரை தரிசனம் பண்ண புறப்பட்டு திருவண்ணாமலை சேர்ந்தேன். இராணியிடத்தில் ஓர் ஏழை ஸ்திரீ பேசுவதற்கு எப்படி அஞ்சுவாளோ அப்படி பகவான் ரமண மஹரிஷியவர்களிடம் முதன் முதல் பேச அஞ்சி கடிதம் வாயிலாக விண்ணப்பம் தயாரித்தேன்.

***விண்ணப்பம்:***

திருவண்ணாமலை மேல் எம்போன்ற தீனர்களை இரக்ஷிக்கும் பொருட்டு குரு மூர்த்தமாக அவதாரம் செய்தருளி எனதுள்ளத்திற் கலந்து விளங்கிய பகவான் ஸ்ரீரமண மஹரிஷியவர்கள் சந்நிதானத்திற்கு:

பிரபஞ்ச சுக துக்காதிகளால் அலைப்புண்டு பயந்து மனம் வெந்து, புண்பட்டு, பவசாகரத்தில் வீழ்ந்து, இந்நாள் வரையில் என்னுடைய காலத்தை விருதாவாக பிரயோஜனமின்றிப் போக்கி கரையேறும் வழிதெரியாமல் கலங்கும் சிறுவன் பின்னலூர் இராமலிங்கம் போதநாசஞ்செய்ய சிவசந்நிதான சாக்ஷியாக எழுதிக் கொண்ட சிறு விண்ணப்பம். எப்படியேனும் இவனை ஆட்கொண்டு, மனப் பிணிக்கு மருந்து கொடுத்து, பவசாகரத்தினின்று கரையேற்றி அந்தமில்லாத ஆனந்தத்தை அடையச் செய்விப்பது தங்களின் கடமையாகுமென்று மனம் வாக்கு காயமுள்பட பன்முறை நமஸ்கரித்து பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு
**இராமலிங்கம்.**

ஸ்ரீ கந்தாச்சிரம வாயிலை முதன் முதல் அடைந்தவுடனேயே எனது இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. பரிசுத்த ஆத்ம சந்நிதிக்கு செல்லுகிறோமென்று எண்ணியவுடன் மனத்தில் பயபக்தி தோன்றிவிட்டது. பகவான் சந்நிதி போகும்போதே எனது பாபங்களெல்லாம் அச்சத்தால் நடுங்கத் தொடங்கிவிட்டன.

சங்கற்ப விகற்ப கன்ம மூட்டைகளை வெளியே வைத்து விண்ணப்பத்தைக் கைபிடித்து ஆச்சிரமத்துள் சென்று பகவானைக் கண்டேன். எனது நினைவு எனக்கில்லை விண்ணபத்தைப் பகவானிடம் கொடுத்து நமஸ்கரித்து நிற்கும் போது என்னை அறியாமல், அடக்கமுடியாமல் அன்பும் அழுகையும் இன்பும் கூடி, ஹோவென்று வாய்விட்டலறிக் கண்ணீர் கானாறாகப் பெருக அழுது ஊன் நடுங்கி உளம் வெதும்பி வேர்த்து விறுவிறுத்து மயிர்க்கூச்செறிந்து நின்றேன்.

அஞ்சலென வந்தடையு மேழை தம்மை
அபயாஸ்தங் கொடுத்தருளு முதாரமும்பின்
நெஞ்சதனி வீரமுமின் சொல்லுமிக்க
நெறியுடனல் லுபசார சீலமெங்கும்
விஞ்சுநின் திருக்கருணை யொளியே வீச
வெளியதனில் நின்புகழே மென்மையாக
செஞ்சைலஞ் சிறக்கின்ற செல்வா வுன்னைச்
சேர்ந்துமிகக் களிக்கின்றேன் ரமணதேவே.

பகவான் சிறியேனை ஞானக்கண்ணால் ஏறப்பார்த்து தமது சந்நிதான விசேஷ வல்லபத்துடன் கூடிய மலர்ந்த இனிய புன்முறுவலுடன் உட்கார் என்றனர். மனம் இன்பக்கடலாடியது.

வந்தாயென்றன் குறை நீக்க
மன்னேயென்னை யாண்டவனே
தந்தாயுன்றன் திருக்கருணைத்
தலைவாவென்ன புகன்றிடுவேன்
சிந்தாகுலந்தீர்த் திடவே நான்
சிறியேனெண்ண முடிந்ததுவே
யெந்தாயெந்தை யிது முதலே
யென் வேலே யெலா முன்னதுவே.

திருவண்ணாமலை மேல் ஆச்ரமத்தில் சேர்ந்தவுடன் அடியேன் திருவண்ணாமலை வீதிகளில் பெருமாள் சுவாமி.......................... முதலிய ஆச்ரம சிஷ்யக் கூட்டங்களுடன் வீதிகளிறி சென்று பகவானால் அருளிய அருணாசலேச்வரர் அக்ஷரமணமாலை சொல்லிக் கொண்டு பிட்சை எடுப்பது பழக்கம்.

அருணா சல சிவ, அருணா சல சிவ அருணா சல சிவ
(அருணாசலா!

---

தாயிற் சிறந்தொரு கோயிலுமுண்டோ?

ஊர்சுற் றுளம்விடா துனைக்கண் டடங்கிட
வுன்னழ கைக்காட் டருணாசலா

.... .... .... ....

ஒருவனா முன்னை யொளித்தெவர் வருவா
ருன்சூ தேயிது வருணாசலா

... ... ... ...

கண்ணுக்குக் கண்ணாய்க் கண்ணின்றிக் காணுனைக்
காணுவ தெவர்பா ரருணாசலா

... ... ... ...

சொல்லாது சொலிநீ சொல்லற நில்லென்று
சும்மா விருந்தா யருணாசலா

... ... ... ...

ராப்பகலில்லா வெறு வெளி வீட்டில்
ரமித்திடு வோம்வா வருணாசலா

இதுதான் முதலில் திருவருணை வீதியில் மானத்தை விட்டு பிட்சை யெடுத்தும், அபூர்வக் கருத்து கொண்ட அக்ஷரமண மாலையை பிட்சை யெடுக்கும்போது வாயாரச் சொல்லி, மன மார நினைத்து பொருளை ஊன்றிச் சிந்தித்ததுமாகும். அப்போது சொல்லிக் கொண்டுபோன அந்த மணமாலையின் ஆத்ம உபதேச இன்னொலி, இன்னும் இம்மனோபாவத்தில் சுழல்கின்றது. இதுதான் ஆச்சிரமத்தில் பெற்ற முதல் உபதேசம்.

குருநாதன் சிறியனிடம் பேசும்போது அடிக்கடி வாசிஷ்டம், தாயுமானவர், கீதை, ஆச்சார்ய சுவாமி ச்லோகங்கள் முதலியவைகளை மேற்கோளாகக் கொண்டு பேசுவர்.

நீ ஒருவருக்கு கொடுத்தால் அது உனக்கே கொடுத்துக் கொண்டாதாகும். நீ ஒருவரைத் திட்டினால், ஏமாற்றினால் உன்னையே திட்டியதும் ஏமாற்றிக் கொண்டதும் ஆகும். நீ பிறருக்கு தீங்கு செய்யும்போது உனக்கே தீங்கு செய்து கொள்ளுகிறாய். ஏனென்றால் பிறர்வேறு நீ வேறல்ல என்பார்.

மஹரிஷிகளிடம் சம்பாஷிக்கும்போது எதிலும் சங்கல்பம் வேண்டாம் என்று அடிக்கடி சொல்லுவார் மனதைப் பற்றியும்

கண்டதெல்லாம் வீணே. உண்டதெல்லாம் மலமே

உலகத்தைப் பற்றியும் உயிரைப் பற்றியும் திரணம் கூட மதிக்காமல் கண்டித்துப் பேசுவார். **உயிர் நின்றால் நிற்கட்டுமே! போனால் போகட்டுமே! நிற்கிறவன் நீயா? போகிறவன் நீயா? பயம் என்பதையே அறியாத, அசைக்க முடியாத அவ்வளவு தைரியம் வேண்டும். நாம் நம்மிடத்தில் நிலைத்தால் எல்லாம் தாமாகவே நடக்கும்** என்று பகவான் சொல்லுவார்.

சோறிட்டுச் சொர்க்கமதைக் காட்டுவான்போற்
சொல்லுகின்ற பலர்சொல்லைச் சூதாய்நானு
மேறிட்டு மறியாத வேழையந்தோ
வீடேறவெண்ணி யெனை யனுபவத்தில்
நேரிட்டுக் கண்டிடவே நிமலன்றாளில்
நித்தியமா யடைந்திடவே நீயுமுன்னி
மோரிட்டு மறுவகையோ டன்னமீந்து
மோட்சநிலை யறிவித்தாய் ரமணமுத்தே.

ஆச்சிரமத்தில் பகவானிடம் இருக்கும்போது என் மனதில் உதிக்கும் கவியை எழுதிக் காண்பிப்பேன். அவர்கள் பார்வையிட்டு எனக்கு கவியினுடைய தாரை தொடர்பாக நன்றாயமையப் பெறுகிறதென்றும், இன்னும் கொஞ்சம் கவனித்து செய்தால் நன்றாயிருக்கு மென்றும், சரளமாக கவியெழுதும் முறையையும் எனக்குப் போதித்தார்.

அளக்கறியா நிலையமர்ந்த வருளேயுன்னை
அறிந்திடவே தான் வேண்டி லகண்டாகார
துளக்கநிலை தனிலிருந்து துடித்தாலல்லால்
துரியநிலை மேவிடவே தோன்றாதென்றும்
வுளக்கமல மனதினிலை வாக்கினாலே
யுரைத்துநிதம் புரண்டாலும் விளங்காதென்றும்
விளக்கமுறத் தெரிவித்த விண்ணேயுன்னை
மேவிடவே வேண்டுகின்றேன் ரமணதேவே.

ஞாலமுள ஜாலமெலா மெங்கேயென்று
ஞானமதால் பார்த்திட்டால் நினைவேயாகும்
கோலமுள நினைவெங்கே குதித்ததென்று
கொடுமுடியை யுள்நோக்கி நின்றுபார்த்தால்
மூலமதில் நின்றிலங்கு முண்மைதன்னில்
முயன்றிட்டால் முப்பகையு மோடிப்போகும்
சீலமுள ரமணமுனி யென்றனுக்குச்
சிறப்பாக வோதியது மிதுவேயாகும்.

---

ஸ்ரீ ரமணாச்ரமத்தில் சாதாரண பெரியார் ஒருவர் என்னைப் பார்த்து விளையாட்டாக, **"ஞானம் என்பது என்ன? ஆனந்தம் என்பது என்ன? அது எங்கே விளையும்?"** என்று சுருக்கமாக ஞானக் கேள்வி கேட்டார். அவருக்கு வினயமாக பதில் சொன்னேன் சிரித்தார் பின் மௌனமானார் உடனே கவி ஒன்றெழுதி அதை பகவான் மஹரிஷி அவர்களிடம் காண்பித்தேன். பார்த்து கவி அமைப்பைப் பற்றி சந்தோஷப்பட்டார்.

ஞானானந்தம் எங்கனென ஞானியொருவர் எனைக்கேட்க
ஊனானந்தம் உணருமிடம் உளவையறிந்து சொல்வீரேல்
தேனானந்தம் பொழிநிலையை தெரிந்தவரையில் சொல்வனென்றேன்
நானாரென்னும் நிலைகண்டார் நகைத்து மௌனமானாரே.

துன்புடைய வுலகசுக முனக்குமினி வேண்டாம்
துரியநிலை யான்மசுக மதுவொன்றே போதும்
அன்புடைய வடியார்கள் அடிபணிந்து நின்றே
அவருறவில் பழகிடநின் அவஸ்தையெல்லாம் போகும்
இன்புடைய பேரருளி லிலங்கிடவே நீயு
மென்னை நீ பாடுகவென் னோடுகலந் தாடு
வன்புடையார் செயலதனில் வயங்கிடவே வேண்டாம்
வார்த்தைதிருக் குறிப்பதனால் வழங்கிட்ட ரமணர்

எனது குருநாதன் பகவான் ரமண மஹரிஷி அனுக்கிர ஹத்தால், அவருடைய விளக்கத்தால், என்னுடைய அந்தர ஆத்மா வெளிக்கிளம்பக் கொண்டுவந்தார், கொண்டுவருகிறார், கொண்டு வருவார். அவர் ஆத்ம அனுபவமென்னும் மழையானது என்மேல் விடாமல் வருஷிக்கின்றது. அது ஓய்வற்றது. அதையென்றும் தடுக்க முடியாது. இனி அவரென்னைக் கைவிட முடியாது.

மஹரிஷி அவர்களிடம் ஸ்கந்தாஸ்ரமத்தில் எனது ஆரம்ப காலத்தில், "துறவியாய் வெளியில் போய் அனேக ஊர்களில் வேதாந்தப் பிரசங்கம் செய்ய விருப்பமிருப்பதாகத் தெரிவித்தேன். அதற்கவர் "உமக்கு அந்த விசாரம் இப்பொழுது எதற்கு? பிரசங்கம் செய்ய வேண்டுமென்றும் செய்ய வேண்டாமென்றும் சங்கல்பமே வேண்டாம். அவை நடைபெறும்போது அம்மகா சக்தி உம்மைக் கருவியாய் வைத்து உடனே அந்தக் காரியத்தை முடித்துவிடும். ஆகவே ஒன்றையும் விடவும் வேண்டாம். தேடிப் பிடிக்கவும் வேண்டாம். நீர் அதைப் பற்றி நினைக்கவும் வேண்டாம். விடுபவை தானே விடும், சேர்வது தானே சேரும், உம் எண்ணத்தில் ஒன்று மில்லை" என முடித்தார்.

---

பொல்லாத உடலை பொம்மலாட்ட மென்றேயிரு

ஓர் நாள் ஆச்சிரமத்தில் பரிமாறும் அம்மையார் பகவானுக்கு ஓர் விதமாகவும், பந்தியிலுள்ள மற்றவர்கட்கு ஓர்வித மாகவும் உள்கட்டிலேயே காப்பியை (Coffee) தயாரித்து பந்தியில் வைத்தார். இதை எப்படியோ பகவானுணர்ந்து அவ்வம்மையாரை ஏற இறங்க நோக்க, அவ்வம்மையார் அலறி விட்டார். பகவான் அதற்கென கோபங் கொள்ளாமல் மிக்க சாந்தமாகவே, நான் வேறு அவர்கள் வேறா எனக்கெனத் தனித்த ஒன்றும் அதிகமாக செய்தல்கூடாது என பகவானுக்கு வைத்திருந்ததையும் மற்றும் யாவற்றையும் தன் முன்னால் ஒன்றாக விட்டுக் கலக்கி சமரசமாக யாவருக்கு கொடுக்கும்படி செய்தார். தனது பரிபூரண சமரஸ பாவத்தை வியக்தமாக வெளிப்படுத்தினார். எங்குங் கண்டிராத காணவியலாத என்ன சமரச திருஷ்டி! என்ன சமரச பாவனை. ஆகவே மடங்களில் நடப்பத்தைப்போல ஆச்சிரமத்தில் தனி ஏற்பாடுகள் ஒன்றுமே கிடையாது.

பொதுவாக ஜனங்கட்கு ஆத்தும தத்துவத்தை உபதேசிப்பதில் மிக்க உற்சாகமுள்ளவர். ஆச்சிரமத்தில் பகவானுடன் பழகும்போது ஞானக் கதைகளைக் கேட்கும் பக்தர்கள் மனத்தில் பதியும்படி எளிய நடையுடன் தெளிவாய் மிக்க அமைதியுடன் சொல்லுவர். திருஷ்டாந்திரமாக ஞானவாசிட்டத்திலுள்ள கதைகள், விசார சாகரத்திலுள்ள பரிச்சு மந்திரிக் கதை முதலியவைகளை மிக நயமுடன் சொல்லுவார்.

ஆதியில் பகவான் மௌனமாயிருந்த காலத்தில் தாயாரும் உறவினரும் தனது வீட்டிற்குக் கூப்பிட்டதற்கு மௌனமாக இருந்துகொண்டு எழுதிக் காட்டியதாவது:-

*"அவரவர்கள் பிராப்த பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிப்பன்" என்றும் "நடவாதது என்ன முயற்சிக்கினும் நடவாது, நடப்பது என்ன தடை செய்யினும் நில்லாது இது திண்ணம் ஆதலின் மௌனமாயிருக்கை நன்று" என்றதாகும்.*

ஒரு பரமேஸ்வர சக்தி உலகை நடத்துகிறது. அது அனைத்தையும் தாங்கும், அதற்கு நாம் அடங்கியிருக்காமல் அப்படிச் செய்யவேண்டும், இப்படிச் செய்ய வேண்டும் எனச் சிந்திப்பதெல்லாம் வீணே, புகை வண்டியில் உட்கார்ந்து செல்பவன் மூட்டையைத் தலையில் சுமப்பது மடமை. சங்கல்ப ரஹிதரான ஈசனின் சந்நிதான மகத்துவத்தின் மாத்திரத்தினாலேயே உலகம் தானாக நடைபெறுகிறது என்பர்.

---

உறவினரைச் சந்தைக் கூட்டமென்றேயிரு

ஆச்சிரமத்தில் பகவானிடம் பேசிக் கொண்டிருக்கும் போது சங்கராச்சாரியர், மாணிக்கவாசகர், இராமலிங்க சுவாமிகள், இவர்களெல்லாம் தேகம் பூமியில் விழாமல் ஜோதியுட் கலந்தனரென்று உலகத்தில் ஜனங்கள் சொல்லுகின்றார்களே குமாரதேவர் சாஸ்திரம் சுத்த சாகத்திலும் இச்சடலம் பூமியில் விழுந்தால் மறுபிறவி எடுக்கும் என்பதாகச் சொல்லுகிறதாமே, ஆகவே எப்படியானால் இந்த ஜன்மத்திற்கு மோக்ஷமென்று குருநாதனைக் கேட்டேன்.

வெண்பா

உருவ மருவ முருவருவ மூன்றா
முறுமுத்தி யென்னி லுரைப்ப – னுருவ
மருவ முருவருவ மாயு மகந்தை
யுருவழிதன் முத்தி யுணர் (பகவான்)

என்று சூட்சுமமாகச் சொன்னர், இப்படி சிலகால மிருந்து பல உபதேசப் பகுதியை யுணர்ந்து, மனத்தெளிவடைந்து பின்பு பின்னலூருக்கு வந்தேன். ஜீவ வாழ்க்கையின் உண்மையை நோக்கிச் சிந்திக்கலானேன், செல்லும் வரையில் சிந்தையைச் செலுத்தினேன். குருநாதன் ரமண மஹரிஷி சொன்ன விசாரணையிலிறங்கினேன். இச்சரீரம் எவ்வளவு துரும்பாய்ப் போயினும், மரணமாயினும் சரி, எனத் திடங்கொண்டேன். இப்பிறவி வாழ்நாளில், ஒவ்வொரு சிறு காரியத்திலும் மூளையைச் செலுத்தி சாதித்துப் பூர்த்தியானது போல, உயிர் வாழ்க்கையின் மிக ஆழ்ந்த ரகஸ்யங்களை அறிய உயர்நலமமைந்த ஞான பூமியைக் கண்டுபிடிக்க ஆசைப்பட்டேன். கொண்ட எண்ணத்தைப் பூர்த்தியாக அடைய எண்ணி சாதித்தேன்.

விருத்தம்

அருணைவாழ் குருரமண எங்கள்பர மாம்சனாம்
அருமறையி னையன்வருக
அருள் பெருக வடியவர்க் கோயாமல் ஞானமது
வந்தருளும் அன்புவருக.
கருணையுரு வோடிந்த வையமது வீடேற
காட்சி தரு கண்ணவருக
கடைவிழி கொழித்தவருள் வெள்ளமே பிறவிநோய்
கரைக்குமா மருந்துவருக,
பொருள்நிறைந் தொளிருமொரு பொக்கிஷக் குவியலே
புரிவுடெ னெஞ்சில்வருக
போதாந்த முடிவுலுறு மோங்கார மதனிலுறு

---

முபதேச வுண்மைவருக
தெருளுற வுலகுபுகழ் அருணைமக ரிஷிரமண
திவ்யஅவ தாரமாகி
திருவரு ளடைந்திட்ட மோனமுறு மெய்ஞ்ஞான
தேசிக சிரோரத்னமே.

C C C

## 32. ஓ! ரமணா! வென்று ஓலமிட்டது

**ரோ**ட்டின் ஓரமுள்ள தனித்தஅறையில்; எனது துரிய அனுபவம் கூடிய விடத்தில் ஓர் நாள் தியானத்துடன் ஆனந்த நித்திரை யிலிருக்கும் போது (இரவு சுமார் ஒருமணியிருக்கும்) என்னை அறியாமல் என் தேகத்தை மின்னல் வேகத்தில் திடீரென்று கிளப்பிக் கொண்டுபோய் நடு ரோட்டில் விட்டது. நின்று கொண்டு எனது ஸ்மரணையில்லாமல் ஓ...ரமணா! ஓ....ரமணா!! ஓ....ரமணா!!! என பெருஞ்சப்தம் போட்டு ஒரு பர்லாங் தூரம் கேட்கும் படி பிசாசு போல் கூவிவிட்டேன். இந்த பீதியுள்ள ஆவேச பிசாசு குணம் நீங்கி சரியான நிலைக்கு வந்தேன். எனக்கே சிரிப்புத்தான். நான் ஓ.......ரமணா! வென்று அலரியதைப் பார்த்து யாரேனும் கண்டு கொண்டால் இவனுக்குப் பயித்தியம் பிடித்துவிட்டது என்று நினைத்துவிட்டால் என்ன செய்வது என்று ஒரே ஓட்டமாக உள்ளே வந்து தாளிட்டுக்கொண்டேன். அந்தோ! எவ்வளவு பயித்தியகாரத்தனம். ஏன் கூவினேனென்று இன்னமும் உட்பொருள் விளங்கவில்லை.

C C C

## 33. அதிசயசக்தியால் அந்தர மார்க்கம்

**எ**னது அதி தீவிர அப்பியாச காலங்களில் மனதினால் நினைக்க முடியாத எதிர்பாராத அபூர்வ அனுபவக் காட்சிகள் பல நிகழ்ந்திருக்கின்றன. அதாவது ஓர் இரவு கட்டிலின் மேல் நிஷ்டையிலிருந்து, அதே மார்க்கத்தில் ஆனந்த நித்திரையில் உறங்கிவிட்டேன். எனது மனத்தின் உதவியை எதிர்பாராமலே எனக்கும் தெரியாமலே ஓர் தெய்வீக சக்தி என்னைத் தூக்கிக்கொண்டுபோய், மனிதன் சாதாரணமாய் செல்லக் கூடாத -

புழக்கமில்லாத - சாமான்கள் கிடந்தவைகளின் கீழ், ஒதுப்புறமான புதிய வேறுயிடத்தில் வைத்திருக்க, நினைவு வந்து விழித்துப் பார்த்தேன். எழுந்தால் மேலே பல சாமான்கள் மோதுகின்றன புரண்டு பார்த்தேன் சாமான்கள் மோதுவதால் புரளவும் முடியவில்லை. எப்படியோ சிரமப்பட்டு உடும்பு பாம்பு முதலியவைகளைப் போல் ஊர்ந்து வெளியே வந்தேன். நான் இந்த இடத்தில் எப்படி வந்தேன்? எப்பொழுது வந்தேன்? என்று ஆராய்ச்சி செய்து பார்க்க அதுவும் ஓர் தெய்வீக சக்தியின் வேலையென உணர்ந்து ஆச்சர்யப்பட்டு அடங்கினேன். நான் நினைத்ததாவது, நான் எங்கேனும் வெளிப் புறங்களில் நிஷ்டையிலிருந்துவிட்டால், இந்த தேகத்தை அதற்கு சமீபமுள்ள கிணற்றிலோ, குட்டையிலோ, ஆற்றிலோ, முள்புதரிலோ, போட்டுவிடுமோவென ஐயப்பாடு உண்டாகியது. கூர்ந்த அறிவினால் பார்க்க அப்படி மோசமான நிலை எதுவும் ஏற்படாதெனவும் அருட் சக்தியின் அறிகுறியால் துணிந்தேன். சந்தோஷித்தேன். இப்படி சில தடவை நிகழ்ந்திருக்கின்றன.

c c c

## 34. சிந்தைக்கு இனிய செவிக்கு உணவு ஈன்றது

புவனகிரியில் இரண்டு வருஷம், வணிக வாணிப சத்திரத்தின் பின்புறம், விசாலமுள்ள இடத்தில், இலுப்பை மரத்தின் நிழலில், மணல் பரப்பிய நிலத்தில், பிரதி ஞாயிற்றுக் கிழமை தோறும், அவ்வூர் பக்தர் காசுக்கடை ஆறுமுகப் பத்தர் வேண்டுகோளுக்கு இணங்கி நான் தலைமை வகித்து காலை 7-மணி முதல் 10-மணி வரையில் கர்மம், பக்தி, யோகம், ஞானம், பசு, பதி, பாசம், அன்பு, ஜீவகாருண்யம், சமாதி, மரணம் என்பவைகள் என்ன? ஜீவானந்தம், "ஜீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது;" இவை போன்ற பல அரிய உபந்நியாசங்களைப் பேசினேன். ஆஸ்திக பக்த சிரோன்மணிகள் ஆண் பெண் அனைவரும் தவறாமல் கேட்டு ஆனந்தித்துப் போவார்.

குமராட்சிக்குச் சமீபமுள்ள சிறகிழந்த நல்லூரில் விவேகானந்த சபையினர் வருஷாந்திரக் கூட்டத்திற்கு என்னை உபந்நியாசத்திற்கு அழைத்தனர். அதற்கிணங்கி அங்கு பக்தி, யோக சோபான முறைகளைப் பற்றிப் பேசினேன்.

---

ஈசன் காட்டுக்குப்பம் விசாலமான இலுப்பைத் தோப்பில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நிறைந்த ஓர் கூட்டத்தில் கிருஷ்ணசுவாமியின் வேண்டுகோளுக்கிணங்கி தாயுமானார் பாடலில் "காராரும் ஆணவக் காட்டை" என்ற பாட்டை ஆதாரமாகப் பாடி நான்கு மணி நேரம் அதற்குரிய கருத்தை உபந்நியாசித்தேன்.

காட்டு மன்னார்குடியைச் சேர்ந்த உடையார்குடியில் நண்பர் முத்துக் குமரப் பிள்ளையின் விருப்பத்திற்கிணங்க தனிச் சிறப்புக் கூட்டம் ஒன்று கூட்டுவித்து "கருமயோகம்" என்பது பற்றிப் பேசினேன்

இப்படிப் பல இடங்களில் சில காலம்சென்றது. அப்போது 3-மணி நேரமானாலும் மூச்சுவிடாமல் பேசும் சக்தியிருந்தது. இப்போது அறவே பொதுக்கூட்டங்களில் பேசுவதே இல்லை.

C C C

## 35. தனித்த இடமும் இனித்த தன்மையும்

**பி**ன்னலூருக்கு சுமார் மூன்றுமைல் தூரத்திலுள்ள பாடுதுறை, பரணி முதலிய பல நூல்களைத் திருவாய் மலர்ந்தருளிய எரும்பூர் தத்துவராய சுவாமிகள் சந்நிதானத்தில் தியானம் செய்யின் மிக்க பலன் தருமென்று அப்படி சின்னாள் செய்திருக்கிறேன். தத்துவராய சுவாமிகள் சமாதி உட்பிரகாரத்தில், கணக்கில்லாமல் வலம் வருவேன். இப்படிச் சுற்றுங்காலத்தில் ஓர் எண்ணமும் உள்ளத்திற்குள்ளே புகுந்துவிடாதபடி பட்ட அரும்பாடு, பகவான் தத்துவராய் சுவாமிக்குத்தான் தெரியும். இப்படியே ராமனாதபுரம், தாயுமானார் சமாதியையும் சுற்றித் திரிந்தேன்.

இனி செய்யவேண்டிய தென்னவென ஆலோசித்தேன். முதல் வேலையாவது, ஆறு மாதத்திற்கு வாக்குமௌனம் சாதிக்க வேண்டுமென்றும், பின்பு முறையே மனோமௌனம், காயமௌனம், சாத்தியமாமென்று முடிவு செய்தும், இதற்கு இல்லறம் தகுதியல்ல வென்பதாகத் தீர்மானித்து எரும்பூர் தத்துவராய சுவாமி கோயில் சமீபம் கதம்பவன இடம் சரியானதென்றும், அங்குள்ள குளத்தின் தென்கரை, மாமரத்தின் நிழல், நாணல் நிறைந்த புதர்கள், ஒருவரும் சஞ்சரிக்காத விடமானதால், ஏகாந்தத்திற்கு மிக்க இனிதென்றும், ஒரு வேளை ஆகாரந்தான் வேண்டுமென்றும், அதுவும் கிடைத்தால் பார்த்துக் கொள்வோமென்றும், திடம்பண்ணி ஒரு வரும் சஞ்சரிக்காத விடத்தில், லங்கோடு கௌபீனதாரியாக உட்கார்ந்து கொண்டு

(நானாரென்னும்) ஆத்ம விசாரணைக்காக பிரத்யேகமாக வாழ்நாளை ஒதுக்கப்பட்டது. மற்றும் ஞானாப் பியாசம் செய்யுங்காலத்தில் தியானத்திற் கமரும்போது ஆதி மூலப் பொருளை, ஆபத்பாந்தவா, அநாதரக்ஷகா, பக்த பராதீனா, ஸ்வயம்பிரகாஸா, சச்சிதானந்தா, சர்வலோக சரண்யா ஹிருதயகமலவாஸி எனக்கூவி பகவான் சற்குருநாதன் ரமண மஹரிஷி, பகவான் புத்தர், சங்கரர், மத்துவர், ராமானுஜர், தாயுமானவர், மாணிக்கவாசகர், திருவள்ளுவர், பட்டினத்தார், பத்திரகிரியார், மௌனசுவாமி, இராமலிங்க சுவாமி, தத்துவராயர், ராமகிருஷ்ணபரமஹம்சர், சுவாமி விவேகாநந்தர், சுவாமி ராமதீர்த்தர், மஸ்தான்ஸாகிப் முதலியமஹான்களைப் பாவித்து இவர்கள் ஒவ்வொருவரையும் நேரில் தரிசிப்பது போல தரிசித்து எல்லோரும் சேர்ந்து எனக்கு அனுக்கிரஹம் செய்யவேண்டும், உங்களில் என்னை ஒருவனாகக் கொள்ளுங்கள் என்று சுமார் 10 நிமிஷங்கள் பிரார்த்தித்து தியானத்திற் பிரவேசிப்பேன். யான் பிற்காலத்தில் அடைந்த அனுபவத்தில் மேற்கண்ட மஹான்கள் யாவரும் இச்சிறுவன் மேல் கருணைகூர்ந்து பிரார்த்தனைக் கிணங்க அனுக்கிரஹித்தார்களென்றே நினைக்கின்றேன்.

அப்பியாசம் செய்யுங் காலத்தில் ஓர்நாள், கண்டவிடமெல்லாம் உட்கார்ந்து தியானம் செய்தால் சீக்கிரம் பலன் தராது. ஆனதால் பெரியோர்கள் சித்திபெற்ற, திவ்யஸ் தலங்களில் தியானம் செய்தால், சீக்கிரம் பலன் தரும். தரிசனம் கைகூடுமென்று நினைத்து, பின்னலூருக்கு சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள மேட்டுக்குப்பம் அதாவது வடலூர் இராமலிங்க சுவாமிகள் நிருவிகற்ப நிஷ்டை சாதித்த சித்திவிளாகத் திருமாளிகைக்குச் சென்று பத்திய விரதமாக மூன்று நாள் இரவு பகல் நிஷ்டை சாதித்தேன். நிஷ்டையென்பது சங்கற்ப விகற்பமற்று லட்சியத்தில் ஊன்றி நிற்றல்.

விருத்தம்

சிவஞான மணங்கமழ சித்தியெலா
மடைந்த பெருஞ் சீர்மைகாட்டி
அவஞான மலமகற்றும் அருட்பாவை
யின்பமுற வருளிச் செய்த
தவஞான உத்தமரா மலிங்கமெனும்
தலைவரவர் தன்மை பெற்றே
நவஞானம் பொழிகின்ற நன்னிதியை
யென்றனுக்கு நல்கி னாரே.

---

தன்னைப் புகழ்வோன் தாழ்வோன் ஆவன்

நான் ஒருமணி நேரம் தியானத்திலிருந்து வெளி வந்தேனானால் சுமார் 20-மைல் கால் நடையாக தொடர்ந்து நடந்திருந்தால் எவ்வளவு களைப்பு ஆயாசம் உண்டாகுமோ அவ்வளவு களைப்பும் ஆயாசமும் தேக பலக்குறைவும் கண்டேன். இதை அனுபவிப்போர்கள் தெரிந்து கொள்வார்கள்.

சில வருஷக்கணக்கில் ஞாயிற்றுக் கிழமை தோறும் மௌனவிரதமிருந்தேன். அன்றைய தினம் என்னிடம் ஒருவரும் வரமாட்டார்கள். சூரிய உதயத்திற்கு முன்பே சுமார் நான்கரை மணிக்கே ஸ்நானம் செய்துவிடுவேன். மடி உடைஉடுத்தி, வாசனை வத்திகளை கொளுத்தி, மனதை நிம்மதியாக வைத்து உட்கார்ந்து தியானத்திலிருப்பேன்.

என் குறிப்பறிந்து நான் ஸ்நானம் பண்ணி வருவதற்கு முன்பே தியான அறையை பசுஞ் சாணத்தால் மெழுகி சுத்திசெய்து கோலமிட்டு தீபமேற்றி வைத்திருப்பார்கள். பின்பு எட்டு மணிக்கு பால் பழமோ வேறு லேசான ஆகாரமோ கொண்டுவந்து கொடுப்பார்கள். பனிரெண்டு மணிக்கும் ஆகாரத்தை வைத்துவிட்டுப் போய்விடுவார்கள். எனக்கு வேண்டியதை வேண்டிய அளவு நிதானித்து நானே எடுத்துப்போட்டு சாப்பிடுவேன். இரவு ஒன்பது மணிக்கு பால் பழம் கிடைக்கும். தாமத குணமோ அசதியோ அயர்வோ தூக்கமோ வந்தால், சாஸ்திர ஆராய்ச்சியிலிரங்கிவிடுவேன். இல்லேல் தியானத்தில் சுகமாகயிருப்பேன். இப்படி அனேக நாள் போகும்.

C C C

## 36. பந்தமறுக்க ஐந்தெழுத் தோதுதல்

**ப**த்மாசனத்தி லமர்ந்து சின் முத்திரையுடன், கண்மூடி புருவ மத்தியில் ஒரே இலட்சியம் வைத்து, அதனின்றும் நழுவாமல், "ஓம் சிவாய நம". என்று மானஸீகமாக கணக்கில்லாமல், அனேக நேரம் அனேக நாட்கள் நிஷ்டையிலிருந்து பழகிக் கொண்டிருக்கும் போது கண்ட காட்சிகளின் விபரம்:

மாறி மாறித் தோன்றும் மின்னலொளி. இது மழை காலங்களில் இரவில் ஆகாயத்தில் தோன்றும். இருட்டில் பலவிதமான மின்னல்கள் மாதிரி.

சில சமயம், வயிற்றினுள் குடலில் குடு குடு குடு குடுவென்ற சப்தமும் நடைபெற்றுக் கொண்டிருக்கும். ஓர் சமயம், சர்ப்பம் தவளையே யுண்ணும்போது தவளை கத்தும், 'மியாவ் மியாவ்', என சிறு சப்தம் குடலில் கேட்கும். (இது தான் மனமென்னும் தவளையை ஆத்மாவென்னும் சர்ப்பம் சாப்பிடுவதற்கு அடையாளமாகும்.)

குண்டலினி "அன்னையே" எழுந்தருளும் ஆனந்த சொரூபி மூலாதார சக்கரத்தின் கண் உறங்குகின்றாய் மணிபூரக சக்கரத்தின் முக்கோணத்தில் தீ எரிகின்றது. அதனால் உனது உடல் சூடடைந்துள்ளது. சிவ பெருமானது தேவியே நீ மூலா தாரத்தினின்று எழுந்திரு, சுழிமுனை நாடி வழியாக மேற்கிளம்பி சுவாதிஷ்டானத்தில், புலனாகும்படி நின்று, மணிபூரகம் அனாகதம் விசுத்தம், ஆக்ஞை இவைகளின் வழியாக மேற்செல்லுக. தலையிலுள்ள ஸஹஸ்ராரத்தில் சிவபரம் பொருளோடு ஒன்றாகி நின்று, நீ உமது ஆச்சரியமான தலைமையை நடத்துவாயாக என்று பிரார்த்திப்பதுண்டு.

ஓர் சமயம் பற்களைக் கிட்டிக் கொண்டு அடமாக வருத்தப்பட்டு மனதை நிரோதம் செய்தேன். என்னுடைய நிஷ்டைக்குப் பிரதிபந்தமாக எவ்வளவு நினைவுகள் தோன்றினாலும் நான் மனதை அவ்வழியே செல்லவொட்டாமல் கம்பு, சோளக் கொல்லைக்கு, பட்சிகள், கிளிகள் வந்து விழாத வண்ணம் காவல் காப்பது போலவும், பட்சிகள் வந்தால் துரத்தும் வேலையிலிருப்பது போலவும், கண்மூடி ஆங்கு தோன்றும் வெளியாங் கொல்லையில் எண்ணங்களாகிற பட்சிகள் அனுபவமென்னும் தானியத்தை அபகரிக்காமல் ஆன்ம சொரூபமாகிய என்னில் அமர்ந்திருப்பேன்.

## *கடவுளை நம்பு*

நம்பிக்கை உள்ள இடம் அன்பு ஊறும்
அன்பு ஊறும் இடம் சாந்தம் பொங்கும்
சாந்தம் பொங்கும் இடம் இன்பம் பெருகும்
இன்பம் பெருகும் இடம் ஞானம் வழியும்
ஞானம் வழியும் இடம் அருள் ஒளிரும்
அருள் ஒளிரும் இடம் கடவுள் தோன்றும்
கடவுள் தோன்றும் இடம் வேண்டுவது ஒன்றும் இல்லை.

## 37. எனது அனுபவத்தில் ஏகவெளி தரிசனம்



ஆரம்பத்தில் நிருவிகற்ப நிஷ்டையினின்றும்
வெளிவந்தவுடன் எடுத்த படம்

**வ**டக்கு முகமாக பத்மாசனத்தில் சின் முத்திரையுடன் புருவ மத்தியில் லட்சியம் வைத்து ஊசி முனைபோன்ற லட்சியத்தினின்றும் நழுவாமல், **ஓம் சிவாயநம**: என்று மூன்றரை மாத்திரை நீளம் மானஸீகமாக கணக்கில்லாமல் அனேக நேரம் அனேக நாட்கள் இப்படி பழகிக் கொண்டிருக்கும் போது, ஓர் நாள் இரவு மூன்று மணிக்கு உட்கார்ந்து ஒண்ணரைமணி நேரம் ஆனவுடன் திடீரென்று நான் எதிர்பாராத விதமாக யோக சக்தியினால் குண்டலி சக்தி விழித்து, ஐம்பொறியடங்க மூலவாயுவை எழுப்பி, இடைபிங்கலையை இறுகு வடைத்து, முதுகெலும்பின் மத்தியிலுள்ள சுழிமுனை நாடி வழியைத்

திறந்து, மேலுக்குக் கிளம்பி ஹிருதய ஸ்தானத்திலிருக்கப்பட்ட உலக வாசனைகளை சுட்டெரித்துக் கொண்டு, உச்சி நேர துரியவெளி ரகஸ்ய தரிசன சபை காணப்பட்டது. உண்மையறிவின் இன்பவூற்றுப் பொங்கும் தெய்வக் கற்பகச் சோலையின் அருட் கதவு திறக்கப்பட்டது.

சுஷும்னா நாடி திறந்தவுடன் மயிர்க்கால் தோறும் தேள் கொட்டியதுபோல் விறுவிறென்று உபாதையுண்டானது. சமுத்திர இரைச்சல்போலுள்ளதையும் மதிக்கவில்லை இடைகலை பிங்கலை என்று சொல்லக்கூடிய சூரியகலை சந்திரகலையாகிய சுவாச ஓட்டம் கிஞ்சிற்றேனும் கிடையாது. தேகம் பிணவியல் தான். இந்நிலையில் ஒருவர் என்னைப் பார்ப்பின் மரித்த பிணமென்றே கட்டாயம் கொளுத்திவிடுவர். (தாயுமானவரை, இராமநாதபுரம் காட்டில் மரத்தடியில் நிஷ்டை கூடிவிட்டபடியினால், அங்குள்ளோர் அவரைக் கொளுத்தி அரைகுறையாக்கிய கதி தான் எனக்கும் வந்து சேரும்). நம்முடையநிலை பக்கத்திலுள்ளவருக்குத் தெரிந்திருப்பின் பங்கம்வராது. ஐம்புலக் கதவையடைத்து, தத்துவ நிலைகளைக் கடந்தாகிவிட்டது. இப் பூவுலகத்தை விட்டும், ஸ்தூல தேகத்தை விட்டும்; பிரம்மாந்திர அதிரகஸ்ய பெரிய உலக துரியவெளியில் ஆத்மாவாகிய நான் தனித்திருப்பதைக் கண்டேன். கண்டவன் எவனெனக் கருதிட தனித்தேன்.

மௌனம், .... ... ... மௌனம், ... ... ... மௌனம்.

"தெய்வீகம்" என்பது என்னுள்ளே உருவெடுத்துவிளங்க ஆரம்பித்துவிட்டது. எனக்குள்ளே ஒரு புதிதான சக்தி பிறந்திருக்கிறது. இப்பொழுது நான் ஆனந்த பரவசனாயிருக்கிறேன். நான் கெஞ்சிக் கூப்பிட்ட குரலுக்குத் தயவுள்ள தெய்வங்கள் இப்பொழுதுதான் மறுமொழி பகர்ந்தன. என்னுடைய துக்ககரமான பெரிய யாத்திரை முடிந்தது. இனிமேல் சிறப்பான ஒரு யாத்திரை ஆரம்பித்துவிட்டது. இந்த துரிய உலகிலிருந்து எனக்குக் கீழே எத்தனையோ மார்க்கங்களைக் காணுகின்றேன். அந்த மார்க்கங்களெல்லாம் ஒன்றிற்கொன்று வெகு தூரத்திலிருந்தாலும், கடைசியாக இந்த உபசாந்த இடத்திற்கு வந்து சேர்ந்தேயாக வேண்டும்.

ஏதோ ஒரு பெரிய சம்பவம் நேரிட்டது. திடீரென்று காற்று அசைவற்று நின்றுவிட்டது. இடியும் மின்னலும் கூடிய புயற்காற்று பலமாய் வீசிக்கொண்டிருக்கும் போதே திடீரென்று நின்றுவிட்டால்

எப்படியோ அத்தகைய எதிர்பாராத நிச்சப்தம் ஏற்பட்டிருக்கின்றது. ஞானக் கோயிலின் திருக்கதவு திறக்கப்பட்டதால், எங்கும் சாந்தம் பரவியிருக்கின்றது.

சாதாரணமாகத் தூங்குங் காலத்தில் அதாவது கருவி கரணங்களெல்லாம் அடங்கி நிற்கப்பட்ட சுழுத்தியில் பிராண வாயு மாத்திரம் வெளிவந்தும் உட்புகுந்தும் உலாவிக் கொண்டிருக்கின்றது. ஏனெனில் உடற் காவலாகும் அப்பிராணவாயுவும், போக்கு வரத்தின்றி நீங்கியிருக்குமானால் மரண மடைந்த தென்று உரிய பந்துக்கள் தகனம் பண்ணுதவற்கு முன்பே, நாய் நரி முதலியவை பட்சித்துவிடுமென்று உடலைக் காத்துக் கொண்டிருக்கிறது. காவலாக யிருக்கும் அப்பிராண வாயுவும் அழிந்து விட்டபடியினால் உடல் பிணக்கட்டையாய் விட்டது.

பராபர வஸ்துவின் தரிசனம் கிடைத்தது. ஒன்றாயிருந்தக் காட்சி, ஒன்பது வாசலுக்குள் அரண்மனையில் கொலுவிருந்த அரசக் காட்சி, இதை யாவரும் காணலாம். இதைப் பற்றி சொல்ல ஆவல் எனினும் யார் யாரைப் பற்றி சொல்வது? அப்படி நான் சொல்லிக் கொண்டே போனால் சொல்லுவது மாயையின் தொழிலாக வன்றோ முடியும். நான் எந்த ஒன்றை அறிந்ததாக இவ்வனுபவத்தை எழுதுகிறேனோ, அது அறியப்படாத தல்லவோ; இது தான் இரவு பகல் அற்றவிடம்.

பல்லாயிரம் மைலுக்கு மேல் ஆகாச வெளியில் ஒருவன் ஸ்தூல சூட்சும தத்துவங்களைக் கடந்து ஆகாயத்தின் நடுவிலிருக்கப்பட்ட கடம் அல்லது ரசக்குண்டு போல சின்மாத்ர வடிவமாக மஹாக கனத்தில் இருந்து பார்த்தால் எப்படியிருக்கும்? கீழும் ஆகாசம், மேலும் ஆகாசம், சுற்றிலும் ஆகாசம், ஆங்கு கீழ் மேல் என்பதில்லை. இருள் என்பது இல்லவே இல்லை. இராப் பகல் என்பது இல்லை. சுகம் துக்கம் என்பது இல்லை. தாகம் என்பதில்லை.

புதியதோர் உற்சாகமும் நம்பிக்கையும் என்னுள் பொங்குகின்றன, என் மனதில் இதுவரையில் இல்லாத தைரியம் பிறந்திருக்கிறது, அந்த எல்லையற்ற அகண்ட ஆனந்தத்தின் இனிமையானது என்னுள் ஊடுருவிப் பரவியிருக்கின்றது துக்கத்திற்கு முடிவான சிரேஷ்டமான மோக்ஷத்தைக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற

ஆவலால் மறுபடியும் ஆனந்த சமுத்திரத்தில் மூழ்குகின்றேன். ஆண்டவனருளால் ஞானராஜ்யத்தில் அடிவைத்திருக்கின்றேன். அங்கே அனேக அற்புதக் காட்சிகளைக் காண்கின்றேன். அருள் மழை பொழிகின்றது. இன்புவூற் றெடுக்கின்றது.

C C C

## 38. அருட்சோதி கண்டால் இருட்சாரா நம்மை

எனது வாழ்நாளென்ற பொய்யைக் கடந்தவிடம், பூரண புராதனன் இருப்பிடம். சிதாகாசம், எல்லையற்ற பெருவெளி, வெட்டவெளி. அந்தரத்தில் உலகத்தையே கண்ணாகக் கொண்டுள்ள கண்ணால் பார்த்தால், எப்படித் தானிருக்கும்? அந்த இடத்தைப் பற்றி எழுதுவதென்றாலோ மனம் மலங்குகின்றது, மயிர்க் கூச்செறிகின்றது. எழுது கோலோ மேற்செல்லவில்லை.

**அருட்பெருஞ் ஜோதி ..... .... அருட்பெருஞ் ஜோதி**
**தனிப்பெருங் கருணை.... .... அருட்பெருஞ் ஜோதி**

நான் என்பதைக் காணேன். ஒளி.... ஒளி. அந்தப் பேரொளி தான் புலப்பட்டது.

இது தான் சிதாகாசப் பெருவெளி, சுயம்பிரகாசச் கடவுள், ஆனந்த நடராஜர் நிருத்தம் செய்யுமிடம். இதுதான் தலைவனைத் தரிசனம் செய்யுமிடம். இதுதான் பிரணவப் பொருள், இதுதான் ஞானசபை, இதுதான் சர்வசாட்சி. இதுதான் ஆன்மப் பிரகாசம். இயன்ற வரையில் விவரிக்கின்றேன். அவ்வாகாசம் எப்படி இருந்ததெனில், இருளுமல்லாத ஒளியுமல்லாத அதாவது இரவும் பகலும் சந்திக்குமிடமாகிய இரணிய வேளை ஆகாயத்தைப் போலிருந்தது.

பகவானே உலக முழுவதையும் தாங்கியும், சூழ்ந்தும் நிற்பதைக் கண்டேன். இவ்வுலக முழுவதும் பகவானால் நிரம்பி யிருக்கின்றது. எனது ஆன்மா பேரின்ப வசப்பட்டது. எனது உள்ளத்தோடு ஓயாது கடும்போர் புரிந்ததின் பயனாக பெற்ற வெற்றியிது. இறைவனை மெய்ப் பொருளாகவும் எங்கும் பரந்துள்ள உயிராகவும் ஞான வடிவாகவும் நான் கண்டேன்.

சாக்கிர காலத்திலும், சொப்பன காலத்திலும் சுழுத்தி காலத்திலும் துரிய காலத்திலும் எவன் இவைகளை

அறிந்திருந்தானோ, அவனே நானானேன் (உள்ளது நிலைக்க ஒன்பது தேங்கா யுடைக்கவேண்டுமா? என்பது தகப்பனார் பழமொழி) என்னை நான் பார்ப்பதற்கு இத்தனை பிரயத்தனங்களா? சாக்கிர, சொப்பன, சுழுத்தி கடந்த துரியம், துரிய வெளியாகிய சிதாகாசத்தில் பார்த்த வெளியையும் அதன் உள்ளொளியையும் கண்டபின்பல்லவோ, சந்தேகம் நீங்கி திடப்பிரக்ஞ இனி என்னை ஒருவரும் மாற்றவோ மறைக்கவோ முடியாது. இனி என்னைப் பற்றி சந்தேகிக்க இடமில்லை. அவ்வனுபவத்தால் உலகம் எல்லாம் நானேயானேன். இனி இந்தக் கட்டை எப்படி ஆடினாலும், பாடினாலும், எனக்கென்ன? இனி உலகம் என்னைப் புகழ்ந்தென்ன! இகழ்ந்தென்ன? நான் என்றும் போகாத இடத்திற்குப் போனேன். காணாதவனைக் கண்டேன். களி கொண்டேன். வெளியில் ஒளியாய் நடுநாயகமாய் நின்றது தான் சோதி. இதுதான் **துரியவெளி.**

இதில் அதிக நேரமிருந்தேன். இங்கு ஓம் என்று உச்சரித்த ஆள் கிடையாது கடவுளுடைய அருள் விலாச அதிரகஸ்ய கண்காட்சி உலகமானத்தினாலும், இவன் தனித்திருப்பதினாலும், அதிலும் இது முதல் தடவையான படியினாலும், இதிலேயே எங்கு ஆழ்ந்து மூழ்கிவிடுவோமோ என்று கிஞ்சித்து சந்தேகமுண்டாகி அஞ்ஞான தேகத்துள் புகுந்து ஸ்தூல உலகிற்கு வர ஆசையுண்டாகிவிட்டது. பாராமல் பார்த்திருந்த ஒன்றுபட்டவேலை, இரண்டுபட்டு விட்டது. தன்னை விட்டுத் தலைவனை விட்டு, ஒன்றாக இருப்பதை விட்டு, இரண்டுபட்டேன். எனது அனேக பிறவிகளிலும், இந்தப் பிறவியிலும் என்றும் கண்டும் கேட்டுமிராத அதியற்புத புதிய உலகத்தில், பிரபஞ்சத்தில் எனக்கென்றுள்ள ஸ்தூல தத்துவம், சூட்சும தத்துவம், எல்லாம் போய் நிராதவராய் நூதன மாகப் புகுந்து நிற்பதால், இங்கே இருந்தபடி இப்படியே இருந்துவிட்டால் என் செய்வது என்னும் ஐயப்பாடுண்டாகி விட்டது.

களக்கமறப் பொதுநடனம் கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்து காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பி யுதிர்ந்திடுமோ
வெம்பாது பழுக்கினும் என்கரத்தி லகப்படுமோ
கொளக்கருது மலமாயைக் குரங்கு கவர்ந்திடுமோ
குரங்கு கவராதெனது குறிப்பி லகப்படினுந்
துளக்கமற வுண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ
சோதிதிரு வுளமெதுவோ ஏதுமறிந்திலனே (அருட்பா)

---

வெளிவர வேண்டுமென்று விருப்பம் வந்துவிட்டது. ஆனால் முடியவில்லை, வரவே முடியவில்லை. மனிதன் ஸ்தூல சூட்சும தத்துவங்களெல்லாம் இறந்த நிலைமையில் பிராணனற்றுக் கிடக்கும்போது எப்படி வர முடிகின்றது. தெய்வ ப்ரம்ம பிரயத்தனத்தின் மேல் உத்தேசித்த ஒரு மணியாகிய பின்பு தான் ஸ்தூல தேகத்தில் சம்பந்தப்பட்டு வெளிவந்துலாவுகின்றேன். ஆனந்தப்பட்டேன். எனது தாயாருக்கு உடனே இவ்வாச்சர்யத்தைச் சொன்னேன். அதற்கு தாயார் அருந்தவம் சொன்னதாவது கண்டவர் விண்டிலர் கமலவின் பத்தின்காட்சி என்று பரிகாசம் செய்து, விண்டவர் கண்டிலர் என்று சொன்னாள். கண்டவர் சொல்லாமல் எப்படி முன்னோர்கள் காட்சியடைந்தார்களென்று கேட்டேன். வடலூர் இராமலிங்க சுவாமிகள் காட்சிக் கண்ணி பாடியிருப்பதின் நோக்க மென்னவென்று கேட்டவுடன், மௌனமாயிருந்து விட்டு, நீ பேச்சுக்காரன், உன்னிடம் பேச முடியாதென்றாள்.... இப்பதவி அடைய சுமார் ஒன்றரை வருஷகாலம் இடைவிடாப் பிரம்ம பிரயத்தினம் செய்தேன். தாயுமானார் கேடிலிங்கம் பிள்ளைக்கு முடிவாக உபதேசித்த போது, கேடி லிங்கம் பிள்ளைக்கு ஐயப்பாடுண்டாகி, நான் அப்படியே ஆங்கு ஆழ்ந்து மூழ்கிவிட்டால் என்ன செய்வேன்? என்று திகைக்க தாயுமானார் அதற்குத்தான் இவ்வளவு பாடு என்று சொல்லி

நீயற்ற அந்நிலையே நிஷ்டைஅதில் நீயிலையோ
வாயற் றவனே மயங்காதே – போயற்
றிருந்தாலும் நீபோகாயென்று முள்ளாய் சும்மா
வருந்தாதே இன்பமுண்டு வா. (தாயுமானார்)

என்றார்.

C C C

## 39. சந்தேகமற்றது விந்தையதாகும்

முன்னம் எனக்குண்டான சந்தேகத்திற்கு ஷை பாசுரம் பின்னர் திடத்தைத் தந்தது. மேலும் மேலும் அனுபவத்தில்........ மீண்டும் மீண்டும் அனுபவிக்கும் நிலை எனது பிரயத்தன மில்லாமலே.........

இங்கே தான் சாந்தியும், நிம்மதியும், சகலமும் மறந்ததோர் ஆனந்தமும் குடிகொண்டுள்ளன. நான் எத்தனையோ காலம் தேடிக்காணாத ஆனந்தம் இந்த இன்பவீட்டில் காணக்கிடைக்கின்றது.

என் மனதில் சந்தோஷமும் நிம்மதியும் தங்கி நிற்கின்றன. எவ்வளவு காலம் இந்த ஆனந்த வீட்டில் தங்கியிருந்தேனென்பது எனக்குச் சொல்ல முடியவில்லை அம்மம்மா! அஞ்ஞானமோ எதுவோ என்னை முன்போலவே முயற்சி செய்து வெளிவந்துவிட்டேன். ஐயோ நான் ஏமாந்து போனேன். தெய்வங்களுடைய கேலிக்கு ஆளாகும் வண்ணம் நடந்துவிட்டேன். இனி இம்மார்க்கமன்றி வேறு மார்க்கத்திற்கு விதியில்லை போலும்,

அன்பர்குறை முடிக்கின்ற வரசேயுன்னை
யணைந்துநிதம் சுகிக்கின்றே னடிமைமேலும்
துன்பமறுந் துரியநிலை கண்டுயானும்
துயர்காணேன் களிக்கின்றேன் துறையேயென்னை
நன்குறவே குருதுரியம் தன்னில் வைத்தால்
நன்மையது மிகவாகும் ரமணணே யென்
கன்மமெலாம் போகவருள் நோக்கம் வைத்த
கருணைக்குக் கடைநாயேன் கைம்மாறென்னே!

இவ்வாறெல்லாம் செய்து நீவிர் கண்ட பயன் யாது என்பீரேல்.

குண்டலி சக்தி, உலக வாசனைகளை யெரித்து, தன்னை ஜோதி ரூபமாகப் பார்க்கும்போது, யோசித்தாலும் உலக வஸ்துக்களின் ஞாபகம் வருவதற்கில்லை. உலக மறதியும் மறைதலுமே மனம் நாசம் அடைந்ததற் கடையாளம். முக்காலத்திலும் உள்ளது இந்தப் பிரகாசந்தானென்றுணர்ந்து தன்னைப் பிரகாசரூபமாகக் கண்டது தான் பலன்.

இனி எனக்குப் பிரணவத்தை உச்சரித்து கண்மூடிப் போகும் யோகம் வேண்டியதில்லை. ஞானம் வேண்டியதில்லை. போனது போக நின்றது அதுவே.

விருத்தம்

அன்றுகல் லால்மரத் தடியினீ நால்வருக்
கறிவித்த ரகசியத்தை
அகமுகத் தனுதினமு நானா ரெணத்தெரிந்
தேகவெளி யாகவுணர்நீ
என்றுபுகல் சூட்சும மென்னென்று சொல்லுவேன்
ஏழையான் என்றென்றுமே
என்னிதய வுணர்வினால் நானா ரெனத்தெரிந்
தேகதுரி யங்கண்டனன்

---

நன்றுகண் டிடவுநான் காணாது போய்மோன
வஞ்சவெளி யாகினின்ற
நாயக னாம்துரியன் மானிட னாய்வந்து
திரிகின்ற தேனவிலுவாய்
சென்றுபல வுலகுபுகழ் அருணைமக ரிஷிரமண
திவ்யஅவ தாரமாகி
திருவரு ளடைந்திட்ட மோனமுறு மெஞ்ஞான
தேசிக சிரோரத்னமே.

கடவுளிடம் பாராட்டும் பக்தியும் யோகமும் ஞானமும் ஆன்ம தரிசனத்தோடு முடிவடைகின்றது.

உலகமே இந்த ஜோதியினால்தான் விளங்குகின்றது. அது தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இத்திருக்காட்சியை ஊனக் கண்ணால் பார்க்க முடியாது. ஞான உதயத்தில் ஞானக் கண்ணால் தான் பார்க்க முடியும். இப்படிப்பட்ட அபரோட்ச ஞானத்தில் சகல சந்தேகங்களும் நிவிருத்தியாகின்றது.

அக்கடவுளின்பத்தை ஒருதரம் ருசித்தபேருக்கு உலக இன்பங்கள் யாவும் சிறிதளவேனும் ருசிக்காது.

முயற்சியைப் பொறுத்து சிலர் ஒரு வருஷத்திலும் சிலர் பத்து வருஷத்திலும், பயன்பெற்றதாக அனுபவ சாஸ்திரங்களில் பார்த்திருக்கிறேன். எனது அனுபவத்தில் ஒன்றரை வருஷத்தில் தியானஸித்தியைப் பெற்றேன்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரை அவர் சீடர் பிரம்மானந்தர், "நான் துரிய அனுபவமென்னும் இந்த அரிய சமாதி நிலையை அனுபவித்த பின்னர் பலநாள் முயன்றேன். அது கைகூடவில்லை. காரணம்மென்ன? வென்று கேட்டார். அதற்கு அப்பெரியார், "நீ இரவு பகலாக அந்த அனுபவத்திலேயே மூழ்கிக்கிடப்பையாயின் அன்னையினுடைய கருமங்களை பின் யார் தான் செய்வார்? உன்னுடைய வேலை நிறைவேறியபின் அந்நிலை உன் உளத்துத்தானே வந்து அடையும்" என்று சொன்னார். உதயமான சூரியன் தன் பெருமையைத் தானே விளக்குவது போன்று ஆன்மதரிசனம் அடைந்தவர்களது பெருமையை அவர்களது புனிதமே விளக்கிக் காட்டும். அப்பெரியார்களுடைய சன்னிதானத்தை அணுகுகின்றவர்களுக்கு சாந்தியும், தெளிவும், இயல்பாகவே

உண்டாகும். வாய்திறந்து பேசாதிருக்கினும் அவர்களிடத்திருந்து பொலியும் அருள், மக்கள் மனத்தகத்துள்ள மாசை நீக்க வல்லதாகும் என்றும் பெரியார் சொன்னார்.

C C C

## 40. சிந்தைகெட்டு சிவமான இடம்

இவ்வதிசய சக்தியை மானிட ஜென்ம மெடுத்தவர்கள் அனுபவிக்கலாம், சிவமாயிருக்கலாம், பார்க்கலாம், எனது மிகுந்த சாதனமான இடைவிடாத அப்பியாச அனுபவகாலத்தில், ஓர்நாள் நீண்டநேரம் சொரூபத் தியானத்தோடிருந்த அதே நிலையில் திண்டு தலையணையுடன் அமர்ந்தபடி ஆனந்த நித்திரையில் ஆழ்ந்திருந்த சமயம், திடீரென கண்விழித்து உட்கார்ந்தேன். பகல் ஒரு மணியிருக்கும். ஆச்சர்யம்! ஆச்சர்யம்!! எதிரிலுள்ள செடி கொடிகள், கட்டிடங்கள், ஜன்னல்கள், சாமான்கள் நன்றாக கண்ணுக்குத் தோன்றுகின்றன. தோன்றினாலும் நான் யென்ன யூகித்தும் நான் எந்த இடத்தில் எந்தவூரில் உட்கார்ந்திருக்கிறேன் என்பதை எவ்வளவு சிரமப்பட்டு யூகித்தும் ஒன்றுமே நினைக்கவும் முடியவில்லை. நினைவிற்கு கொண்டு வரவும் முடியவில்லை. மஹா அற்புதம்? அற்புதம்!! இதுதான் "சிந்தைகெட்டு சிவமான இடம்" இது இந்த ஜென்மத்தில் ஒருநாளும் நான் கண்டிராத விந்தையல்லவா? இப்படி சுமார் முக்கால் மணி நேரம் இருந்திருக்கலாமென நினைக்கிறேன். ஆனால் இது ஒரு அரிய நிலையென்று மாத்திரம் தோன்றுகிறது. ஏதோ உள்ளே நினைந்து உணர வேண்டிய கருவியொன்று செயலற்று ஆண்டவனிடம் போய்விட்டதாக நினைக்கின்றேன். இந்நிலையிலுள்ள போது ஒருவர் என்னைப் பார்த்து விட்டால், வெகுவேடிக்கை யாகத்தானிருக்கும். என்ன வேடிக்கை? மிறள மிறள விழிக்கும் சித்தசுவாதீனமில்லாத ஓர் அசல் பைத்திய மென நினைப்பார்கள்.

C C C

## 41. தேன் போலினிக்கும் தெய்வத் தூக்கம்

இரவில் முந்தின நேரத்தில் சொரூப சமாதியில் சுமார் மூன்றுமணி நேரம் இருந்தேன். பின்பு இரவு ஆகாரமில்லாமலே சொரூப நிலை விட்டு ஆனந்த நித்திரையிலிருந்துவிட்டேன். ஆ! ஹா! அந்த நித்திரையின் பெருமையை என்ன சொல்லுவேன்? இது சாஸ்திரத்தில் கூறிய அரிதுயிலாக இருக்கலாமோவென்று நினைக்கின்றேன். அவ்வானந்த நித்திரையின் பெருமையை என்னால் வாயினால் வருணிக்கத் தெரியவில்லை. அனுபவித்தோர்கட்குத் தான் உண்மை தெரியும் தேனாற்றில் இந்த மனத்தையும் தேகத்தையும் ஆத்மாவை யும் ஆழ்த்தி தோய்த்துத் தோய்த்து எடுத்தால் எபபடி இனித்திருக்கு மோ அப்படியிருந்தது அந்தப் பேரானந்த மயம் என்னும் ஆனந்த சமாதி.

மனிதன் தெய்வத்தன்மை பெறுவது தான் யோகம் ஞானம் என்றும், மனத்தைக் கடந்த நிலையிலுள்ளவர்களைத் தான் விஞ்ஞானிகளென்றும், பேரறிவுள்ளவ னென்றும் தேவர்களென்றும் சாஸ்திரம் சொல்லுகிறது.

C C C

## 42. சினிமாக் காட்சியில் சிந்தை நொந்தது

நான் அடிக்கடி சென்னைமாநகருக்குச் செல்வதுண்டு ஆங்கு ஞான அனுபூதிச் செல்வர்களாகிய சுப்பையா சுவாமிகள், குப்புசாமி சுவாமிகள், திருவல்லிக்கேணி கார்டன் பிரஸ் புரோப்ரைட்டர், ஸ்டாண்டர்டு என்ஜீனீயரிங் வர்க்ஸ் பிரோப் அவர்களுடன் சம்பாஷிக்குங் காலங்களில், சொரூப நாட்டத்துடனே சம்பாஷித்துக் கொண்டிருப்பேன். ஓர் நாள் இரவு மவுண்ட் ரோடு கெயிட்டி தியேட்டரில் ஏகாக்கரத்துடன் பக்த துருவன் சினிமா பார்த்துக் கொண்டிருக்கும்போது, திடீரென்று எதிர்பாராதபடி பிராணனின் ஓட்டம் நின்றுவிடுவதற்குரிய அறிகுறிகள் ஏற்பட்டது. (சந்தேகமாகயிருந்தது) அதாவது, நித்திரை ஒருவருக்கு எப்படி வலிய வருமோ அதே போன்று; அதீத நிலைக்குப் போக யத்தனமாய்விட்டது என்ன செய்வேன். இயற்கை, தொடர்ந்த அனுபவத்தினால் மேல்நிலைக்கு இழுக்கிறது. இடம் வேறு ஆனதினால் திருடன் சுவரில் கன்னம் வைத்து உள்ளே தலை நீட்டியதும் வீட்டுக்காரன் திருடன் தலைமயிரைப் பிடித்து

---

டம்பம் எல்லாம் வம்பேயாகும்

உள்ளே இழுக்கவும், இதைக் கண்ட துணைத் திருடன் வெளிப்புறம் அவன் இரண்டு கால்களைப் பிடித்திழுக்கவும், நடுவிலுள்ள திருடன்கதி என்னவாகுமோ? அந்நிலையில் தான் நான் அவஸ்தைப்படுகிறேன். அந்தோ பரிதாபம்! ஏதோ திக்குமுக்கல் கொண்டவன் போல் அவஸ்தைப்பட்டேன் கொஞ்சம் ஏமாந்து, அந்நிருவி கற்பநிலை கூடி மூடிவிடின், சினிமா நின்றவுடன் ஏதோ அனாதிப்பிணமென்று அடக்கம் செய்துவிடுவார்களே? என பீதியுண்டாயிற்று, எனது விலாசத்தையோ நிலையையோ ஒரு விபரத்தையோ மடியிலோ ஜோபிலோ வைத்திருந்தேனில்லை. சிறிதளவு சமாளித்துக் கொண்டு அந்நிலையைக் கலைக்க வேண்டிதுள்ளிக் குதித்து எழுந்தோடி வெளியில் கீழண்டை பக்கம் வந்து கை கால்களை நன்றாயுதறியும் வேகமாக குறுக்கும் நெடுக்கும் உலாத்தியும் பிராண சக்தியை நன்றாக தேகத்தில் வியாபிக்கும்படி செய்து மாற்றி பழய ஸ்திதிக்குக் கொண்டு வர பதினைந்து நிமிஷங்கள் வரை ஆயிற்று. இம்மாதிரி சம்பவங்கள் சென்னையில் சினேகிதர் ராஜமாணிக்கம் வீட்டுத் திண்ணையில் துயிலுவதெனக் காண்பித்து சொருப தியானத்திலிருந்த காலத்திலும் இப்படி நேர்ந்து சமாளிக்கப்பட்டது. இப்படி ஆறு ஏழுதடவை வெவ்வேறு இடங்களில் சமாளிக்கப்பட்டது.

C C C

## 43. உயிர்விடுங் காட்சி உணர்வதற்கோர் சாட்சி

**தொ**டர்ந்த சொரூப நாட்டத்தில் இரண்டு மூன்று நாளிருந்துவிட்டு பின்பு குமாரகுடி ரைஸ் மில்லிற்குப் போய் மாலை மூணரை மணிக்கு கணக்குகளை பரிசோதித்துக் கொண்டிருந்தேன். மில் வேலைசெய்து கொண்டிருக்கிறது என்றுமே என்னாயுளிலேயே கண்டிராத மாதிரி திடீரென்று பிராணன் விடுபடும் நிலைபோலிருந்தது. கணுக்கால் வரையில் பிரா்ணன் விட்டுக் கொண்டு வந்தது, நன்றாகக் தெரிந்தது, பின்னும் கொஞ்ச நேரமானவுடன் முழங்கால் வரையில் பிராணன் விடுபட்டுக் கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது. பிராணன் விடுபட்டுள்ள பாகத்தை சரிசெய்ய மில்லில் சூடான தண்ணீர் வடிந்துகொண்டிருக்கும் தொட்டியில் முழங்கால் வரையில் இரு கால்களையும் வெந்நீரில் கொஞ்ச நேரம் வைத்திருந்தேன். சரியாகவில்லை, முழங்காலுக்கு மேலும் பிராணன் விட்டுச் சென்றது.

உடனே மில் கணக்குவேலை ரெத்தினம் பிள்ளையிடம், சைகிளைக் கொடுத்து, சேத்தியார் தோப்பிற்குச் சென்று மூன்று சோடாபாட்டில்கள் வாங்கி வரச் சொன்னேன் உடனே வாங்கி வந்தார். சாப்பிட்டும் குணம் தெரியவில்லை மணி ஆறு ஆகிவிட்டது பிராணன் இடுப்பிற்கு சமீபம் வரையிலும் விடுபட்டுக் கொண்டிருந்தது. எனக்குச் சந்தேகந்தான். ரெத்தினம் பிள்ளையைக் கூப்பிட்டு? "எப்படியேனும் இந்த தேகத்தை பின்னலூரில் வீட்டில் கொண்டு போய் போட்டு விடுங்கள்" என்று சொல்லிவிட்டேன். உடனே அவர் துரிதமாகச் செல்லும் நல்ல மாட்டுவண்டி ஒன்றில் என்னை அமர்த்தினார். வண்டி வந்து கொண்டிருந்தது இரவு பத்து மணியிருக்கும் சேத்தியார் தோப்பில் ரோட்டு ஓரம் சர்க்கஸ் கம்பெனி நடந்துகொண்டிருந்தது. அவ்விடம் வண்டி வந்தவுடன் இடுப்புவரையில் பிராணன் விட்டு வந்தது திடீரென்று எதிர்பாராத விதமாய் அடி பாதம் வரையில் கீழே பிராணன் வியாபித்து விட்டது. பழய பூரண சுகத்திற்கு வந்துவிட்டேன். தொடர்ந்து வண்டி பின்னலூர் வீடுவந்து சேர்ந்தது. அதற்குள் வீட்டிலுள்ளோர்கள் எல்லாம் உண்டு உறங்கிக் கொண்டிருந்தனர். நான் அவர்கட்கு நடந்த இவ் விஷயங்களைச் சொல்லாமல் படுக்கைக்குப் போய்விட்டேன். இது எந்த யோகக் காட்சியில் சேர்ந்ததோ எனக்கு இன்னமும் தெரியவில்லை. சாஸ்திரம் ஒன்றிலும் இம்முறையைக் காணோம், இந்தப்படி இதுவரையில் பிராணன் விடுபடுங் காட்சியும் கிடைக்கவில்லை.

## 44. பவத்தைக் கடக்கத் தவத்தைச் செய்க

மனிதன் அருட் காட்சியைக் காண்பதும், தேவனாகும் மர்மமும், இந்நிலையிலேயுள்ளது. மனிதனின் மனம் கீழ் நோக்கி தாழ்ந்துள்ள தீய பல எண்ணங்களால் கீழ்நிலை யடையும் போது வாழ்க்கை கீழாகும். மனிதனின் மனம் மேல் நோக்கி உயர் நலம் அமைந்த லட்சியத்தில், நல்ல எண்ணத்துடன் மேல் நிலையிற் சென்றால், வாழ்க்கை மேலாகும். இது தான் மனிதனின் வாழ்க்கை மேலோங்குவதற்கும் தாழ்ந்து போவதற்கும் உள்ள ரகசியம். இதையுணர்ந்து சொரூபத் தியானத்தைச் செய்க.

ஆன்ம சோதியைப் பெற்று *அழியா* இன்பம் பெற சுயமுயற்சியின்றி அருளையடைய எதிர்பார்ப்பது ஒருநாளும் பலிக்காத

காரியம்: விடா முயற்சியால்தான் கைகூடும். இதுதான் நேர்வழியும், இயற்கை வழியும், அனுபவ வழியுமாகும். நீ உண்முகத்தில் செல்லச் செல்ல உன் உள்ளம் வரவரத் தானே பழுக்கும். அவசரத் தினாலாவது எதுவுமில்லை. காய் முதிர முதிரத்தான் கனியாகி சுவைப்பயனை அளிக்கும். அது போன்றே உள்ளத்தைத் தூய்மை ஆக்க ஆக்கத்தான் அருட்கனி தானே பழுக்க, அருட்சோதி தானே பிரகாசிக்கும். இவ்வருட் சோதி உனக்குக் கிடைக்குமென ஓர் நம்பிக்கை வை. நம்பிக்கை வீண்போகாது. இந்த நன்நம்பிக்கை முடிவில் சோதி வடிவைத் த[illegible] வேறொன்றும் இல்லா தாகி தானே எங்கும் பிரகாசிக்கும்.

C C C

## 45. முக்தர்கள் விரும்பும் மோனக் கரும்பு

திருவரு ணிலை பெற்று முக்தராக வேண்டிய ஜனகாதி நால்வர் மூன்றரைக் கோடி வருஷம் கல்லால விருட்சத்தினடியில் தென் முகமாகச் சின்முத்திரையுடன் மௌனமாக வீற்றிருந்தருளிச் செய்த தெக்ஷணாமூர்த்தியின் முகத்தைப் பார்த்து ஜீவாத்மாவை பரமாத்மாவிற் பொருத்தி முக்தரானார்கள் என்பதை நோக்க மௌனத்தின் பெருமை இனிது விளங்கும்.

"மோனமென்பது ஞானவரம்பு" என்றும் மௌனம் சர்வார்த்த சாதகம் என்றும் பெரியார்கள் கூறியுள்ளார்கள் ஆகவே மௌனம் ஒன்றினாலயே இகபர மிரண்டிற்கும் வேண்டிய எண்ணுதற்குரிய அரும்பெரும் சித்தியடையலாமென்பது செவ்வனே விளங்குகின்றது. மௌனத்தில் வாக்கு மௌனமென்றும், காயமௌனமென்றும், மனோ மௌனமென்றும் மூன்று வகையுள்ளன. இம்மூன்றினுள் மனோ மௌனமோ சாலச் சிறந்தது. ஆழ்ந்த மனோ மௌனத்தினாலேயே மிக்க மனோ வன்மையையும், ஆன்மப் பிரகாசகத்தையும் அடையக் கூடும். இம் மௌனக் குகையிற் பிரவேசித்துச் செல்லும் வரையிற் சென்று, நிற்கும் வரையில் நின்று பெரு நெறியைச் சாதித்தவர்க்கே மனது கவலையற்றுக் குளிர்ந்து உண்மையுணர்ச்சி யடைவதுடன், அருட்சத்தி, தெய்வநிலைக்கு உயர்த்தியும், எதிர்பாராத எல்லாம் வல்ல பெரும் சித்தியையும் அருள்விக்கும்.

மௌன நிலையிலிருப்போன் மனதைக் கண்ணாடி போன்று மாசறச் சுத்தமாக வைத்துக்கொள்வான். இந்நிலையிலிருப் போனைப்

பார்த்தல் ஏழையைப் போலும், ஒரு சக்தியும் அற்றவனைப் போலும், தோன்றுவன். இம்மௌனம் செய்யும் வேலையை வேறெதுவும் செய்யாது. இத் தொழிலிலிருப்போன் உலகத்தைப் பகைக்கவாவது, வெறுக்கவாவது செய்யான். இம் மௌனம் இவனுக்கேயன்றி உலகத்திற்கும் பெரிய நன்மையைச் செய்கிறது. இந்நிலையில் நிற்போனுக்கு அளவற்ற தன்னடக்கமும் பொறுமையும் தானே வந்தமையும்.

மௌன நிலையின் உயரிய உண்மையினை அடைய விரும்புவோன் தர்க்க வாதங்களை விட்டுச் சொரூப அனுபவமுடைய பெரியார் எழுதிய சாஸ்திரங்களை மாத்திரம் பார்க்க வேண்டும். அன்னான் அவற்றுட் கூறியவாறு அனுஷ்டித்தால் சகச நிஷ்டையெனும் மௌனநிலைதானே கைவல்யமாகும். தைல தாரைபோல் தொடர்ந்த மௌன அப்பியாசமே நிருவிகற்ப நிஷ்டையாய் முடியும். தத்துவ சாஸ்திர விசாரணை வாயிலாக நான் யார், என் உள்ளமார், என் ஞானமார் என ஒவ்வொரு வஸ்துவையும் நன்றாகச் சோதித்து அவ்விசார மெல்லாவற்றிற்கும் இருப்பிடம் மனமே என்று நிர்ணயித்து எதிரிட்டுத் தோன்றும் மனதை மாய்த்து, அம் மனமிறந்த இடத்தை அறிந்து, மனமிறந்த இடத்தில் விளங்கும் வஸ்து பிரம்ம வஸ்து வெனத் தெளிந்து, அகண்டாகாரமாய் எங்கும் நிறைந்தவனாய்த் தன்னையறிவன், எங்கும் வியாபகமான தன்னைத் தவிர வேறொன்றுமில்லாத விடத்து எதனால் எதைப் பார்ப்பன்? யார் யாரை உபாசிப்பன்? மனமற்றுத் தானானவிடத்து மௌனமின்றி மற்றொன்றும் பெறுவதற்கில்லை.

ஜீவபோத சேட்டையின்றி ஊமை, செவிடு, குருடுபோன்று நினைப்பு மறப்பு நீங்கி விழிப்போடு அணுவளவும் பாவனையெழாது காண்பான் காட்சி காணப்படு பொருளற்று உள்விழிப் பார்வையால் அறிவாகிய அகண்டாகார ஆன்மாவில் அசைவற்று அதிசயமின்றி நிற்பதே சமரச ஆனந்த மௌனமாகும்.

C C C

---

அளந்து பேசு, வீண்பேச்சு பேசாதே

## 46. காட்சி கண்டவர்களின் சாட்சியீதாகும்

பளகிலா தோங்கும் பளிங்குமா மலையே
வளமெலா நிறைந்த மாணிக்க மலையே
மதியுற விளங்கு மரகர மலையே
வதிதரு பேரொளி வச்சிர மலையே
உரைமனங் கடந்தாங் கோங்கு பொன்மலையே
துரியமேல் வெளியிற் சோதிமா மாலையே.
(அருட்பெருஞ் ஜோதி அகவல்)

காட்டை யெலாங் கடந்து விட்டேன்
நாட்டை யடைந் துனது
கடிநகர் பொன் மதிற் காட்சி
கண் குளிரக் கண்டேன் (அருட்பா)

ஆதி யந்தமு மில்லாதோ ரம்பலத் தாடும்
சோதி தன்னையே நினைமின்கள்

சோதி மலையிற் கண்டே னின்னைக் கண்களிக்கவே
துய்த்தே னமுத மகத்தும் புறத்தும் பரிமளிக்கவே.




துரியமலை மேலுளதோல் ஜோதிவள நாடு;
தோன்மதில் ஐயர்நடம் செய்யும்மணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணில் உயிரோடு
செத்தவர் எழுவாரென்று கைத்தாளம் போடு! (அருட்பா)

விளையுஞ் சிவானந்த பூமி – அந்த
வெட்டவெளி நண்ணித் துட்டஇருளாம்
களையைக் களைந்துபின் பார்த்தேன்–ஐயன்
களையன்றி வேறொன்றுங் கண்டிலேன் தோழி
சங்கர சங்கர சம்பு (தாயுமானவர்)

ஈசனரு ளாற்கடலில் யேற்றதொரு ஓடம்
ஏரிக்கரை யேறினே னிருந்ததொரு மாடம்
தேசுறும் மாடநடு தெய்வமணிப் பீடம்
தீபவொளி கண்டவுடன் சேர்ந்தது சந்தோடம் (திருவருட்பா)

நவகுண்ட மானவை நானுரை செய்யின்
நவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானும்
நவகுண்டத் துள்ளெழு நன்மைக ளெல்லாம்
நவகுண்ட மானவை நானுரைப் பேனே (திருமூலர்)

பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற அப்பொருள்
உச்சிக்குங் கீழது உண்ணாவுக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. (திருமந்திரம்)

உச்சிக்கு நேரேயுண் ணாவுக்கு மேல்நிதம்
வைத்த விளக்கு எரியுதடி
அச்சுள்ள விளக்கு வாலையடியவி
யாம லெரியுது வாலைப் பெண்ணே. (வாலைக்கும்மி)

கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துப்
பண்ணாக்கி வைத்த பழம்பொரு ளொன்றுண்டு. (ஓர் பெரியார்)

பரயோக அனுபவத்தே அகம்புறந் தோன்றாத
பரஞ்சோதி யாகும்.

காணுகின்ற கண்களுக்குக் காட்டுகின்ற ஒளியாய்க்
காட்டுகின்ற ஒளிதனக்குக் காட்டுவிக்கும் ஒளியாய்

திருவருட் பிரகாச வள்ளலார் **"அருட்சோதி தெய்வமென்னை ஆண்டுகொண்ட தெய்வம்"** என்றும், மணிவாசகப் பெருமான் **"சோதியே சுடரே சூழொளி விளக்கே"** என்றும், திருநாவுக்கரசு சுவாமிகள் **"திகழொளியை சோதியுட் கடராய்த் தோன்றி"** என்றும், திருமாளிகைத் தேவர். **"ஒளிவளர் விளக்கே"** என்றும், திருமூல தேவர் **"சோதித்த பேரொளி"** என்றும், சேக்கிழார் சுவாமிகள் **"அலகில் சோதியன்"** என்றும், இன்னும் பற்பலவாறு பெரியார்கள் கூறியுள்ளார்கள்.

C C C

## 47. சகலமும் உணர்த்தும் சன்மார்க்க போதனை

1. **அ**தி காலையில் நான்கு மணிக்கே படுக்கையை விட்டு எழுந்திரு. இந்த நேரந்தான் ஈஸ்வரத் தியானம், ஜெபம், தோத்திரம் இவை கட்கு மிகவும் ஏற்றது.

2. **ஆசனம்**, சுகாசனத்திலேனும், பத்மாசனத்திலேனும் கிழக்கு அல்லது வடக்கு நோக்கி அமர்ந்து இஷ்ட தெய்வத்தை அனுக்கிரகம் செய்யும்படி பிரார்த்தித்து புருவமத்தியில் இலட்சியம் வைத்து மந்திரத்தை மூணரை மாத்திரை நீட்டி மானஸீகமாய் இயன்றவரை ஜெபித்து வரவும். கூடுமானால் முகூர்த்த காலத்திற்கு மேற்படலாம். அனுபவ சித்தியானால் சும்மா இருக்கப் பழகுதல் நலம்.

3. **மந்திரம்**, உன் மனதிற்கிசைந்த அடியிற் கண்டுள்ள ஏதேனும் ஒரு மந்திரத்தை தினந்தோறும் 108-க்கு மேற்கொண்டு ஜெபிக்கலாம்.

**எதையும் யோஜித்துச் செய்**

மந்திரங்கள், ஓம் ஓம், ஓம் சிவாய நம: ஓம் நமசிவாய, ஓம் சரஹணபவ, ஓம் நமோ நாராயணாய, ஓம் நமோ பகவதே வாசுதேவாய, ஸ்ரீ ராம் ராம், சீதாராம், காயத்திரி இவைகள். "மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்".

4. **தியான இடம்** : தியானத்திற்கு மிதமான காற்றுள்ள அறை வைத்துக்கொள். அவ்வறை சுத்தமாக இருக்க வேண்டும். வேறொருவரும் அதில் பிரவேசித்தல் கூடாது. அவ்வறையில் இஷ்ட தெய்வங்களின் படங்கள், மஹான்களின் படங்கள் அமைத்தல் நலம். தியானத்தில் அமருமுன் மனதிற்கு அமைதியளிக்கும் தசாங்கப் புகை, பரிமள வத்திகள் முதலியவை எரியும்படி செய், பகல் நித்திரை கூடாது. சாதனை காலத்தில் மூலாக்கினியில் உஷ்ணம் அதிகரிப்பதைத் தணியச் செய்ய தியானத்திற்கு முன்பு ஒரு விழுங்கு ஜலமும் தியான முடிவில் மூன்று விழுங்கு ஜலமும் உபயோகித்தல் நல்லது.

5. **ஸ்நானம்** : பிராதக் கால ஸ்நானமே மேல். வேர்த்தால் குளி. ஞானாப்பியாசி ஸ்நானத்திற்கு நல்லெண்ணை மேலுக்கு உபயோகித்தல் கூடாது. அது தியானத்தைக் கெடுக்கும். ஆகவே பஞ்சகற்பம் ஸ்நானத்திற்கு உபயோகித்தல் நல்லது. பஞ்சகற்ப மென்பது, நெல்லிமுள்ளி, கசகசா, கஸ்தூரி மஞ்சள், வேப்பம் பருப்பு, கார்போக அரிசி இவைகளை அரைத்து வில்லைதட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு வேண்டும்போது, பசும்பாலில் கரைத்து உபயோகித்துக் கொள்ளவும். தியான உஷ்ணத்தைத் தணியச் செய்யும்.

6. **ஆகாரம்** : அரை வயிறு ஆகாரம், கால் வயிறு ஜலம், கால் வயிறு காற்று சஞ்சரிக்கும்படி விடு. ஆகாரத்தை ஔஷதம்போல் நினைத்துச் சாப்பிடு. பசித்தால் புசி, பால் பழம் தியானத்திற்கு அனுகூலமானவை. அதிக காரம், அதிக புளி, வெள்ளைப் பூண்டு, வெங்காயம், எண்ணை, கடுகு, பெருங்காயம் இவைகளை விலக்கு. சாத்வீக ஆகாரம் புசித்தல் நலம். மிளகு, சீரகம், கீரை வகைகள் அதிகமாகச் சேர்க்கலாம். பசு வெண்ணை தாளிக்கலாம். போஜனமருந்திய பின் வெந்நீரருந்த வேண்டும். ஆகாரமே மனத்தின் குணமாகும்.

7. **படித்தல்** : அனுபவ ஞானிகள் செய்த முதல் நூலாகிய

---

ஞானவாசிட்டம், பகவற்கீதை, கைவல்லியம், தாயுமானவர், பட்டினத்தார், அருட்பா, தேவாரம், திருவாசகம், பக்த விஜயம், இவை முதலியன.

8. **சத்சங்கம்** : தீயோரிணக்கத்தை விலக்கி சத்சங்கத்தை நாடு. கெட்ட பழக்கங்கள் கூடாது.

9. **சத்தியநிலை** : எவ்வித கஷ்டத்திலும் உண்மையே பேசு. எப்பொழுதும் உனது பேச்சு நடத்தை எல்லாம் உயரிய நோக்கமுடையதாக இருத்தல் வேண்டும். மிதமாகவும் இனிமையாகவும் பேசு. மேலும் உன் வசனங்கள் யாரையும் மனதைப் புண்படுத்தும்படி நேராமல் அதி ஜாக்கிரதையாக பேசக் கற்றுக்கொள். பிறர் குற்றம் விசாரியாதே. பதில் சொல்ல இஷ்டமில்லாவிட்டால் மௌனமாயிருந்துவிடு.

10. **மனநிலையும் உபாசனையும்** : மனமென்பது கடிவாள மில்லாத பொல்லாத எடக்குக் குதிரையை யொத்தது எண்ணங்கள் உதிக்குமிடத்தை நோக்கி மனத்தை மாய்த்து அறிவென்னும் கடிவாளத்தைக் கைப்பற்று. இருவினைக் கீடாக புண்ணிய விஷயத்தைப் பற்றி நிற்பது சுத்தமனது. பாவ விஷயத்தைப் பற்றி நிற்பது அசுத்தமனது - விருப்பு வெறுப்பற்று சமரச சாந்த உள்ளத் தெளிவுடன் பிராப் தீனமாக கிடைக்கும் ஆகார போகங்களை அனுபவித்து, சுத்தமனதுடனிரு. மனதை நிறுத்தி நெற்றிக் கண் திறக்க உபாசிக்கு மிடங்கள்:- 1. தனக்கு முன்னால் இஷ்ட தெய்வ உருவமோ ஞான குருவின் படமோ, ஓர் சிறிய குறியோ வைத்து அனுக்கிரகம்பெற ஊன்றிப் பார்த்தல். 2. கண்மூடி மனக்கண்ணால் புருவ மத்தியில் இலட்சியம் வைத்திருத்தல். 3. உள்ளக் குகையாம் இருதய கமல வாசியின் மேல் இலட்சியம் வைத்திருத்தல். 4. மனம் உற்பத்தி ஸ்தானமாகிய நாபியில் இலட்சியம் வைத்திருத்தல். 5. இவை எல்லாம் விட்டு அகண்டாகாரமாக பரம்பொருளை நினையாமல் நினைதல்

11. **ஜீவகாருண்யம்** : தரும சிந்தனையுடன் இயன்றவரை பசித்தவர்க்கு அன்னங்கொடு. பிறஉயிர்கட்கு தீங்கு செய்யாதே. இதுவே ஆன்மவிளக்கத்தின் அஸ்திவாரமாகும்.

12. **சக்தி** : ஆண் பெண் இருபாலரும் வீரியத்தைக் காப்பாற்ற வேண்டும். வீரியமே சக்தி, வீரியமே ஐஸ்வர்யம். வீரியமே மனது புத்தி

---

உயிர் இம்மூன்றிற்கும் சாரம். ஆனதால் ஞானப்பியாசி ஆணாயிருந்தால் பெண்ணையும், பெண்ணாயிருந்தால் ஆணையும் தீண்டுதல் கூடாது. அப்படியே நினைத்தாலுங்கூட கூடாது. (இது ஆரூடனுக்கல்ல).

13. **சாந்தம்** : எல்லோருக்கும் நல்லவனாயிரு, நன்மையே செய், இதனால் உனக்கு சிறிது துன்பங் காணினும் பின் நன்மையே பயக்கும். வழிநடையில் எத்தனைபேர் எதிர்படினும் மனதில் பதியாமல் போவது போன்று உலக விஷயங்களை உன் மனதில் பதியவிடாமல் யதார்த்தநிலையில் சாந்தமாயிரு.

14. **மௌன விரதம்** : கூடுமானால் தினம் இரண்டு மணி அல்லது வாரத்தில் ஓர் நாள் மௌன விரதமா யிருப்பதற்கென வாழ்நாளை ஒதுக்கி புனிதமாக்கிக் கொள். இது உயரிய ஞான லட்சியத்திற்கு ஓர் வரம்பாகும்.

15. **பிரார்த்தனை** : விழித்தவுடனும் சயனிப்பதற்கு முன்னும் கடவுளை நினை. எல்லாம் வல்ல தனித் தலைமைக் கடவுளே கருணாநிதியே, உமதிரு பாதார விந்தத்தை எனதிருதயத்தில் நான் என்றும் மறவாதிருக்க அருள்வீராக. உமது பாத கமலத்தில் ஸ்திரமான பக்தியையும், அழியாத செல்வத்தையும், தோன்றாத் துணையாக என்னுள்ளிருந்து நலமிகு வாழ்வையும், இஷ்ட சித்தியையும் கொடு. என் நினைவு யெதுவாயினும் என் செயல் எதுவாயினும் என் மனம் உம்மிடமே நிலைபெற்று நிற்கட்டும். உம் பொன்னடிக்கு எனது நமஸ்காரம். ஹே ஜெகதாம்பிகே! அனைத்துலகங்கட்கும் அன்னையே! என் உயிர்க்கினியஉறவே! அடியேனை ஆட்கொள்ள வந்த அன்புருவே! ஜீவர்மீது பொழியும் கருணையினால் உன் பெருமையை எண்ணுந்தோறும் நெஞ்சம் நெக்கு நெக்குருகிப் பரவசமடைகின்றது. அம்மா என் உடல் பொருள் ஆவி முழுவதும் உனக்கே சமர்பித்து விட்டேன். இனி உன் எண்ணம் யாதோ, அங்ஙனமே செய்க என்றுமழியாத ஞான ஒளியை என்னுட் பரப்புக, “உன் திருவடிக்குச் சரணம்” பேரின்ப சித்திப் பெருவாழ்வை எனக்கருளும் - என்று வேண்டுக.

*குறிப்பு* : - ஞான சக்தியை வளர்க்கும் சாதனங்களின் சாரங்கள் இவை. இவ்வமிர்தகுண போதனைகளை பிடிவாதத்துடன் அனுசரித்து நடக்க வேண்டும்.

C C C

---

மனது கடிவாளமில்லாத கழுதை

## 48. பூத உடம்பும் பூதக்கண்ணாடியும்

பூதக்கண்ணாடி (இணை குவிந்தலென்ஸ்) என்பது விஞ்ஞானிகள் தங்களது சோதிப்புத் திறனைக் கொண்டு ஒவ்வொரு நுண்ணிய செயல்களையும் மிகச் சுலபமாக செய்யத்தக்க உபகரணங்களுடன் உபயோகப் படுத்தும் கண்ணாடி வில்லை. இதன் உதவியால் கண்ணுக்கே தெரியாத மிக நுண்ணிய அணுக்களை வேண்டிய அளவு விளங்கும்படி நன்கு தெரியப்படுத்தும்.

நல்ல நடுப்பகல் வெய்யிலில் இக்கண்ணாடியைக் கொண்டு சூரியனின் கிரணங்கள் இதன்மீது நன்கு ஊடுருவிச் செல்லும் படி பிடித்து அதனடியில் மெல்லிய பஞ்சு, துணி, காகிதம் முதலியவைகளில் ஏதேனும் ஒன்றை பூதக்கண்ணாடியின் கீழ் வைத்து அதன்மேல் (ஷார்ப் போக்கஸ்) நுண்ணிய புள்ளி போன்ற பிரகாசமான ஒளியை வை பொருளின்மீது படும்படி கண்ணாடியை மேலும், கீழும் அசைத்துச் சரியாகப் பிடித்தால் சில கணங்களுக்குள் அந்த நுண்ணியப் புள்ளிபோன்ற வெளிச்சமே அப்பொருளைப் பொத்து எரியச் செய்து விடுகிறது. அந்த பூதக்கண்ணாடி இல்லாமல் சாதாரண கண்ணாடியில் நடுப்பகல் சூரியன் ஒளியில் பஞ்சு, துணி, காகிதம் முதலியன ஏன் எரியவில்லை? பூதக்கண்ணாடியும் அதனிடம் தானே ஒளியைக் கடன் வாங்கித் தருகிறது! என்ற ஆராய்ச்சி மனப்பான்மை உண்டாகிற தல்லவா? அதுதான் முக்கியமாக தெரியவேண்டிய பாகம்.

ஞாலத்தின் மீது சூரியனின் கிரணக் கதிர்கள் பலபட விரிந்து விரிகற்றைகளாக பரவி ஒரே சமமான ஒளியைத் தருகிறது. அதே வெய்யிலில் அந்தக் கிரணங்கள் நம்மேல் பட்டால் எந்த அளவு உஷ்ணத்தைக் கொடுக்கிறதோ அதே அளவுதான் அஃறிணைப் பொருள்கள் முதலாக ஆறறிவு மனிதர்கள்வரை தருகிறது; அதே சூரியனின் விரிந்த கிரணங்களைத் தான் நாம் சிறிய பூதக்கண்ணாடியைக் கொண்டு பலபட விரிந்துவிடும் ஒளிக்கதிர்களை கண்ணாடியின் நடுவே ஒன்றாக கூடும்படிச் செய்து ஒரே புள்ளியில் குவிந்திருக்க நிலைப்படுத்துகின்றோம் அப்படிச் சேரும்போது அதிக உஷ்ணத்தைக் கொடுக்கும் ஆகையால் சாதாரணமாக சூரியனின் ஒளிக்கற்றைகள் விரிந்து ஆங்காங்கு ஒரே சம உஷ்ணம் கொடுப்பதை நாம் அவ்வளவு ஒளிக் கிரணங்களையும் ஒரே புள்ளியில் கொண்டு வந்ததால் அதன் சகல உஷ்ணமும் ஒரு இடத்தில் சேர்ந்து

தகிக்கும்போது கீழே வைக்கப்பட்டுள்ள பொருள் பொத்துக்கொண்டு எரியாமல் என்ன செய்யும்? அதுதான் அதன் உண்மைத் தத்துவம்.

கதிரவனின் ஒளிபலபட விரிந்ததில் பஞ்சு பற்றவில்லை. அவ்வொளியை ஓர்முக மாக்கியவுடன் பஞ்சு பற்றிக் கொண்டது. அதுபோலவே தான் ஆத்ம சக்தியின் மனமானது நாமரூப நாட்டத்தில் விரிகற்றைகளாக மனதின் கிரணங்கள் விரிந்துள்ளன. அப்படி அவை இருக்கும் வரை (கூர்மையான) ஞான சக்தி என்பது நிச்சயம் கூடிவராது. ஆகவே அந்த ஞானநிலையை ஒரு கூரிய புள்ளி முனையில் வைத்து நிறுத்தி அதை அடைய வேண்டுமாயின் எப்படி பூதக்கண்ணாடியின் ஒளியை ஒரு புள்ளியில் கொண்டுவர சரிபார்த்து மேலும் கீழும் அசைத்துக் கொண்டு வருகிறோமோ அதுபோன்றே நிதானித்து விரிந்த மனப்பரப்பை ஒரு சக்தியில் நிறுத்த கூர்மையான நிலையில் மனதை ஒருமுகமாய் நிறுத்தல் வேண்டும்.

சாதாரணமாக சூரியனின் கிரகணங்கள் பலபட விரிந்து உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களின் மீதும் விழுந்து அதை எந்தெந்த பொருள் என விளக்குகின்றது. இதைத் தான் வெளியுலகம் என்கிறோம். அதற்கு ஞான அகராதியில் "மாயை" எனப்பெயர். அப்படி வெளியில் பரவியுள்ள ஒளிக்கதிர்கள் கீழே உள்ள பஞ்சில் பஞ்சுக்கு வெளிக்கதிர் உதவியில்லாமல் காந்தக் கண்ணாடியின்மூலம் ஒரே நுண்ணிய வெளிச்சத்தைக் கொண்டு நின்றதால் தான் அது உடனே எரியும் நிலையை அடைந்தது. அதே ரீதியில் ஆத்ம சக்தி உலகப் பொருள் பலவற்றின் மீதும் பல கதிர்களாகப் படர்ந்திருக்கும் அந்த மாயை ஒழிய, பலவற்றின் மேலும் படர்ந்திருக்கும் நமது மனோ சக்தியைத் திருப்பி ஒரே குறிக்கோள் "ஞானம்" என்ற புள்ளியில் கொண்டு வந்து சில மணி நேரங்கள் வரை வழக்கம்போல் நிறுத்தி வந்தால் அந்த ஞான சக்தியை நிச்சயம் எளிதில் அடையலாம். காணமுடியாத காட்சியைக் காணலாம். அப்போதுதான் சாந்தம் காட்டும். அதே நிலையில் நம் மனக் கண்ணாடி கொண்டு உண்ணாடிப் பார்க்கப் பார்க்க ஆங்குற்ற பரிசுத்த சொரூப நிலையை அனுபவ வழியாலேயே சகஜமாக விடாது தொடர்ந்து அனுபவிப்பது தான் ஜீவன் முக்தியும், ஞான அனுபவமும் ஆகும். இவ்வனுபவமே துரிய அனுபவத்தில் சிதாகாசப் பெருவெளியில் நிற்கும்படிச் செய்யும்.

C C C

---

## வாய் வேதாந்தம் வேண்டாம்

## 49. தெய்வவுணர்ச்சி திருவருள் சித்தி

"ஆர்க்குந் தெரியா வுருவந் தனைநோக்கி
பார்க்கும் பரமா மவன்" – ஔவைக் குறள்

அறிவென்பது அறிந்த விடத்தில் ஒளியாகி அறியாவிடத்தில் இருளாகும். ஆனால் ஒளியும் இருளும் பிறந்த இடமொன்றே. இருளென்பது உலக வாசனையிற் சிக்குண்ட மனம். ஒளியென்பது மனங் கரைந்த மௌன வியற்கதி இது இருவகைப்படும். சிற்றறிவின் வியப்பும் பேறறிவின் வியப்புமாம். இது இருட்டுக்கும் ஒளிக்கும் ஒப்பாகலாம். முன்னே அறியாமையாயிருந்த அறிவு பின்னர் அறிவாக நிற்பது அவ்வறியாமை அறிவன்றோ! முன்பின் விவகரித்த அறிவு ஒன்றிலே யொன்றி, உயிரிலே நின்று, உணர்விலே உணர்ந்து, ஒளியிலே கலந்து வெளியாகுமிடமே மெய்யறிவாம். உழைப்பே நெடுந் தவமாகக் கொண்ட உணர்வாளர், அறியாமை யென்கிற உலகை நீத்து அறிவென்கிற வெளிநாட்டத்தில் விவகரித்து விளையாடு கின்றனர். இவ் விளையாட்டே சித்தியென அறிக. சித்தியென்பது அறிவானுபவ முயற்சியின் பயன். இச்செயல்கள் தனக்குத் தோன்றாமலே விளங்கும்.

C C C

## 50. ஞானிகள் விரும்பும் ஞான ரகசியம்



**நா**ம் நமது மனம், பஞ்ச பூதவுடல், உலகம் யாவும் ஜாலவினோத மாயாகாரியப் பொய்த் தோற்றமெனக் கண்டு தெளிய வேண்டும். நீங்கள் சந்தேகிக்கலாம், தர்க்கிக்கலாம், எதைக் கொண்டு? மாயா காரிய மனத்தைக் கொண்டு, ஊன்றிப் பார்த்தால் உண்மை விளங்கும். அதற்கு நன்றாக விளங்கும் படி திருஷ்டாந்தங் கூறுகிறேன். இப்பொது எப்படி இருக்கின்றோம்? எனது நிலம், எனது வீடு, எனது மனைவி, எனது மக்கள், எனது பொருள் என்று யாருமே நமது பாசத்தால் கண்டுண்டிருக்கிறோம். ஐந்து வயதில் எப்படியிருந்தோம், எந்தப் பாசம் நம்மை கட்டுப்படுத்தியது? பந்தமற்ற, அறிவு விளங்கப் பெறாத, உருவமாக இருந்தோம். ஒரு வயதில் ஒன்று மறியாத குழந்தையாக இருந்தோம். தாயாருடைய பத்து மாத

---

கருப்பத்தில், கண், காது, மூக்கு முதலிய அவயவங்களுடன் கூடி குழவி வடிவமானோம். ஆறு மாத கருப்பத்தில் உருவம் பதிந்தும் பதியாமலும் இருந்தோம். ஒரு மாத கருப்பத்தில் பிண்ட வடிவமாக இருந்தோம். அதற்கு முன்னால் தாய் தகப்பன் சுரோணித சுக்கில வடிவமாக பனித்துளியிற் பாதி பண்டியிற் ஜல வடிவமாக இருந்தோம். அந்த பனித் துளியிற் பாதியாகவுள்ள ஜலவடிவம் தான் இப்பொழுது எனது மனைவி, எனது மக்கள், எனது பொருள் என்று கூத்தாடுகின்றது. எப்படியெனில்? மாயா காரிய ஜாலக்காரன் மாங்கொட்டையை பூமியிற் புதைத்து ஜலம்விட்டு அதன்மேல் கூடையால் மூடி அடுத்த நிமிஷத்தில் கூடையைத் திறந்து மாம்பழமும், காயும், பிஞ்சும், பூவும், தளிரும் கிளையுங் கூடிய செடியை காண்பிப்பது போல, ஜலவடிவத்தை மாதாவின் கருப்பமென்ற கூடையுள் வைத்து, கண், காது, மூக்கு, வாய், கை, கால் முதலிய அவயவங்கள் அமைத்து வேஷம் கட்டி வெளியில் தள்ளிவிட்டான். அந்தோ, கொடுமை! கொடுமை!! நம் உருவமே உண்மையாகப் பொய்த் தோற்றமல்லவா? அதிகம் சொல்வானேன். இவ்வளவும் மனத்தினால் விளைந்த மாயா காரியத் தீச்செயலேயாகும்.

நமக்கும் பகவானுக்கும் வெகு தூர மிருப்பதாக அஞ்ஞானிகள் நினைக்கின்றார்கள். சிறிது தூரமிருப்பதாக பக்தர்கள் சொல்லுகின்றார் கள். யோகிகள் அவரவர் சரீரங்களிலிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஞானிகள் தானே என்கின்றார்கள். எல்லாம் முடிந்தவர்கள் ஒன்றும் பேசாது தனக்கன்னியம் ஒன்றும் இல்லையென்று ஆன்ம திருஷ்டியில் ஆழ்ந்து மஹாமௌனத்தி லிருந்து விடுகிறார்கள்.

வீட்டிற்குள் இருப்பவன் வெளியில் இருப்பவனைப் பார்க்க வேண்டுமாயின் ஜன்னல் கதவுகளைத் திறந்து பார்க்க வேண்டிய தவசியம். ஆனால் வீட்டிற்குள்ளிருப்பவன் தன்னைப் பார்ப்பதற்கு யாதொரு உதவியும் வேண்டியதில்லை. அதைப் போல தனது ஆத்மாவைக் காண உதவி ஒன்றும் வேண்டிய தில்லை.

கடவுள் முதன் முதலில் அற்புத மாளிகை ஒன்றை (அதாவது மானுட தேகமாகிய வீடொன்றை) கட்டி முடித்ததும், இதில் யாரைக் குடிவைப்பது என்று ஆலோசித்தார். முடிவில் நாமே தான் குடியிருக்க வேண்டுமென்று தீர்மானித்து மானுட தேகத்தில் குடிபுகுந்து

கொண்டார். அதை நீ மறந்தாய் போலும், நீ உயரிய அந்தப் பெரிய பேர்வழி என்பதை மறந்து திரிகின்றாய்.

சிவானந்தன் துரியானந்தரைக் கண்டு நான் மோட்ச மடைய, கடவுளைக் காண, தன்னையறிய, அறிவு பிரகாசமடைய ஆத்மானுபவம்பெற, அணிமாதி அஷ்டமா சித்தியின் உண்மையைக் காண, மிக சுலபமான அப்பியாச மொன்றை எனக்குத் திருவாய் மலர்ந்தருளக் கேட்டுக் கொள்ளுகிறேன் என்று பிரார்த்தித்தான்.

துரி : - நீ கேட்பது உனக்குண்டாகும் துக்கத்தை நிவிருத்தி பண்ணவும் பரமானந்தப் பிராப்தியடையவும் தானே, இது மிகவும் உத்தமமான காரியம். மனிதர்கட்கு சுத்த மன தென்றும் அசுத்த மனதென்றும் இருவகைப்படும். சுத்த மனதென்பது மழை பெய்துவிட்டு மேகங்களற்ற தெளிந்த ஆகாயம் போலுள்ளது. இதில் விவேகி வேண்டுமானால் புண்ணியத்தைத் தரக்கூடிய நல்ல எண்ணங்களை மாத்திரம் உட்புகுந்து உலாவவிடுவான். இது மேலான பரமபதத்தைக் கூட்டுவிக்கும். இவனுக்குள்ள குணத்தை தேவகுணம் என்பார்கள். அசுத்த மனதென்பது கலங்கிய சேறுபோலுள்ள ஜலம்மாதிரி யிருக்கும். இம் மனதில் சதா தீயஎண்ணங்களே சுழன்றுகொண்டிருக்கும். இதனால் மேலும் மேலும் பாவகருமமே சம்பவிக்கும். இவனுக்குள்ள குணத்தை அசுரகுண மென்பார்கள்.

ஞானத்துறையி லிறங்குவோன் அறவே தீய குணத்தை விலக்கி, நல்ல குணத்தை மாத்திரம் உட்புகும்படி விடுவான். அப்பியாசம் முதிர்ந்து அனுபவம் ஏற ஏற, நற்குணத்தையுங் கடந்து நிற்குணங்களில் நிற்பான். அது சமயந்தான் அருள் பிரகாசிக்கும்.

சிவா : - உண்மை தத்துவம் விளங்கியது. ஓடும் மனதை உள்ளே ஒடுக்கும் உபாயம் ஒன்றை வியக்தமாக தெரிவிக்கவும்.

துரி : - உயரிய உத்தமமான ரகஸ்ய முறை ஒன்றை உனக்குச் சொல்லுகின்றேன். அப்பப்பா! இந்த மனதோ பொல்லாதது. "கண்டால் ஒடுங்கும் காணாவிடில் அலையும்" ஆளைப் பார்த்து ஏமாற்றும். இதையே, உளவு கண்ட வடலூர் இராமலிங்க சுவாமிகள்,

"மனம் என்னும் ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே நீதான்
மற்றவர்போல் எனை நினைத்து மருட்டாதே கண்டாய்" (அருட்பா)

---

என்று மனத்தை வெருட்டு வெருட்டென்று வெருட்டுகின்றார் உனக்கு அதி தீவிர முயற்சியும், சூட்சும புத்தியு மிருக்கின்ற படியினால் சுலபத்தில் மனத்தை மாய்க்கும் உபாயம். "பிரணவ உபாசனையைச்" சொல்லுகின்றேன் கேள். இப் புத்தகத்தின் முதலத்தியாயத்தின் முன்னுள்ள பிரணவ நடராஜரைப் பார். அதில் பஞ்ச அட்சர ரகஸ்யம் இருக்குமிடம் தேடி கண்டுபிடி. நீ தியானத்திற் கமர்ந்தவுடன் கண் மூடி மனக்கண்ணால் நடராஜரை தரிசித்து பிரார்த்தனைகளை முடி, முதலத்தியாயத்தின் தலைப்பில் பல கதிர்களின் மத்தியிலுள்ள பிரணவத்தை நன்றாகப் பார்த்துக் கொள். கண்மூடி தியானத்தி லிருக்கும் போது மனக் கண்ணால் உன் புருவ மத்தியில் நிதானமாக மூணரை மாத்திரை நீளம் பிரணவத்தை ஓ யென்று யெழுது, பிறகு அவ்வெழுத்தின் மத்தியில், ம் என்று எழுது. இப்படி எழுத மூணரை மாத்திரை காலம் சென்றதுபோல, அதே நேரம் சும்மாயிருந்து மீண்டும் பிரணவத்தை முன்போலவே எழுது, நிறுத்து, எழுது, தியானத்தில் இதே தொழிலாக வைத்துக்கொள். (பலனை ஒன்றும் கோரி எதிர்பாராதே)

முதலில் சாதாரண அப்பியாசி சிறு உருத்திராட்சமணி (அல்லது) துளசிமணி 108 - மணிகொண்ட ஜெபமாலை கையில் பிடித்து, காலை மாலை தனித்து உட்கார்ந்து கொண்டு பிரணவத்தை முற்கூறியது போல 108 - க்கு குறையாமல் செய்தால் போதுமானது. இதற்கு உடைச் சுத்தம், உடற் சுத்தம், மனச் சுத்தம் தான் பத்தியம்.

அதி தீவிர அப்பியாசிக்கு ஜெபமாலை வேண்டியதில்லை, காலங் கணக்கில்லை. நினைத்த நேரமெல்லாம் கணக்கில்லாமல் முடிந்தவரையில் உபாசித்து நிறுத்தலாம்.

இப்படி சில மாதங்கள் உபாசனை செய்துவரின், முயற்சியைப் பொறுத்து சொற்பனத்தில் சொல்ல வொண்ணாத அனேக திருவருட் காட்சிகள் தகப்பன் சாமியாகிய முருகபிரான் பிரணவப் பொருளாக நின்று ஆட்கொண்டு, அருள் செய்வார். இதை பிரத்தியட்சத்தில் காணலாம். அவனுடைய வாழ்க்கையையே வேறு விதமாக மாற்றி அமைப்பார். அவன் பெருமை என்னால் சொல்லொணாதது.

இப்படி நிற்குணக் காட்சியைக் கண்ட அபரோட்ச அனுபவிக்கு பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மும்மூர்த்திகளும் வாசற் படியில் காத்திருந்து வேலை செய்வார்கள். இதில் சந்தேகங்கொள்ளாதே. நம்பிக்கை வை. அவ்வருட் சக்தி உன்னை அடைந்தால், உலக பொருட் சக்தியெல்லாம் அவ்வருட் சக்திக்கு உட்பட்டதே. நீ ராஜா தான் ஜனக

ராஜன் தான், எல்லாம் உன் காலடியில் வந்து கிடக்கும். இதைவிட உனக்கு வேறென்ன வேண்டும்?

உன் யதார்த்த நிலையில் சகஜஸ்திதியுடன் கூடி நீ உலக நடையில் புகும் ஒவ்வொரு நல்ல காரியத்திற்கும், முன்னும் முடிந்த பின்னும், ஒரு தரம் மனக்கண்ணால் எழுதிவிடுவெற்றி உன் கையில். உன் அருட் பார்வை பட்டவுடன் பேய், பிசாசம், பில்லி, சூன்யம், பிணி யாவும் பறக்கும். இ∴தொன்றையே உன் வச்சிராயுதமாக வைத்துக்கொள். உன் இஷ்ட சித்தியை அடைவாய்.

சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

C C C

அஞ்ஞானத்தோடு ஆயிரம் வருஷம் வாழ்ந்திருப்பதை விட, ஞானத்தோடு ஒரு நாளாகிலும் வாழ்வது மிகவும் மேலான தல்லவா?

சுடுகாட்டு அக்னி பிணங்களை மாத்திரமே கொளுத்தும், மனத்தின் கவலையோ பிழைத்திருக்கும் மனுஷ்யனையுங் கொளுத்தும்.

இனிப்பான தேன் ஓர் பானை நிறைய உள்ளத்தில் ஒரு துளி விஷம் கலந்த மாத்திரத்தில் குடிப்பதற்கு இன்பமாக இருந்தாலும், அது பிராணனைத் தொலைத்துவிடும். அது போல் விஷய சுகம் இன்பத்தைக் கொடுத்தாலும் அது அளவில்லாத துக்கத்தைக் கொடுக்குமாயின் ஏன் அதை விலக்கக்கூடாது.

நீங்கள் சிலமாத காலம் அல்லது சில ஆண்டுகள் ஒரு ஞானி, யோகி அல்லது பக்தருடன் வசித்திருக்க வேண்டும். நீங்கள் அவருடன் நெருங்கிப் பழக வேண்டும். அவருடைய வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்களைக் கவனிக்க வேண்டும். அப்பொழுதுதான் அவரை நீங்கள் அறிதல்கூடும்.

பந்தமின்மை யென்பது மனதைப் பற்றியே யன்றி, சரீரத்தைப் பற்றி யல்ல. சிம்மாசனத்திலுட்கார்ந்திருக்கும் ஒரு மனிதன் பந்தமில்லாம லிருக்கலாம். கிழிந்த துணிகளை உடுத்திக் கொண்டு வரும் மனுஷ்யன் பந்தத்தோடிருக்கலாம்.

சிலர் வைகுண்டம், கைலாசம், பிரம்மலோகம் முதலிய இவற்றை அடைவதுதான் மோக்ஷமென்கிறார்கள். அது வேத விரோதமும்

அஞ்ஞானத் தன்மையுமாகும். ஆகாயத்திலாவது பின் பக்கத்திலாவது, பாதாளத்திலாவது, பூதலத்திலாவது மோட்சம் என்பது இல்லை. சங்கற்பத்தை ஒழிப்பதனால் சுத்தமான சொரூபத்தின் உணர்வே மோட்சம்.

உண்மை ஞானம் வரும் வரையில், சகல பந்தங்களையும் கடக்கும் வரையில், தன்னுடைய யதார்த்த நிலை தெரியும் வரையில், எங்கும் ஒரே சமபாவனை வரும் வரையில், இரு தயத்திலுள்ள துக்கம் நீங்கும் வரையில், இருதயம் சுத்தமாகும் வரையில், சொரூப நாட்டத்தை விடக்கூடாது.

சாமியாகட்டும் பூதமாகட்டும் சுவர்க்கமாகட்டும் நரகமாகட்டும் எதற்கும் மருளாதே, உன்னை வெல்ல எந்த சக்தியாலும் முடியாது. நிர்க்குணத்தில் நாட்டம் வை. பரமாத்மாவே உன் வேலையைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார். சரீரம் நீயல்ல, சித்தம் நீயல்ல, சித்தம் காட்சிகாண உபயோகமாகும் ஒரு கருவி, மேலே போ உன்னை நீ அறிந்துகொள். உனக்குள்ளும் எனக்குள்ளும் ஒரே மாதிரியாய் விளங்குவது அந்த பிர்மமே. அந்த பிர்மத்தை தரிசனம் செய்.

இச்சையுள்ளவன் துக்க நிவர்த்திக்காக சமுசாரம் விட வேண்டுமென்று நினைப்பான். இச்சையில்லாதவன் துக்கமில்லாமலேயிருந்து சமுசாரம் விடவேண்டுமென்கிற நினைவே யில்லை.

யௌவன புருஷனானவன் ஸ்திரீ போகம் எப்போ வருமென்று இச்சித்திருப்பானோ அப்படியே ஞானாப்பியாசியும் மோட்சம் எப்போது வருமென்று இச்சிப்பன். போகம் மோட்சம் இரண்டிலும் இச்சையற்றவனே சாட்சாத்காரமான பிரம்மம் - அவனே மகாத்மா.

ஞானப்பியாசி ஒருவன் மனதிலே என்னேரமும் பாவனை பண்ணுவன். மற்றொருவன் பாவனை பண்ணாதிருப்பான். இந்த இரண்டும் விட்டவனே முக்தி சுகத்தை யடைந்தவன்.

"சாந்தமும் அமைதியும் குடிகொண்டுள்ள அந்த ஆனந்த நிலையில் நாம ரூபங்களெனும் அலைகள் இறந்தொழிகின்றன.

பாலிலே நெய் இருக்கிற தென்பது தேர்ந்தெடுத்த உண்மை. ஆனால் எவ்வளவோ முயற்சிக்கு மேலே பாலில் தோய்ந்துள்ள நவநீதத்தைத் திரட்டி எடுக்க வேண்டும். இவ்வளவு பிரயத்தனமும் கடவுள் விஷயத்திலும் வேண்டும்.

---

வெறுத்தவனுக்கு வேண்டாமல் கிடைக்கும்

நமது உள்ளத்துத் திடீரெனத் தோன்றும் எண்ணங்கள் நம்மை ஆட்டிவைக்க முடியாதபடி அவைகளை அடக்கியாள வேண்டும்.

நிர்வாசனையாயுள்ள ஞான தீரனாகிய சிம்மத்தினிடத்தில் விஷய வாசனை யென்கிற யானை போகுமானால், அக்கினிப் பந்தலில் வெண்ணைப் பதுமை விளையாடின முடிவு தானாகும்.

சாந்த புருஷனானவன் சகல விவகாரத்திலே இருந்தாலும் சுகமே அனுபவிப்பான். சுகமாகவே வருவன். சுகமாகவே போவன். சுகமாகவே படுத்துக் கொள்வன். சுகமாகவே பேசுவன். சுகமாகவே அனுபவிப்பன்.

தைரிய புருஷனானவன் யெங்கும் சுகமாகயிருப்பான். எதேச்சையாகச் சஞ்சரிப்பன். வனத்திலிருந்தாலும் சனங்களிடத் திலிருந்தாலும் சரியாகப் பார்ப்பான்.

அறிந்தும் அறியாதிருப்பன், பார்த்தும் பாராதிருப்பன் சொல்லியும் சொல்லாதிருப்பன். இப்படிப்பட்ட நிர்வாசனை யுண்டானவனுக்கு இணையொருத் தருமில்லை.

வாழ்க்கையே ஒருவகைப் போர்க்களந்தான்! மனம் துளியேனும் கலங்கவேண்டாமென்றார் பெரியோர். போர்வீரனைப் போல ஒரு சிரிப்பு சிரித்துவிட வேண்டும்.

ஞானப்பியாசி முதன் முதல் தன் தேக திடத்தைக் கவனிக்க வேண்டும். குறிப்பிட்ட அளவுக்கு சரீர பலம் வேண்டுவது மிக அவசியம். சரீரத்தை அலக்ஷியமாக எண்ணாதிருக்க வேண்டும். இந்த நம் சரீரம் மிகவும் பெருமைவாய்ந்த இறைவனது திருக்கோயிலாகும். இது ஏதோ ஒன்றை அடைவதற்கே இப்பூமியில் ஜனித்துள்ளது என்று எண்ண வேண்டும்.

கடவுளை அடையும் பொறுப்பு நமக்கு அதிகமாக யிருப்பதால், அப்பொறுப்பினை ஏற்பதற்கென அளவற்ற பலமும் களங்கமற்ற பரிசுத்தமும், நம்மிடம் உறுதியான நம்பிக்கையும், இறைவனிடம் குன்றாத பக்தியும், அருளும்படி இறைவனை சதா பிரார்த்திப்போமாக.

ஆத்ம ஞானம், வாழ்வினை முற்றும் மாற்றிவிடுகிறது. இவ்வாத்ம ஞானம் அடையப் பெற்றவர் தமது வாழ்வினை மாற்றிக் கொள்வதோடு ஏனையோரது வாழ்வினையும் தலை கீழாக மாற்றியமைக்கின்றனர்.

---

ஆன்ம வெளிச்சம்தான் நமது கடவுள்

நாம் ஆண்டவனைக் காணவில்லையானால் அது நமது அறியாமையாலேயே.

ஒரு பெரியாரிடம் போய் ஒருவன், தான் நற்கதியடைய வழியென்னவென்று கேட்டான். அதற்குப் பெரியார், இன்றே இப்பொழுதே நற்கதியடைந்துவிட்டாய். இவ்வுண்மையை நம்புதலே நற்கதியடையும் வழியாம் என்று மறுமொழி கூறினர். அதன்படி நம்பி தன் வாழ்க்கையை இன்ப வாழ்க்கை யாக்கி நடந்து நற்கதியடைந்தான்.

தன்னில் தானாய் அமர்ந்திருப்பவன், பரமானந்தத்தை அனுபவிக்கின்றான். அவன் செல்லுமிடமெங்கும் சுவர்க்கத்தை தன்னோடு கொண்டு போகிறான்.

வெளியுலகினின்று ஒன்றையும் வேண்டாதவனுக்கு சாந்தியுண்டாகிறது. தன்னையே மனத்தால் அற்பணம் செய்பவன் கடவுளோடு கலந்துவிடுகிறான்.

பத்தினி பக்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கிட சிதைவுகள் செய்பவர்
அத்தமு மாவியும் ஆண்டொன்றில் மாய்ந்திடும்
சத்திய மீது சதானந்தி ஆணையே (திருமந்திரம்)

கற்புடைய ஸ்திரீகள், பரமனடியார்கள், ஞானிகள், இவர்களை மனம் நோகும்படி அதிக்கிரமம் செய்பவர்களுடைய தேகமும் அதிலுள்ள உயிரும் வருஷம் ஒன்றில் அழிந்துவிடுவார்களென்று மேலே திருமூலர் சொல்லுகிறார். ஆனால் ஞானிகள் தனக்கு இடையூறு செய்பவர்கட்காக, வீணாக அழியப் போகின்றார்களே என்று இரக்கப்படுவார்களே தவிர அவர்கள் கெட நினைக்கவே மாட்டார்கள்.

C C C

## 51. காலன் என்பதும் ஜாலக் கூற்றே

கருட புராணத்திலும் ஆத்ம புராணத்திலும் மரணாவஸ்தை எழுபத் திரண்டாயிரம் தேள்கள் கொட்டுவதற்கு நிகராயிருக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது மக்கள் உள்ளத்தில் அச்சத்தை உண்டுபண்ணி அவர்கள் மோட்சத்திற்கு வழிதேடுமாறு வற்புறுத்தவே சொல்லப்பட்டதாகும். மரண காலத்தில் சிறிதும் துன்பம்

இல்லையென்று ஞானோதயம் பெற்ற ஆத்மாக்கள் ஒருமித்துக் கூறுகிறார்கள். மரண காலத்தில் அவர்களுக்கு ஏற்பட்ட அநுபவத்தை அவர்கள் தெளிவாக விளக்குகிறார்கள். இந்த ஸ்தூல சரீரமான பெரும் பாரத்திலிருந்து நீங்கவிட்டதாகவும், அதிலிருந்து பிரியும்பொழுது பூரண அமைதியை அநுபவித்ததாகவும் அவர்கள் சொல்லுகிறார்கள். மாயையானது இந்த உடம்மைப் பற்றிய வீணான அச்சங்களை உண்டுபண்ணுகிறது. அது அதன் இயற்கையாகும். மரணத்தைப் பற்றி அஞ்ச வேண்டாம். நீ அமரன் - அழிவற்றவன்.

C C C

## 52. தோத்திரம் செய்தால் ஆத்திரம் போகும்



திருவட் பிரகாச வள்ளலாரென்றும்
வடலூர் – ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்.

---

அதுவானால் அதுவே சொல்லும்

ஒருதரம் படிக்கி லுடற்பொறி கரணம்
ஒய்ந்து உயிரனுபவங் கூடும்,
இருதரம் படிக்கி லெண்ணிலாச் சித்தி
யேய்ந்தரு ளனுபவங் கூடும்
மறுதர மதையே முத்தரம் படிக்கில்
மண்ணிறை யனுபங்கூடும்,
கருதரும் வள்ளல் கனிவுட னுரைத்த
கவினருட் பாவிலோர் கவியே. (பெரியார்)

அருட்பா

தீராத துயர்க்கடலி லழுந்தி நாளுந்
தியங்கியழு தேங்குமிந்தச் சேய்க்கு நீகண்,
பாராத செயலென்னே யெந்தா யெந்தாய்
பாவியென விட்டனையோ பன்னாளாக,
ஏராய வருள்தருவா யென்றே யேமாந்
திருந்தேனே யென்செய்கேன் யாரு மில்லேன்,
சீராருந் தணிகைவரை யமுதே யாதி
தெய்வமே நின்கருத்தை தெளிந்திலேனே

உண்ணாடும் வல்வினையா லோயாப் பிணியுழந்து
புண்ணாக நெஞ்சம் புழுங்குகின்றேன் புண்ணியனே
கண்ணாளா வுன்றன் கருணை யெனக்களிக்க
எண்ணாயோ வையா எழுத்தறியும் பெருமானே.

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெலாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிரா தியவெல்லாம் உவந்தெனக்கே யளிப்பாய்,
வடலூர் சிற்றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுண்
மணியேயென் குருமணியே மாணிக்க மணியே,
நடனசிகா மணியேயென் நவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே.

திருவிளங்க. காயெலாம் கனியென, நினைந்து நினைந்து,
வாழையடி வாழை. படமாட்டேன். உண்ணாடும்.
சங்குடையான். பூமாந்தும். தெருவிடத்தே. (அருட்பா)

இப்படிப்பட்ட சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய மது ரங்கனிந்த பிரார்த்தனைக் குரிய சில அற்புத பாடல்களை தேர்ந்தெடுத்து, மனனம் பண்ணி, முதலில் தியானத்திற் கமர்ந்தவுடன், வாய்விட்டு பத்து பாடல்கள் வரையில் பாட்டின் உள்ள தத்துவ உணர்ச்சியுடனும் மன அமைதியுடனும் பாடி பிரார்த்தித்து பின்பு மௌனமாகி மனதை

உண்முகத்தில் (அந்தர் யோகத்தில்) திருப்பினால் வெகு சுலபமாக மனம் வயப்படும். இதன்படி அனுபவித்தால் உண்மை விளங்கும்.

கடவுள் நாமத்தை உச்சரியுங்கள். அவர் புகழைப் பாடுங்கள். நீங்கள் கடவுளை அறிவீர்கள். இந்த யுகத்தில் இதுவே மிகவும் எளிய முறை. இதனை ஒழுங்காகவும் நியமமாகவும் செய்ய வேண்டும். (வள்ளலார்)

C C C

## 53. ஞானிகள் செய்யும் ஞாலத் தொழில்கள்

வசிஷ்டர் கர்மிஷ்டராயிருந்தார்; ஜனகாதிகள், சந்நியாசிகளாயிருந்தார்கள்; நாரதர், பக்தியில் மூழ்கியிருந்தார்; சுக்கிரர் காவியங்களைச் செய்தார்; வியாசர் சாஸ்திரங்களை நிர்மாணம் செய்தார்; ஜனகா, அரசனாயிருந்தார், ஜடபரதர் தியாகியாயிருந்தார். சிலர் தேவதைகளை ஆராதனை செய்கிறார்கள். சிலர் இந்திரியங்களை எல்லாம் அடக்கி சமாதியில் யிருக்கின்றார்கள். சிலர் இந்திரியங்களையும் தேகத்தையும் வாடும்படி தபஸ் பண்ணுகிறார்கள். சிலர் தங்கள் சீடர்களுக்கு ஸ்பஷ்டமாக விளங்கும்படி போதனை செய்கிறார்கள். சிலர் சபையோர்கள் முன்னிலையில் எதிரிகளுடன் வாதாடுகின்றார்கள். சிலர் சதாகாலமும் பித்தர்களைப் போல திரிகின்றார்கள். சிலர் உலகத்தாரால் நிந்திக்கக் கூடிய கிருத்தியங்களையும் செய்து வருகின்றனர். இவர்கள் எல்லோரும் ஞானிகள் என்று வழங்கப்படுகின்றனர்.

C C C

## 54. வந்த வேலை என்ன? சிந்தனை செய்து பார்

ஒரு மனிதனுக்கு வாழ்நாட் கடைசியில் ஜீவனுடன் தொடர்வன புண்ணியம், பாவம் இரண்டு தான்.

உலகில் நல்லார் பொல்லார் இரண்டு. ஆகவே எல்லோருக்கும் நல்லவனாயிரு. நன்மையே செய். பொய், சூது, வாது, பொறாமை, கொலை, புலை, களவு, அகங்காரம், கோபம் இவைகளை இன்றேவிடு. இல்லேல் சன்மார்க்க சத்திய நெறி தவறி மறைந்து அகக்கண்மூடித்

தாழ்ந்த பல ஜன்மங்களை எடுத்து இழிந்த பல துன்பங்களை அனுபவிக்க நேரிடும்.

உன் தடபுடலும், முறுக்கும், தடிப்பும், திமிரும், தனக்கு நிகரில்லையென யெண்ணும் அகங்காரமும் எம்மட்டில்? நல்ல இரத்தங்குறைதலாலோ, நோய்வாய்ப்படுதலாலோ, மனம் நொந்து வேதனைப்படும் சமயம் ஒன்றுமே இயலாது.

இவ்வுலகில் உனக்கு எது சொந்தம் சொல். ஏமாந்து விடாதே! நீ இவ்வுலகில் கற்பகோடிகாலமிருப்பதாக எண்ணி மறந்து மகிழ்ந்து மனத்தால் கட்டும் ஆகாயக் கோட்டை நிலைக்குமா? ஆழ்ந்து சிந்தித்துப்பார்.

என்னதான் எண்ணிக்கொண்டு இப்படி வாழ்நாளை வீணில் போக்குகின்றாய்? யாருக்கோ இதைச் சொல்லுவதாக எண்ணாதே; இவ்வளவும் இதைப் படிக்கும் உனக்குத்தான், நீ யோசிப்பது தெரிகிறது.

எது உத்தமமான உயரிய வழி, அதைப் பின்பற்றலா மென்பது தானே?

ஒருவழியும் கடைப்பிடிக்க வேண்டாம். ஒருவருடைய மனத்தையும் உன் வாழ்நாளில் வருத்துவதற்கு இடந்தராமல் நன்றே நினைக்க அதுவுமில்லாவிடின் சும்மா இருந்தாற் போதும். சும்மா இருக்க சுகம் வந்தெய்தும். சத்திய வாழ்வே கடவுள் வழிபாடாகும், மனம் மொழி மெய்யனைத்தையும் சத்தியத்தின் பால் ஒப்படைப் பவனைக் கடவுள் தாமே வந்து சாருகிறார்.

C C C

## 55. மாயாவிநோத மாளிகைக் காக்ஷி

கருவூரைச் சேர்ந்த பண்டித புரத்தில், ஓர் மாயா வினோத மாளிகையுள்ளது. இது ஏதுமில்லாதவன் உதவியைக் கொண்டு சுக்லாச்சாரி, சுரோணி தாச்சாரி இவர்களால் மூலக்கால் நிறுத்தப்பெற்று அழகிய அமைப்பில் செய்து முடிக்கப் பெற்றதாகும். இவ்வினோத மாளிகையில் இப்பொழுது ஒரு பெரிய பிரபுவினுடைய குடும்பம் இருந்து வருகிறது. பார்வைக்குத்தான் அவர் பிரபுவே ஒழிய,

---

சந்தேகத்திற்கிடங்கொடாமல் ஜாக்ரதையாய் நட

அதிகார மெல்லாம் அவர்வீட்டு அம்மா கையில்தான். இக்குடும்பக் காட்சியைக் காண நீங்கள் மிகவும் சிரமப்பட வேண்டியதில்லை. சிறிது உன்னிப்பாய் கவனித்தால் நமது தேகமே அவ்விநோத மாளிகை என்ற குட்டுவெளிப்பட்டுவிடும். இவ்விநோத மாளிகையில் **தலைவன், தலைவி, தாதிகள், புத்திரர்கள், காவற்காரர்களாகிய** வீரர்கள், இவர்களின் **பணிவிடைக்காரர்கள்,** மற்றும் பல பரிபாரங்களு முள்ளன. விசாரிக்கப்புகின் மிக்க சம்சாரியான குடும்பமே இக்குடும்பம் என்பது தெரியவரும்.

இக்குடும்பத்தை ஆழ்ந்து நோக்கின் மாயாமயக்கத்தினால் ஓயாக்கவலை கொண்ட எல்லையற்ற தொல்லையாகவே தோன்றும். கவலை நிறைந்த அதை சுத்த நித்திய தரித்திரத்தில் மூழ்கின குடும்பமெனவே நினைக்கலாம்.

இந்த தரித்திரம் பிடித்த மாளிகைக்குத் தினந்தோறும் குளித்தல், புசித்தல், அசுதியை வெளிப்படுத்தல் முதலிய வைகளால் பழுது பார்க்க வேண்டும். ஒரு நாளைக்கு கவனிக்காவிட்டாலோ களைத்து இளைத்து, மெலிந்து வாடிவிடும், கண்பஞ்சடையும், காது கேளாது, கால்கள் சோர்ந்துவிடும். ஆகவே இந்த நித்திய தரித்திரம் பிடித்த மாளிகையைக் காலந்தவறாது ஒவ்வொரு நாளும் குறைவில்லாது பழுது பார்த்துப் போஷணை செய்து தர வேண்டும்.

இவ்விநோத மாளிகையானது இரண்டு கால் நிறுத்தி, அதன் மேல் வீடுபோல் கட்டப்படும், ஜன்னல்கள் போல் **கண், காது, மூக்கு, வாய், மலத்துவாரம், நீர்த்தாரை** முதலிய ஒன்பது துவாரங்கள் அமைக்கப்படும். வீட்டினின்று சாக்கடை வெளிப்படுவது போல **கண்பீளை, காதுக்குரும்பி, மூக்குச்சளி, வாயிலின்றுவரும் ஊத்தைக்கோழை,** மலஜலத்துவாரங்களால் **மலஜலம்** முதலியன வெளிப்படுகின்றன. மலஜலங்களை அப்போதைக்கப் போது கவனித்து சுத்தம் செய்யாவிடில் சகிக்க முடியாத நாற்றமெடுத்துவிடும். அந்தோ! அசிங்கம். பழுது வந்துவிடும். வீட்டை துயிலம், சரம், தண்டியம், வாரை முதலியன தாங்குவதைப் போல இவ்வீட்டையும் கெட்டியாயுள்ள எலும்பினாலாய கால், துயிலம், சரம், தண்டிய முதலிய தாங்கும் பலமுள்ள கருவிகள் அமைந்திருக்கின்றன. வீட்டின் மேற்கூரைக்கு விழல்பில் வேய்ந்திருப்பது போல, தோல் மயிர் இவைகளடர்ந்து வளர்ந்து மூடிக் கொண்டிருக்கின்றன.

---

அந்த மாளிகையில் வசிக்கும் மன்னர்பிரான் யாரெனில்? **ஜீவனென்கிற மஹாப்பிரபு** மைனர், இவர் எப்பொழுதும் சிற்றின்பப் பிரியர், இந்தப் பிரபு காதலின் பக்கத்தில் சதா பிரியாமலே அமர்ந்திருப்பார். காதலி காலாலிட்ட வேலையைப் பிரபு மைனர் தலையால் வணங்கி, கையால் செய்வர். அதிகம் சொல்வானேன்? அம்மின்னாளிட்டதே சட்டம், அவள் வாக்கே வேத வாக்கு. ஆசைக் காதலி! ஜீவனென்னும் பிரபுவுக்கு, மோஹமென்னும் மருந்தைக் கொடுத்து பித்தம் தலைக்கேறும்படி செய்து தன் வசப்படுத்திக் கொண்டிருக்கிறாள், அவளோ காமவெறி கொண்ட காதகி. அவள் பேரைச் சொன்னாலே உலகமெல்லாம் நடு நடுங்கும். அம்மா தரசியினாலேயே ஜகமனைத்தும் மயக்கப் படுகின்றன. அந்த சீமாட்டி யாரெனில் மஹாராணி மனோவதியே. இப்பாதகி இடைவிடாது ஒவ்வொரு நிமிஷமும் தனது கட்டழகனுடன் சுகித்திருக்கு முயற்சியையே தேடுவாள். எதைக் கண்டாலும் தனக்கு வேண்டுமென்று ஆசைவைப்பாள். அதைச் சம்பாதிப்பதற்குப் பிரபு ஜீவானந்தப் பிரபுவை தனது சொற்படியே நடத்தி வருவாள். அப்படி நடக்காவிட்டாலோ காரியம் பூர்த்தியாகும் வரையில், ஒரே மூர்க்கமாயிருந்து தனது தாதிகளைக் கொண்டு இடைவிடாது இம்சிக்கச் செய்வாள். இத்தாதிகள் யாரெனில் புத்தி, சித்தம், **அகங்காரம்** எனும் மூவராகும். இவர்களைக் கொண்டுதான் கணவனுக்கும் தனக்கும் வேண்டிய சுகபோகங்களைச் செய்து கொள்ளுகிறாள். இக்குடும்பத்திற்கு உழைப்பதற்கே இவர்களை அடிமைப்படுத்தியிருக்கிறாள். அம்மனோவதி என்னும் இராணி தான் நினைத்த காரியத்தை உடனே புத்தியினிடங் கூறுவாள், அவள் சித்தத்தினிடம் கூறுவாள். அகம்பாவத் தோழியும் அதை ஆமோதிப்பாள்.

அம்மனோவதிக்கு பத்து புத்திரர்களுண்டு. அவர்கள் **கண், காது, மூக்கு, நாக்கு, துவக்கு, வாய், கை, கால், அபானன்,** குறி முதலியவர்கள். இவர்களைக் கணவன் சொற்படி ஒரு போதும் கேட்க விடுவதில்லை. சதாகாலமும் தனது சுகத்திற்குழைக்கும்படியே செய்து கொண்டிருக்கிறாள். இவ்விதமாக மாயா விலாச சரீரமாகிய வீட்டை இடைவிடாது பரிபாலனம் பண்ணி வருகிறாள். தான் குடியிருந்த வீடாகிய சரீரத்திற்குப் பழுது வந்தால் தனது பரிவாரங்களோடு மற்றொரு வீடாகிய சரீரத்திற்குட் சென்று விடுவாள்.

தனது புத்திரர்களைத் தனது சுகநன்மையின் பொருட்டு வெளியிலிருந்து வேண்டியவைகளைக் கொண்டுவரும்படி செய்து, அவர்களால் கொண்டுவரும் யாவற்றையும் கணவனோடு சேர்ந்து தானும் புசிப்பாள். தனது ஆசை நாயகன் ஜீவானந்தன் என்றைக்கேனும் இவளிடம் ரமிக்காமலிருக்கக் கண்டால் தனது புத்திரர்களை ஏவிவிட்டு அவர் தன்னிடத்தில் ரமிக்கும் வரையில் இம்சிக்கச் செய்வாள். அவளைப் போல கொடிய காதகி, பாதகி, கிராதகி எங்குமே கிடையாது. அவள் நெஞ்சழுத்தம் ஒருவருக்கேனும் வராது. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஈஸ்வரன் யாரையுமே மதியாள். மானதக் கோட்டைகட்டி, ஆகாயத்தில் பந்தல்போட்டு, இந்திரஜாலம் மஹேந்திரஜால முதலிய அரிய வித்தைகளை எல்லாம் செய்வாள். தாசி வேசிகளைப் போல தலைவனைப் பலமுறை அவமானமாகக் கூறுவாள். அந்தோ! அவள் வலையில் வசப்பட்டு விழிக்காத ஜீவபிரபுக்களில்லை. எக்காலத்தும் மனோவதியின் மயக்கத்தால் மாண்டவர்கள் கோடானுகோடி. அவள் ஒவ்வொரு விஷயங்களிலும் பரந்து கொண்டே யிருப்பாள். தனது கணவனை (புண்ணிய மென்னும்) ஐஸ்வரியத்தை யொழித்து ஓட்டாண்டியாக்கி அவரை வெளியிற் கிளம்ப வொட்டாமலும் அந்தப் புரத்தை விட்டகலாமலும் (பாவமென்னும்) காவலில் வைத்திருக்கிறாள். அம்மஹா புனிதவதியிடத்தில் ஐந்து வீரர்களுண்டு. அவர்கள் அரண்மனை போன்ற பெரிய வீட்டில் நவத்துவாரங்களிலுமிருந்து காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் யாரெனில்? **பிராணன், வியானன், அபானன், உதானன், சமானன்** இவர்கள். இவ்வீரர்களிடத்தில் **நாகன், கூர்மன், தேவதத்தன், கிரிகரன்** முதலியோர் பணிவிடை செய்கின்றார்கள்.

மனோவதி என்னும் இராணியானவள் ஹிருதயமென்றும் குகையாகும் அந்தப் புரத்திலிருந்து, புத்தி முதலியோர் கைகால் பிடிக்க, தனது கணவனோடு கொஞ்சி குலாவிக் கொண்டிருப்பாள். பிராணன் என்னும் வீரன் ஜாகருபனாய் அரண்மனைக் கபாயம் வராமற் காத்துக் கொண்டிருக்கிறான். அபானன் என்போன் அன்னாசயத் திலிருந்து பாகாதிகளைச் செய்கிறான். உதானன் என்போன் ஆகாராதிகளை உள்ளே செலுத்துகிறான். சமானன் என்போன் அவரவர்கட்கு சமமாக பங்கிட்டுக் கொடுக்கிறான். வியானன் என் போன் இவ்வரண்மனை முழுவதும் சுற்றிச் சுற்றிக் கொண்டிருக்கிறான். இவளுடைய பத்து புத்திரர்களும் அவரவர்கள் தங்கள்

தங்களுக்குள்ள வேலைகளைச் செவ்வனே செய்து வருகின்றார்கள். எல்லோரும் தமது மாதாவிடத்தில் அத்யந்த பிரீதியுடையவர்களே. அவரவர்கட்கு வேலை யாதெனில்: - காது தனது மாதாவிற்கு சத்தத்தை யுணர்ந்து கூறுகிறான். கண் வெளியிலிருக்கும் பதார்த்தங்களின் காக்ஷிகளைப் பார்த்து மாதாவுக்குத் தெரிவிக்கின்றான். மூக்கு அம்மாவுக்கு உயர்ந்த வாசனைச் சாமான்களைக் கொண்டு போய்க் கொடுக்கிறான். துவக்கு தன் வீட்டிற்கு வந்தவர்களை யறிந்து உபசரிக்கிறான். நாக்கு அம்மாவிற்கு ருசியான பண்டங்களைக் கொண்டுபோய்க் கொடுக்கின்றான். கால் தனது மாதா நினைத்த விடத்திற்கு (பூதக் கண்ணாடிப் பெட்டிக்காரன் ஜனங்கட்குப் படங்காட்டி சம்பாதிக்க கோரிபோலுள்ள கைலாசப் பெட்டியைத் தோள்மேல் சுமந்து கொண்டு திரிவதைப் போல) வீட்டையே தூக்கிக் கொண்டு போகிறான். கை தனது மாதாவிற்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு போய்க் கொடுக்கிறான். வாக்கு மாதா கூறியதை பிறருக்கு உரைக்கிறான். வாயு வீட்டின் வெளிப் புறத்தில் கெட்ட சாமான்களை பெருக்கித் தள்ளுகிறான். உபஸ்தம் தனது மாதாவிற்கு அடிக்கடி ஆனந்தத்தை யுண்டு பண்ணுகிறான். ஆகவே இவள் தனது புத்திரர்களை மிக்க நயமாக குடும்ப வேலைகளை ஒற்றுமையாகச் செய்யும்படி சிக்ஷித்திருக்கிறாள்.

அந்தோ! இந்த ராக்ஷசி வசப்பட்டு மஹாப் பிரபு திண்டாடுகிறார். அவர் என்ன செய்வார் பாவம். சற்று சாந்தமாக நிம்மதியாயிருக்க ஒரு நிமிஷம் விலகவெண்ணினாலோநையப் புடைக்கின்றாள். சில சமயம் அன்னவளுக்கு களைப்பு வருமாயின் பரிவாரங்களாகிய புத்திரர்களையும், தாதிகளையும் அழைத்துக் கொண்டு **இருட்டறைக்** குகைக்குள் ஒடுங்கி விடுவாள்.

இவளை யெப்படியாவது தன் வசப்படுத்த முயன்றும் தன்னாலாகாமல் பலர் தவிக்கின்றார்கள். இவளை சில மஹான்கள் தன் வசப்படுத்தி சுதந்திர புருஷர்களாகவும் விளங்குகின்றார்கள். அவர்களைக் கேட்டவ் வழி நடக்க போவோமென வெண்ணினாலோ அதைப் பலவழியாலும் தடுத்துவிடுகிறாள். ஹா! ஹா!! இக் காதகியின் கொடுமை சகிக்க முடியாததே.

இவளிடத்தில் **காம, குரோத, லோப, மோஹ** மென்னும் ராக்ஷஸ குணங்களிருக்கின்றன. அவைகளாலேயே இவ்வுலகத்தை வென்று வருகின்றாள் போலும். எவ்வளவோ அறிவாளிகளும்,

சாமியார்களும், தம்பிரான்களும், யோகிகளும் இவளை ஜெயிக்க முடியாமல் வருத்தமடைந்தார்கள். அடைகிறார்கள். அடைவார்கள். ஏதோ ஒருவர் இருவர் இவளது மாயையிலிருந்து விடு பெற பிரம்ம பிரயத்தனம் செய்கின்றார்கள். இவளை எவ்விதத்திலும் வசப்படுத்தலா மென அநேகர் யோசிக்கிறார்கள். விளக்குவாரில்லாமல் வழிதுறை தெரியாமல், அலைந்தலைந்து அலமந்து திரிகின்றவர்களனேகர். விளக்குமாற்றால் விளக்கினால், அன்னவள் அடங்கு முறையிலடங்கிவிடுவாள்.

அந்தோ! இந்த ராக்ஷஸியின் குடித்தனத்தை நினைக்கக் குலை நடுங்கும். பயம் கொடுக்கும். இவள் ஒரு நிமிஷத்தை யுகமாக்குவாள். யுகத்தை நிமிஷமாக்குவாள். ஒரு நொடிப் போதில் வெகுதூரஞ் செல்வாள். இவள் வல்லமையை நம் மாற் கூறவொண்ணாது. இம்மனோவதியின் கொட்டத்தை அடக்குவதற்காகவே அடக்கி வைத்த பெரியார்கள், யாவரும் எளிதில் வழிதெரிந்து கொள்ளட்டுமென்று பிரபல சாஸ்திரங்களாகிய **கட்டளைக் கொத்து, கைவல்யம், பகவத்கீதை, ஞானவாசிஷ்டம் ரிபுகீதை** முதலியன செய்யுள் உரையாகவும், வசன நடையாகவும் அனுபவ சாஸ்திரங்கள் ஏராளமாகச் செய்துள்ளார்கள். அதற்காகவே துறவிகள் எத்தனம் செய்கின்றார்கள். அதற்காகவே தீர்த்த யாத்திரை, சிவபூஜை முதலியன செய்கின்றார்கள். அதற்காகவே கோயிற் குளங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அதிகம் சொல்வானேன். மனோவதியை அடக்கிக் கீழ்ப்படியச் செய்வதற்காகவே கண்மூடி குகைகளில் தபஸ் செய்கின்றார்கள். எங்கு சென்றாலும் இம்மாது இராணி மனோவதியின் வார்த்தையே கேட்கப்படுகின்றது.

இவளை அடக்கிவிட்டால் சுதந்திர புருஷராய் மோக்ஷ மடைந்துவிடலாம் :

இந்த விடத்தில் இதைப் படித்துக் கொண்டிருக்கும் வாசகர்கட்கு ஒரு வார்த்தை :

மாது **ஸ்ரீ இராணி மனோவதி** இப்பொழுது எங்கே யிருக்கின்றாள்? **புருவ மத்தியில்** சகல தத்துவங்களுடனுங் கூடி நம் செய்கையே கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

பகிரங்கத்தில் தோன்றும் இவ்வளவு பெரிய ராஜ்யமாக விருந்தாலும் ராஜ்யத்தை ஆளுவோன் ஒருவன் ஓரிடத்திலிருந்துதான்

---

உனக்குள்ள சுதந்திரம் பிறருக்கும் கொடு

ஒழுங்காக ராஜ்யத்தை நடைபெறச் செய்கின்றான் என்பது சகலருக்கும் தெரிந்த விஷயமே. உலகம் தலைவனில்லாவிடில் ஒழுங்காக நடைபெறாது.

ஆகவே இதுகாறும் பகிர் முகத்தில் நீ உன் சக்தியை யெல்லாம் விழலுக் கிரைத்தது போல் வீணாக்காமல் அந்தரத்தில் சூட்சுமமாக தலைவனிருப்பிடமாகிய (**'ஹிருதயம்'**) ஹிருதயத்தை நோக்கிப் பார்த்து இடைவிடாமல் சில காலம் பழகிவரின் உன்னைப் பிடித்த சனிவிட்டது. பிறவித் துன்பம் தொலைந்தது. பழகப் பழக காண்பானுங் காக்ஷியுங் காணப்படு பொருளுமின்றி ஒரு பொருளாகும். நோக்க நோக்கப் பூக்குமின்பம் என்பதும் **"ஓர்மொழி"** யாகும்,

நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி யோகம் வந்து தலைப்பெய்யும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாமே.
(திருமூலர் திருமந்திரம்)

மனமடங்கில் மதியடங்கும், மதியடங்கில் மோனங்கூடும், அம் மஹா மோனமே மோக்ஷமாகும்., அம்மோக்ஷமே மேற்சொன்ன இராக்ஷஸியாம் பந்தத்தின் விடுதலை, ஆனதால் இம் மகா பந்தத்தினின்றும் விடுதலையடைய எல்லாம் வல்ல இறைவன் **அருட்பெருஞ்ஜோதி** ஆண்டவனை நினையாமல் நினைவோமாக ஓம் தத் ஸத்.

C C C

## 56. உயரிய ஞான ரகசியக் காட்சி

ஜீவர்கள் நிமிஷத்தைப் பவுனாக மதிக்கக்கூடியதும், ஒரு சாண் குக்ஷிக்காக ஓயாமல் பட்சிகளைப் போல பறந்து உழைப்பதும், மன அமைதி என்பதையே காண முடியாததும் ஜன நெருக்கமும், இடையிடையே சைகிள், மோட்டார் சைகிள் டிராம் வண்டி, மோட்டார் வண்டி, ரிக்ஷா, ஜட்கா முதலிய ஆரவாரிப்புமுடைய சென்னையம் பதியில், அதிகாலை நான்கு மணி முதல், இரவு பத்துமணி வரையில், உழல்வதைப் பார்த்தால் மோக்ஷகாலம் மிஞ்சிப் போகிறதாகவே தோன்றும்.

---

அறிந்தவன் துணியலாம். துணிந்தவனுக்கு துக்கமில்லை

அங்கு பிராட்வே லோன்ஸ்குயர் (Sri Ramulu Naidu Park) என்ற விசாலமான சதுர இடம் ஒன்றிருந்தது. அந்த கண்காக்ஷித் தோட்டத்தின் மத்தியில் உயரிய பெரிய ரவுண்டு மேடையும், அதைச் சுற்றிலும் நானாவித பெஞ்சுகளின் அமைப்பும் விதவித குரோட்டன்ஸ் செடிகளும், லக்ஷணமாய மைத்த கமுகு மரங்களும், அங்குள்ள அரசு, வேம்பு நிழலும், அத் தோட்டத்திற்கு நான்கு வாசற்படி அமைப்பும், மனதை ரஞ்சிப்பிக்கும். அவ்விடத்தைப் பார்த்தவுடன் இங்குதான் சிறிதளவு மனவமைதி கிடைக்குமென பெஞ்சியிலமர்ந்தேன். எதிர்பாராத விதமாக சற்று நேரத்திற்கெல்லாம் நடந்த காக்ஷிகளாவன:-

ஓர் யுவனும் யுவதியும், என் பக்கத்திலுள்ள பெஞ்சியில் வந்தமர்ந்தார்கள்.

1. அவர்களிருவரும் இரதியும், மன்மதனுமெனக் 'கண்' களை வசீகரிக்கும் வண்ணம் தோன்றினார்கள்.

2. ஆங்குள்ள குரோட்டன்ஸ் செடி, முல்லைச்செடி புஷ்பத்தின் வாசனையும், பக்கலிலமர்ந்துள்ள மின்னாளின் தலையிலணிந்துள்ள ரோஜாப் புஷ்பத்தின் நறுமணமும், அவள் கட்டழகன் கைகுட்டையில் போட்டிருந்த (பிரஞ்சு கோடெட்ரோஸ் செண்ட்) மணமும் இயற்கைசெயற்கை எல்லா மணமும் சேர்ந்து எனது **"நாசி"** யைத் துளைத்தது.

3. அக் கட்டழகனுடன் இருந்த வசீகரி அவனது வேண்டுகோளுங் கிணங்கி, தாயுமானவர் பாடலில் **"இன்னழகு கணிபாகு"** என ஸ்ரீராகத்தில் குயிலைப் பழிக்கும் தனது இனிய தொனியால், குரலோ, குழலோ, கொட்ட வாத்தியமோ, யாழோ, பாகோதேனோ என இனிக்குமாறு கர்ணாமிருதமாகப் பாடினாள். அத்தொனியைக் கேட்பதற்கு என்னிரு **"செவியும்"** போதாததே.

4. இப்படி யிருக்கும்போது ஆங்குபெஞ்சியில் அமர்ந்திருந்த மகம்மதியக் கிழவரொருவர் பாத்தியா ஓதியதென்று சருக்கரையை எல்லாருக்குங் கொடுத்து எனக்குங் கொடுத்தார். **"நாக்கு"** ருசியறிந்ததை என்னென்று சொல்லுவேன்.

5. இவ்வளவு அமர்க்களத்திலும் கீழ்த்திசையினின்றும் குளிர்ந்த மந்தமாருதம் **"தேகத்தில்"** தாக்கி ஜிலீர் ஜிலீரென்று உணர்ச்சி யுறுத்துகின்றது. இவ்வெல்லா உணர்ச்சியும் சேர்ந்து நாம்

பூலோகத்தில் இருக்கிறோமா? அல்லது தேவலோகத்திலிருக்கிறோமா? வென மயங்கச் செய்தது. என்றாலும், பாகிய விஷயத்தில் பொழுது போக்கிற்காகச் சென்னை வந்தவனல்ல. வந்த வேலை, சந்தர்ப்பம், காலம் இவைகளை நோக்கின் அவன் இஷ்டப்படி வந்ததாகும். அதை இப்பொழுது எழுதுகோல் முனையில் சொல்லிக் கொண்டிருத்தற் கில்லை.

இவைகளையெல்லாம் எது அறிகின்றதென்பதை சற்று ஊன்றி ஆராயும் வேலையிற் பிரவேசிப்போம். தென்பட்ட உருவம் **கண்** கண்டதும், இனிய பாசுரங்களை **காது** கேட்டதும் மிகுந் நறுமணத்தை **நாசி** முகர்ந்ததும், சருக்கரையை **நாக்கு** ருசித்ததும், ஜிலீரென்று காற்றை **தேகம்** உணர்ந்ததும், பகிரங்கத்தில் தோன்றும் பஞ்சேந்திரியங்களாயுள்ள **கண், காது, மூக்கு, நாக்கு, தேகம்** என்னும் இவைகள் ஒவ்வோர் கருவிகளேயாகும்.

இவ்வைந்து யந்திரக் கருவிகள் ஒவ்வொன்றுக்கும் சம்பந்தப்பட்ட ஓர் தனி நாடி இருக்கின்றது. அந்நாடிகள் ஐந்தும் தலையிலுள்ள மூளையென்னும் ஸ்டேஷன் **ஆபீஸ் ரூமிற்குள்** பிணைக்கப்பட்டிருக்கின்றன.

ஷை சம்பந்தப்பட்ட நாடி அமைப்பில்லா திருப்பின் ஒருவனுக்கு 1000 கண்களிருப்பினும் பயன்பட மாட்டாது.

அந்த மூளையென்னும் ஸ்டேஷன் ஆபீஸ் ரூமில் **"மனது"** என்னும் **டெலிபோன் மாஸ்டர்** இருக்கிறார்.

வேண்டுமானால் ஏக காலத்தில் பஞ்சேந்திரியர்களாகிய ஐந்துபேரும் அனுப்பும் தந்தியை ஒரே காலத்தில் அஷ்டாவதானிபோல அதிதீவிரத்தில் மனமென்னும் டெலிபோன் **மாஸ்டர்** வாங்கியறியும் சக்தியுண்டு. ஷை ஐவரில் ஒருவர் அனுப்பும் தந்தியை மாத்திரம் ஓர் சமயம் டெலிபோன் மாஸ்டர் மிக்க ஊக்கமாய் ஆழ்ந்து கவனித்துக் கொண்டிருக்கும் பட்சத்தில் அந்த சமயம் மற்ற நால்வரும் எத்தனை தரம் எத்தனை விதமாய்க் கூக்குரல் போட்டு தந்தியடித்தாலும் டெலிபோன் மாஸ்டர் வேறு வேலையிலாழ்ந்திருப்பதால் கவனிப்பதற்கில்லை.

ஒரு விஷயத்தில் மனதைச் செலுத்தியிருக்கும்போது எதிரில் ஆள்வந்து போயிருக்கினும், காதில் மணியோசை கேட்டிருப்பினும், தோன்றாதிருந்ததை அதாவது ஒன்றை ஊன்றி கிரஹிக்கும்போது

மற்றொன்று கிரஹிக்க முடியாததை உங்களனுபவத்தில் கண்டிருப்பீர்கள்.

அந்த ஸ்டேஷன் அறையில் தலைமை அதிகாரி அதாவது **ஸ்டேஷன் மாஸ்டர்** ஒருவரிருக்கிறார் அவர் தான் **"புத்தி"** என்பது மனமென்னும் டெலிபோன் மாஸ்டர் வாங்கும் தந்தியை புத்தியென்னும் ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்து, அவர் கவனித்து அவரால் முடிவாக்கப்படும் தீர்மானத்தைக் கலந்து செய்யும் வேலையே உத்தமமாகவும் ஒழுங்காவும் முடியும்.

அல்லது ஓரோர் சமயம் டெலிபோன் மாஸ்டரே தான் தோன்றித் தம்பிரானாகவிருந்து ஸ்டேஷன் மாஸ்டரிடம் கலக்காமல் விஷயத்தை ஓர் முடிவுக்கு கொண்டு வருவதுமுண்டு. அப்படிச் செய்யப்படும் காரியம் அனர்த்தமாகவே முடியும்.

ஒருவன் இன்றிரவு நடராஜர் தரிசனத்திற்குப் போகலாமா? அல்லது தாஸி சுந்தரம் வீட்டிற்குப் போகலாமா? என நினைக்கிறான். இதுதான் மனத்தின் காரியம். பிறகு சில நேரத்திற்கெல்லாம் தாஸி வீட்டிற்குப் போனால் பொருள் நஷ்டம், தேகம் அசௌகர்யம், மேலும் தீயதாகிய பாபச்செயல் ஆகவே புண்ணியத்திற் கேதுவாகவுள்ள நடராஜர் தரிசனம் பண்ணப் போவோம் என நிச்சயிக்கிறான். இதுதான் புத்தியின் காரியம்.

பகிரங்கத் தோற்றம் பஞ்ச இந்திரியக் கருவியிற் பட்டு, அதிற் சம்பந்தப்பட்ட நாடி வழியாகச் சென்று, மனதிற்றாக்கி, மனம் புத்தியிடத்திற் கொடுக்க, புத்தி வாங்கின அவ்வுணர்ச்சிகள் எல்லாவற்றையும் அசையவொட்டாமல் மூளையில் ஓரிடத்தில் ஸ்டாக்காகச் சேர்த்து வைக்கின்றது. அந்த இடம் தான் ஓர் சப் **ரிஜிஸ்தர் ஆபீஸ்**, என வைத்துக் கொள்ளுங்கள். அந்த சப்ரிஜிஸ்தர் ஆபீஸில் நீங்கள் பிறந்தநாள் முதற் பதிவு செய்த காப்பி நகல்கள் பூராவும் உள. அதாவது உங்களது வாழ்நாளில் கண்டு, கேட்டு, உண்டு, உடுத்தி, அனுபவித்த சுகங்கள் பூராவிற்கும் கொடுத்தபடி வேண்டுமானபோது நகல் எடுத்துக் கொள்ளலாம். அந்த இடமோ என்றைக்கும் அழிவில்லாதது. அப்படிப்பட்ட அகண்டமான ஓர் வஸ்து இல்லாவிட்டால் வெளியிலிருந்து உள்ளே கொண்டுபோன உணர்ச்சிகள் ஒருபோதும் நிலைக்கமாட்டா. அந்த அகண்டமாகிய

வஸ்துதான் **'ஆத்மா' அதுதான் நாம், அவர்தான் ஸ்டேஷன் மாஸ்டர்** அவரை அறிந்தோமானால் மற்றவர்களை எல்லாம் அறிவது வெகு சுலபம்.

**C C C**

## 57. ஆத்மாவின் உண்மைத் தத்துவம்

*(படக்காட்சி)*

சென்னை கார்ப்பரேஷனுக்கு சமீபத்திலுள்ள (My Ladys Garde முகப்பில் மனதைக் கவரத்தக்க விசாலமான தோட்டத்தி அநேகவிதமான பெஞ்சுகளும், உல்லாசமான மேடைகளும், எலக்டிரிக் விளக்கு ஸ்தம்பங்களும், அழகிய நானாவிதமான புஷ்பங்களடர்ந்த குரோட்டன்ஸ் செடிகளும், முக்கோணம் நாற்கோணம் ஐங்கோணம் அறுகோணம் வட்டம் பிறைவட்டம் முதலிய மாதிரி, பாகம் பாகமாக செடிகளுற்பத்தி செய்து கத்தரித்து சிங்காரித்தும், சிங்கார வனத்தின் மத்தியில் உயரிய மேடையில் கந்தர்வ விக்கிரகமமைத்து அதன் கைகளில் (வாட்டர் ஸ்ப்ரே) ஜலம் பீரிட்டு மேலே எழும்புவதும், சுற்றிச் சுற்றிச் சக்கர வானம் போலச் சுழற்றியடிக்கும் கோலாகலத்தைப் பார்த்தால் அதிகம் சொல்வானேன், கண்காட்சியையும், மன அமைதியையும் பெற மகாதபஸ்விகளும் தங்கிவிடுவார்களென்றால், அறிவிலியாகிய என்னைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டுவதில்லை. மாலை நான்கு மணிக்கு அவ்விடத்தைச் சுற்றி உலாவி வரும்போது ஓர் பெஞ்சியில் அதி ரூபலாவண்ய யௌவன லேடி ஒருவள் வீற்றிருந்தாள். கண்டதும் மனம் மயக்கமடைந்துவிட்டது அந்த சுந்தராங்கியின் கயல் விழியைக் கண்டவுடன் மயங்கி இவள் நேத்திரத்தினாலே ஒரு தரம் கடாக்ஷம் பண்ணி நம்மை தன்னியனாகப் பண்ணுவாளா? என்று எண்ணினேன். இன்னும் ஒரு தரம் பாரோமா வென்றும், திருஷ்டிக்கு மிகுந்த பிரியமாயிருக்கின்ற இவள் ஒரு தரமாகிலும் நம்மைப் பார்க்க மாட்டாளா? நாம் இப்பெண்ணணங்கின் சுகத்தையடையும் படியான சுகிருதம் பண்ணியிருப்போமா எனவும் எண்ணினேன். அப்புறம் சொல்வதற்கில்லை. ஓர் அடிகூட எடுத்துவைக்க முடியவில்லை. மயங்கினேன், தயங்கினேன், உள்ளம் குழப்ப மடைந்தது. அச்சம் ஒரு பக்கம் தடுக்க, ஆவல் ஒருபக்கமிழுக்க சற்று மன தைரியம் செய்து கொண்டு, அந்த லேடி உட்கார்ந்திருந்த அப்பெஞ்சியின்

---

மற்றோர்பாகத்தில் உட்கார்ந்தேன். தாங்கள் எந்தவூர், பெயர், தங்கியிருக்கும் இடம் எதுவென்று இங்கிலீஷில் பேசினேன். தானிருப்பது பர்மா தேசமென்றும், பெயர் லோகசுந்தரி யென்றும் எக்மூர் கின்னெட்லேனிலுள்ள மோகன விலாச பங்களாவிலிருப்பதாகவும் கூறினாள். காமக் குறிப்புள்ள பார்வை வசனங்களிலிருந்து எனது விருப்பத்தை எடுத்துக் கூறினேன். அதற்கு அம்மாது ஓர் இரவு தன்னுடனிருக்க வேண்டுமானால் ரூ. 250 தரவேண்டுமென்று சொன்னாள். எனக்கு பணம் லட்சியமில்லை. ஆகையால் ரூ. 250 நோட்டாக அவளிடம் தந்து மேல் விலாசம் தெரிந்து சாவதானமாக இருவரும் பேசிக் கொண்டிருந்தோம். இந்தச் சமயத்தில் பூம் பூம் என்று மோட்டார் சத்தங்கேட்டது. அவள் சினிமா பார்க்கக் குறிப்பிட்டிருந்தபடி டிரைவர் மோட்டாரைக் கொண்டு வந்து நிறுத்தினான். என் முன்னிருந்த மின்னாள் தனது இடது கையின் மணிக்கட்டில் அணிந்துள்ள ரிஸ்ட்டுவாட்டைச் பார்த்தாள்.

மணி ஆறு, அலோ மைடியர், சினிமா காக்ஷி (Truth of Soul) ஆன்மாவின் உண்மைத் தத்துவம் ஆரம்பமாகுமென்றும் விசேஷமான இந்த சினிமா படக்காக்ஷியைத் தாங்களும் கட்டாயம் பார்க்க வேண்டுமென்றும், என்னை துரிதப்படுத்த மனமொப்பி சம்மதித்தேன். இருவரும் காரில் அமர்ந்தோம். கார் புறப்பட்டு **ஜெகன்மோஹன ஞானவிலாச** சினிமா போய் நின்றது இருவரும் 10 ரூ. பஸ்ட்கிளாஸ் டிக்கட் பெற்று உட்சென்றோம். கீழரங்கத்தில் ஜனக்கூட்டம் அதிகம். ஜன நெருக்கம் அதிகமில்லாத மேலரங்கத்தில் காம்பிநேஷன் சோபாவில் இருவரும் அமர்ந்தோம்.

பட்டப் பகலையும் தோற்கச் செய்யும் எலக்டிரிக் பல்ப் கொத்து வெளிச்சங்களும், காணக் கண்கூசின. கொட்டகை நிறைந்த எலக்டிரிக் விசிறிகள் கிறுகிறென்று சுழன்று மிக்க சுகத்தைத் தந்து கொண்டிருந்தது. கட்டிட அமைப்பும் அங்கு எங்கும் எழிலாய்க் கண்ணைக் கவர்ந்த சிங்காரிப்பை நேரில் அனுபவித்தவர்கட்கன்றோ தெரியும். இங்கு விவரிப்பதெனின் மிகையாகும். மேற் செல்லுகிறேன். தேவசபையென மனதை ரம்மிக்கச் செய்தது. இப்படியிருக்கும்போது திடீரென்று ஓர் இருள் கப்பியது. எதிர்பாராத விதமாக இவ்விருளைக் கண்டதும் மனம் பீதியடைந்தது. தேவசபையைக் காணோம். சற்று நேரத்திற்கெல்லாம், ஆங்கு எதிரில் வெண்மைப் படுதாவில் கண்கள் கூசும்படி வெண்மை ஒளி தோன்றிற்று. இவ்வொளி எங்கிருந்து

வருகிறதென அறியவில்லை. அங்கு சீனில் கண்ட இங்கிலீஷ் பதங்களைத் தமிழில் வரைந்து விடுகிறேன். வாசகர்கள் உச்சரிப்பு ஒலி மாறும் விஷயம் குற்றம் பாராமல் மேல் நோக்கிச் செல்லுவார்களென நம்புகிறேன்.

**தி இண்டியன் செல்ப் கவர்ண்மெண்ட் ஸ்டுடியோ**

மஹாத்மா அஸோஸியேஷன் பிலிம் கம்பெனி, திருச்சுழி

1879 - ஆண்டு டிசம்பர் மாதம் 30-ம் தேதி ஆக்டுபடி இது

ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.

**"ஆத்மாவின் உண்மைத் தத்துவம்."**

திரைக் கதை வசனம் - P.C.இராமலிங்கம்.

டைரெக்ஷன்-துரியானந்தர்.

ஒளிப்பதிவு - S. ரெத்தினசாமி.

ஒலிப்பதிவு- K. முத்துகிருஷ்ணன்

ஆர்ட்-P R. சிவானந்தன்,

எடிட்டிங்-கோ.வை.சின்ன ஆறுமுகபக்தர்,

லாபரட்டரி-அ.தங்கவேல்

ப்ரொடக்ஷன்-N. கைலாசாம்.

மேக்கப்-சூரியமூர்த்தி.

செட்டிங்-S. கந்தசாமி.

ஆக்டர்ஸ்-ஜெகதீசன், முருகேசன், K. கிருஷ்ணசுவாமி, சோமசுந்தரம், உமா, வள்ளிநாயகன்.

C C C

## PART - 1

காதிற் கவசகுண்டலமும், மேனியில் திருவெண்ணீறு ருத்திராக்ஷமும் அணிந்து, சடை முடி தரித்து. கையில் ஜப மாலை புஸ்தகத்துடன் நான்கு பெரியார்கள் வந்து தோன்றினர். இவர்கள் யாரையோ எதையோ குறிப்பிட்டுத் தேடுவது போல் தோன்றியது.

---

பழமும், காயும், இலையும், தளிரும் நிறைந்த இருண்ட காடுபோலுள்ள ஓர் பெரிய ஆல விருஷம் கணக்கிலா விழுதுகளுடன் கூடித் தோன்றிற்று. அவ்விருக்ஷத்தினடியிலுள்ள உயரிய மேடையில் ஓர் பெரியார் மிக்க சாவதானமாக அசைவற்று அமர்ந்திருந்தார்.

மேற்கண்ட நால்வரும் தேடிய பெரியாரை காணப்பெற்று, சந்தோஷமடைந்து, நமஸ்கரித்து உட்கார்ந்து ஏதோ சில விஷயம் கேட்டுக் கொண்டிருந்தனர். பின்பு அப் பெரியார் **"சொல்லாமற் சொல்லி இருந்ததனை இருந்தபடி இருந்து சின் முத்திரையால் காட்டிக் கொண்டிருந்தார்.** " குரு காட்டியபடி அந்நால்வரும் பாராமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

**C C C**

## *குறிப்பு: "சிவஞானபோதம் உணர்த்தியது"*

## PART - 2

1. ஓர் அகண்ட வெளி தோன்றியது. தோன்றியதற்குக் காரணம் பிரபையுள் பிரகாசம் தோன்றியது.

2. அப் பிரகாசத்தினின்றும் ஓர் ராஜன் தோன்றினான். புறப்பட்டான். அந்தப்புறம் வந்து மனைவியுடன் சுகித்து சில நேரமிருந்தான்; மீண்டும் தனிப்பட்டான்.

3. அந்த ராஜன் மனைவி மக்களுடன் வீட்டில் கொஞ்சிக் குலாவினான்.

4. அந்த ராஜன் ராஜதர்பாருக்கு வந்து சிம்மாசனத்திலமர்ந்து மந்திரி பிரதானி முதலிய 25 பேர் சகிதம் தர்பார் நடத்தினான்.

5. அந்த ராஜன் வேட்டையாட விருப்பங்கொண்டு 35 பேர்கள் கொண்ட சைனியத்துடன் வேட்டையாடி, வீட்டிற்கு வந்து தன்னிருப்பிடம் சேர்ந்தான்.

## *குறிப்பு : ஆத்மசக்தி விரிந்தொடுங்கும் காக்ஷி.*

## PART- 3

ஒரு விசாலமான மரத்தடியில், தண்டு கமண்டலத்துடன் ரிஷி ஒருவர் வீற்றிருந்தார்.

சிஷ்ய பாவனையில் அவரெதிரே ஒரு மனிதன் தனக்கு உபதேசம் செய்யவேண்டுமென்று நின்று கொண்டிருந்தான்.

ரிஷி அவனைப் பார்த்து நீ முதலில், இதோ அருகிலுள்ள குளத்தில் சென்று உன் முகத்தில் தோன்றும் கருப்பை (கரியை) ஜலப் பிரதிபிம்பத்தில் பார்த்து அழுக்கை சுத்தம் செய்துகொண்டு வா; உனக்குப் பின்பு உபதேசிக்கிறேன் என்றார். போய் பார்த்தான்! அக்குளம் நெடுநாளாய் பாசி படர்ந்து, பாசியால் பூராவாக மூடப்பட்டிருப்பதால், ஜலத்தையே கண்டுபிடிக்க முடியவில்லை. என்ன செய்வான்! உப தேசம் கேட்க வேண்டிய தவசரம். ஜலத்தின் மேலுள்ள பாசியை ஒரு கையால் ஒதுக்கிப் பார்த்தான். உடனே வந்து மூடிக்கொள்கிறது. இரண்டு கைகளினாலும் ஒதுக்கிப் பார்த்தான். மீண்டும் வந்து கவிந்துகொள்ளும் நிலைமையிலேயே இருந்தது. இப்படி 10 நிமிஷம் செய்துபார்த்தும் முகம் பார்க்கப் பயன்படவில்லை. குருவினிடம் வந்து உபதேசத்திற்கு நின்றான் உன் முகத்திலுள்ள கரியைப் போக்கிக் கொள்ளாததால், உனக்கு உபதேசம் கிடையாது போ, போ என்று வெருட்டினர்.

மறுபடியும் அக்குளத்திற்கு வந்தான். சிறு முயற்சி போதாதென்று பெரு முயற்சி யெடுத்து, இரண்டு முகூர்த்த காலம் விடாமல் ஜலத்தை இரு கையினாலும் ஒதுக்கி ஒதுக்கி மேலும், செய்யச் செய்ய அவ்வலைகளினால் பாசி ஒதுக்கப் பெற்று வெகு விசாலமாக பாசி இல்லாமல் தோன்ற, அதில் அலையற்ற சமயம் தன் பிரதி பிம்பத்தைக் கண்டு தரிசித்தான் உண்மையில் அழுக்கென்பதில்லை. பின்பு குருவிடம் சென்றான். உனக்கு முன்பே உபதேசமாய்விட்டது. வைராக்யமும் பொறுமையும் கொண்டு, உன்னை தரிசித்தால் உன்னுருவத்தை ஜலத்தில் பார்த்தவன் தான் நீ; நீ அவனைப் பார்த்துக் கொண்டிரு. போகலாம் என்றார்.

C C C

## PART - 4

மழைக்காலம். பெரிய ஆறு ஒன்று தோன்றி அதில் நிறைய வெள்ளம் நுங்கும் நுரையுமாய்ப் போய்க் கொண்டிருக்கிறது. அவ்வாற்றின் கரை ஓரமாக இருவர் நடந்துகொண்டிருந்தனர்.

அவ்வெள்ளத்தில் கருப்புக் கம்பளி மூட்டை ஒன்று மிதந்து போனது. அக்கரை ஓரமாக நடந்து கொண்டிருந்த அண்ணன் தம்பிகள், வெள்ளத்தில் போகும் கம்பளி மூட்டையைக் கண்டனர். அண்ணன் சொல்வதாவது:- அந்தக் கம்பளி மூட்டையைக் கொண்டுவந்தால், இக் குளிர் காலத்திற்குப் போர்த்துக் கொள்ளலாம் என்றான். இதைக் கேட்ட தம்பி உடனே வெள்ளத்தில் குதித்து நீந்தி (குளிரில் பசியால் வாடி பெருவெள்ளத்தில் புரண்டு மிதந்து வரும் கருப்புக் கரடி என்றறியான்) நடு ஆற்றில் சென்று மூட்டையைக் கைப்பற்றினான். அந்தோ! ஓர் பிடியுமில்லாமல் அனாதரவாக மிதந்து உருண்டு போகுங்கரடி, ஓர் உதவி கிடைத்ததாக வெண்ணி இவனைக் கெட்டியாய்ப் பிடித்தது. ஆகவே கரடியும் தம்பியும் ஒருவரையொருவர் விடாமல் கெட்டியாய்ப் பற்றி மேலுங் கீழுமாக உருண்டு மிதந்து போய்க் கொண்டிருக் கின்றனர். இவன் விட்டாலும் கரடி விடுவதைக் காணோம்.

கரைமேல் தொடர்ந்து வந்து கொண்டிருந்த அண்ணன் சொன்னதாவது : தம்பி ஏன் தாமதம் சீக்கிரம் மூட்டையை இழுத்துக் கொண்டு வா என்றான்.

தண்ணீரில் போகும் தம்பி சொன்னதாவது: அண்ணா நான் விட்டாலும் கம்பளிமூட்டை என்னை விடமாட்டே னென்கிறது. என்னை எதிர்பாராதே போய் வருகிறேன் என்று வெள்ளத்தில் இறந்தான்.

**குறிப்பு** : இக் கதையினால் என்ன விளங்குகிற தென்றால் **மாயை முதலில் மனிதனைப் பிடிக்கிறதில்லை** என்பதும், பிரபஞ்சத்தில் **மனிதன் தான் முதலில் மாயையைப் பற்றிக் கொண்டு** மாய்கிறான் என்பதும் விளங்குகிறது.

## INTERVAL

## PART - 5

# ஆத்ம ஜோதி

**சினிமா** வெண்மைப் படுதாவில் இருபக்கத்திலு மிருந்து இரண்டு மனிதர்கள் நடுவில் வந்து சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த காக்ஷியாவது:

**டாக்டர்** : நீ யார்? ஓய்!

**தாண்டவராயன்** : யாரை? என்னையா? என்னை உமக்குத்தெரிய வில்லையா? மனுஷன்னு உமக்குத் தெரியவில்லை போலிருக்கு. மாடென்று நினைத்தீரா என்ன? எத்தனையோ தரம் என்னைப் பார்த்துமிருக்கிறீர். பேசியுமிருக்கிறீர். தாண்டவராயன்னு உமக்குத் தெரியுமே. கேலி பண்றீரா என்ன?

**டாக்டர்** : இல்லீங்கோ! கோவிச்சிக்கப்படாது. நீயாரென்றால் இவ்வளவு கோபம் வரப்படாது. நீ யாரென்பதைக் கொஞ்சம் நிதானித்துச் சொல்லும்.

**தாண்டவராயன்** : நிதானிக்கிற தென்னங்காணும். கண், காது, மூக்கு, வாய், கை, கால் உருவம் அமைந்து வெளியில் பகிரங்கமாக உமக்குத் தோன்றுகின்றதே அதுதான் தாண்டவராயன்.

**டாக்டர்** : (தனக்குள்) அடத் தடித் தாண்டவராயா! இப்படிக் கூட அறியாமலிருப்பாயா! ஆ! பழய பரமசிவமே! உலகமும் இப்படியிருக்குமா என்று சொல்லி ஜாலவித்தை தெரிந்த டாக்டர் தனது ஆப்பரேஷன் பெட்டியைத் திறந்து மந்திரக் கோல் ஒன்றை எடுத்து தாண்டவராயன் முன்னால் வட்டமாகச் சுற்றி தரையில் தட்டவே திடீரென்று மாயமாக அதே உருவம்போல் அமைந்த மற்றொரு தாண்டவராயன் நின்றான். டாக்டர் தன் முன்னால் நின்ற தாண்டவராயனைப் பார்த்து.

**டாக்டர்** : நீங்கள் யார்?

**தாண்டவராயன்** : ஒருவரையொருவர் பார்த்து இருவரும் சற்று மௌனமாக இருந்து ஒரே மாதிரி நகைத்தனர். விழித்தனர். நாங்கள் யாரென்பதை நீங்களே தெரியச் செய்யுங்கள்.

**டாக்டர்** : இனி நான் செய்யும் வேலையைக் கவனித்து பொறுமையோடு கேட்பதற்கு மாத்திரம் பதில் சொல்லுங்கள்.

**தாண்டவராயன்** : நல்லதுங்கசாமி! அப்படியே ஆகட்டும்

**டாக்டர்** : இரண்டு நடைப் பிணங்களையும் வட்டமேஜைக் கருகில் அழைத்துப் போய் தனது ஆப்பரேஷன் பெட்டியிலிருந்த பளபளப்புள்ள கூர்மையான கத்தியை எடுத்து (சிருஷ்டித்த) தாண்டவராயன் கண்களை அடியோடு தோண்டி மேஜை மேல் வைத்து இந்தக் கண்கள் நீயா?

**தாண்டவராயன்** : இந்தக் கண்கள் நானல்ல.

**டாக்டர்** : (காதுகளை அடியோடு அறுத்து காண்பித்து) இந்த காதுகள் நீயா?

**தாண்டவராயன்** : காதுகள் நானல்ல.

**டாக்டர்** : (மூக்கை அறுத்து காண்பித்து) மூக்கு நீயா?

**தாண்டவராயன்** : மூக்கும் நானல்ல.

**டாக்டர்** : பேசுவதற்குக் காரணமான நாக்கை அறுத்துக் காண்பித்து நாக்கு நீயா?

**தாண்டவராயன்** : நாக்கும் நானல்ல.

**டாக்டர்** : இப்படிக் கண், காது, மூக்கு, நாக்கு, நீக்கிய பிரேதத்தை காலில் கயிற்றினால் கட்டி தலைகீழாக தொங்கவிட்டு மேல் தோல் முழுவதும் உரித்து இந்த தோல் நீயா?

**தாண்டவராயன்** : இந்தத் தோலும் நானல்ல.

**டாக்டர்** : மேல் தோல் நீக்கித் தலைகீழகாத் தொங்கும் பிரேதத்தின் வயற்றைக் கத்தியினால் குடைந்து அதற்குள் தன் கையை விட்டுத் துழாவி இதோ உன்னுள்ளிருந்து மனம் என்னும் கருப்புப் பந்து, புத்தி என்னும் வெள்ளைப் பந்து, சித்தம் என்னும் பச்சைப் பந்து, அகங்காரம் என்னும் சிவப்புப் பந்து, உள்ளம் என்னும் நீலப்பந்து, ஆகிய ஐந்து கலர்கள் போன்றதை மேஜைமேல் வைத்திருக்கிறேன். இவைகளில் நீ எதுவாயிருக்கலாம்?

**தாண்டவராயன்** : இவைகள் எல்லாம் நானல்ல.

**டாக்டர்** : மறுபடியும் இதோ உன்னுள்ளிருந்து உல்லன் பஞ்சவர்ணக் கலர் நூல் போலுள்ளதாகிய மாயை என்னும் கருப்பு வர்ணம், ஜீவனென்னும் பச்சை வர்ணம், பிராணன் என்னும் நீலவர்ணம், பிரகிருதி என்னும் மஞ்சள் வர்ணம், நீ மூச்சுவிடும் சுவாசம் என்னும் சிவப்பு வர்ணம், இப்படி அமைந்து சன்னல் பின்னலாக உள்ள நூலை மேஜையின்மேல் வைத்திருக்கிறேன் பார்! இது நீயா இருக்கலாமா?

**தாண்டவராயன்** : இதுவும் நானல்லவே.

---

ஒருபொய் ஸ்தாபிக்க ஒன்பது துணை பொய்வேண்டும்

**டாக்டர்** : (இதோ உன்னுள்ளிருக்கும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று லீவர்களுள்ள பூட்டை உடைத்து, அந்த அறையினுள் கிடைத்த சத்து, சித்து, ஆனந்தமென்னும் வஸ்து, ஒன்று அகப்பட்டத்தைப் பார்த்தீரா! இதை மேஜைமேல் வைக்கிறேன் பார்! என்ன பிரகாசம்! ஒருக்கால் இது நீயா இருக்கலாமா?

**தாண்டவராயன்** : ஆகா! இந்த ஜோதி வஸ்துதானய்யா நான்! இத்தனை நாளும் மடத்தனமாக அடிக்கடி நினைக்கும் மனது, தேகம், கண், காது, மூக்கு இவைகள் எல்லாம் நானென்று ஒன்றுமறியாமல் இருந்தேன். இப்பொழுது நீங்கள் ஒவ்வொன்றாகத் தனித்தனியே புட்டுப் புட்டுக் காட்ட உண்மை விளங்கிற்று. இனி நான் ஏமாறமாட்டேன், தாங்கள் என்னுள்ளிருந்த அற்புத ஜோதி வஸ்துவை தனியே மேஜைமேல் வைத்து எடுத்துக் காட்டிய பின்தான் சந்தேகம் முழுமையும் நீங்கிற்று. நான் இத்தனை நாளும் மனத்தின் வசப்பட்டு, சுகம், துக்கம், லாபம், நஷ்டம், இவைகளில் உழன்று வெந்து அவஸ்தைப்பட்டது போதும்! போதும்! இனி அந்த மாயமனது என்னை ஏமாற்றவும் முடியாது. அந்த அருட்ஜோதியின் சக்தியே என் கைகால்களை அசைக்கவும், வாயினால் பேசவும் பலவிதமாக உணரவும் செய்வதென்பது செவ்வனே தெரிந்துவிட்டது. இனி அந்தச் சமரச உணர்ச்சி நிலையிலேயே இருப்பேன். என்னென்னமோ சொல்றாங்களே கர்மம், பக்தி, யோகம், ஞானம், எனக்கு அந்த சமாச்சாரமே வேண்டாம் சுவாமி. பகிர் முகத்தில் ஏமாறமாட்டேன். அந்தர் முக அமைதியிலேயே இருப்பேன். இதைவிட எனக்கு வேறென்ன வேண்டும்? என்னுடைய நல்லகாலம் உங்களை இங்கு சந்திக்கும்படி விட்டது.

**டாக்டர்** : அப்பா! நீ யாரென்பது உனக்கு நன்றாக விளங்கிவிட்டதனால் உன்னை திருமூர்த்திகளாலும் இனி அசைக்க முடியாது நீயே பொருளென்று அறிந்தபடியால் உன் உள்ளே அசைவற்றிரு, போய்வா!

**தாண்டவராயன்** : ஏ! மகானுபாவா! எனது பிறவிப் பிணிக்கு நன் மருந் தளித்த சற்குருவே! மனம், வாக்கு, காயம் உள்பட நமஸ்காரம்.

C C C

# PART - 6

ஓர் சமுத்திரம் அலைகளால் கொந்தளித்துக் கொண்டிருந்த சீன் ஒன்று தோன்றியது. அச் சமுத்திரத்தின் நடுவில் தீபஸ்தம்பம் போலும், பெருமான் கோயிலின் முன்னதாக விருக்கும் துவஜஸ்தம்பம் போலும், தங்கமயமாக ஒரு ஸ்தம்பம் தோன்றிற்று. அந்த ஸ்தம்பத்தின் உச்சியில் சிங்கார விமானம் போல அழகிய கட்டடம் ஒன்று தோன்றியது. மிக்க வழவழப்பாகவுள்ள அந்த ஸ்தம்பத்தின் உயரம் 995 அடியிருக்கலாம். ஸ்தம்பத்தின் (அடியில் 20X20) சதுர அடியில் உள்ளதும், 5 அடி உயரம் கொண்டதுமான மேடை ஒன்றிருந்தது.

தங்கத்தைப் போல தகதகவென மின்னக் கூடிய ஓர் பெரிய மலைபோன்ற உருவம் தோன்றிற்று. அதன் நடுவில் வீதி ஒன்று தோன்றியது. நடுவில் ஆறடி உயரமுள்ள சாண்டோ போன்ற கம்பீரமான புருஷன் ஒருவன் தோன்றினான். அவன் தனக்கு உலக சம்சார பந்தம் நிர்வகிக்க முடியாத கஷ்டநிலையாயிருக்கிறதென்றும், அதற்காக அத்துன்பத்தை யொழிக்க உலகத்திலுள்ள பந்து மித்திர ஜனங்கள் ஒருவர் கண்ணிலுமகப்படாமல் தான் ஏகாந்தமாயிருக்க வேண்டுமென்றும், ஸ்தம்பத்தடியில் தோன்றும் அம்மேடையில் ஏறினான்; மேல் நோக்கி உச்சியிலுள்ள கலசத்தைப் பார்த்தான்; அது பளிங்குபோலும், வைரம் போலும்ஓர் பிரபை வீசிற்று. பதினைந்தடி குறுக்களவுள்ள கமலம்போலுள்ள அப் பிரபையை உற்று நோக்க வைரத்திற்குரிய பச்சை, மஞ்சள், சிகப்பு, வெண்மை, நீலம், பொன்மை முதலிய கலர்கள் காட்டியது. மீண்டும் பார்க்க கிறுகிறென்று சுழன்றது. மீண்டும் பார்க்கப் படிக நிறமாகமாறினது.

இப்படிப் பார்த்தவன் உபசாந்தத்தைப் பெற தென்னை மரத்தில் ஏறுவதுபோல ஸ்தம்பத்தை அணைந்து சுமார் நான்கடி ஏறினான். அப்போது அவனது மனைவி, மக்கள், உறவின்முறையார் பலர் கூட்டங்கூடி இவனைக் காணாமல் தேடி ஓட்டமாக வந்து நாங்களெல்லோரும் உன்னை நம்பியிருக்கிறோம். எங்களுக்கு வழி சொல்லிவிட்டு உன் வழியைப் பார் என்று துவஜஸ்த் தம்பத் தடியில் கூடிவிட்டார்கள். வழவழப்பாகவுள்ள—ஸ்தம்பத்தில் நான்கடி ஏறியவனை மனைவியும் மக்களும் காலைப்பிடித்து இழுத்து கீழே தள்ளிவிட்டார்கள். ஆகவே இவன் ஏறவும், அவர்கள் காலைப்பிடித்து கீழே தள்ளவும். இப்படி ஒரு முகூர்த்த காலம் சரியாய்ப் போயிற்று. இதே

தொந்திரவாயிருக்கின்றதெனத் தீர்மானித்து, அம்மேடையை விட்டிறங்கினான். இவனைத் தொடர்ந்து கூட்டங்களும் மேடையே விட்டிறங்கின. வீட்டை நோக்கி போக்குக்காட்ட ஓட்டம் பிடித்தான். எல்லோரும் பின் தொடர்ந்து ஓடிவந்தனர். இந்த சமயத்தில் சாண்டோ திரும்பி ஒரே ஓட்டம் பிடித்து வந்து தாவி மேடைமேலேறி ஸ்தம்பத்தில் நூறடி ஏறி அங்குள்ள கவணையில் களைப்பாறினான். அந்த ஸ்தம்பத்திற்கு நூறடிக்கு ஒரு திரணை, பூண்போன்ற கவணையுண்டு. முன்னம் காலைப் பிடித்திழுத்தவர்கள் ஓடோடியும் வந்து பார்த்து ஏமாந்தனர். ஏறியவன் முறையே 200 அடி 300 அடி, இப்படி 700 அடி ஏறினான். அங்கு ஏரோபிளானில் தேவர்கள் வந்து நீ அங்கு செல்வது தகுதியல்ல. இறங்கு போகாதே என்று ஸ்தம்பத்தை சுற்றிச் சுற்றிப் பறந்து பிடித்திழுத்துப் பார்த்தனர். இவன் பிராணன் போனாலும் சரி இறங்கமாட்டேன், நீங்கள் சொல்லுகிறபடி கேட்கவுமாட்டேன் என்று ஸ்தம்பத்தை ஒரே பிடியாய்ப் பிடித்துக் கொண்டான். இவனைப் பிடித்தால், தமக்கும் ஏரோப்பிளானுக்கும் ஆபத்து வருமென்றெண்ணி இவன் வைராக்யக் காரனெனத் தீர்மானித்து விட்டுப் போயினர். மீண்டும் 800 அடி, 900 அடி ஏற மயங்காமல் தைரியமாக 1000 அடியும் தாண்டி உச்சியில் 1008 மாற்றுள்ள தங்க விமானக் கட்டிடத்தைக் கிட்டிப்பிடித்து, மேலேறிக் கூசாமல் உள்ளே செல்லும்போது இத்தனை பாடுபட்டுப் போயும் காவற்காரன் நீ யாரென்றான். அவனையும் கவனிக்காதது போலக் கடக்க மற்றொரு காவற் காரன் இவ்வழியே போவென்று வழிகாட்ட அதற்கப்பாற் சென்றான். பெண் ஆண் இருவரிருந்து இதற்கு மேல் சந்நிதிக்குப் போவென்றார்கள். மேற் சென்றான். **ஆனந்தவல்லி அம்மனைக்** கண்டு தரிசனம் பெற்றான். அன்னவள் ஞானப் பாலளித்தாள். ஆனந்தமாகச் சாப்பிட்டான். பின் ஆனந்த வல்லி சமிக்ஞையால் உள்ளே போவென்று குறித்தாள். இன்னமுமா உள்ளே போக வேண்டியிருக்கின்றது என்று உள்ளே சென்றான். துணிவுடன் போன ஆளைக் காணோம் பெரு வெளியில் நடராஜர் சந்நிதி தெரிந்தது, **போன ஆள் நடராஜருக்குள் புகுந்துவிட்டானா?** அல்லது **நடராஜராகிவிட்டானா?** ஒன்றும் தெரியவில்லை.

**குறிப்பு** : யோகக் காட்சியின் மாக்ஷிமை.

---

காலம் போகும் சொல் நிற்கும். ஜாக்கிரதை

# PART - 7

சடையூர் கிராமக்காக்ஷி தோன்றியது. அவ்வூரின் நடுவில் திடீரென ஓர் வாலிபன் தோன்றினான். அவன் முகத்தில் சோகம், மோகம், ரௌத்திரம், வீரம், சிருங்கார முதலிய அனேக மெய்ப்பாடுகள் தோன்றித் தோன்றி மறைந்தன. இதைப் பார்க்குமிடத்து அவன் சுகம், துக்கம், லாபம், நஷ்டம், வெப்பம், குளிர்ச்சி இவைகளால் பாதிக்கப் பட்டவன் போல் தோன்றினான். பிறகு இவைகளை சகிக்கமாட்டாமல் வெறுப்படைந்து மலை, காடு, ஊர், பாலைவனம் முதலிய விடங்களெல்லாம் ஓடி ஆடித் திரிந்த சமயத்தில் மலையின்மேல் அவனிலும் மிக்க ஓர் பைத்தியக்காரனைச் சந்தித்து, அலுத்துக்களைத்து அமர்ந்தான். இருவரும் ஏதேதோ பேசினார்கள் சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் முகத்தில் முன்னிருந்த பரபரப்புத் தோன்றவில்லை. அதனால் அவன் அகத்தின் அசைவாகிய பரபரப்பு நின்ற பிறகே முகத்தில் சாந்தம் தோன்றியிருக்கலாமென நினைத்தேன். இப்படி சாந்தமும் சமாதானமு மடைந்து சாவதானமாக இருந்தவன் தன்னிருப்பிடம் வந்தான். வந்தவன் தன்னை மறந்து தலைவனை உணர்ந்து உட்கார்ந்திருக்கும் அவன் முன்னால் கோர ரூபத்துடன் தேவி பிரஸன்னமாகி அவனைப் பார்த்து என்ன வேலை இது? உன் வேலையை நீ பெரிதாகப் பார்த்தால் உன்னால் எனக்கு ஆக வேண்டிய உலக வேலைகள் சிறிதளவு பாக்கி இருக்கின்றனவே! அவைகளைக் குறித்தபடி யார் செய்வது? என்று வீராவேசத்துடன் மொழிந்தாள்! தன்னை மறந்து உட்கார்ந்திருப்பவன் இதைக் கேட்டவுடன் திடுக்கிட்டு விழித்து பயந்து எழுந்து தேவியின் திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்து நின்றான். அவனைப் பார்த்து, நீ இன்னம் சிறிது காலம் உனக்கென்று நான் விதித்த மாயாவினோத உலக நாடகத்தில் நடித்து வினைப் பகுதியை முடித்துவாவென்றாள்.

ஹே ஜெகதம்பிகே! இதுவரையில் அனேக காலம் தீராத துயர்க்கடலில் கிடந்து அழுது நொந்து அலுத்து வெந்து திருவருட் ஜோதி வடிவக் கடவுளைக் காண தவம் செய்தேன். அத் தவத்திற்கிணங்கி என் தூல சூக்கும காரண சட்டைகளை உதிர்த்து ஒளிவடிவாக்கினார். அவ்வொளியிலிருந்து என்னை வெளியில் இழுப்பது நியாயமா? தர்மமா? என தேவியிடம் தர்க்கித்தான்.

அதற்கு அத் தேவதேவி அது உன்னிஷ்டமா! என்னிஷ்டம் என கர்ஜித்து, தனித்திருந்தவனை நீ தலைவனாக இருந்து பார்க்க

வேண்டாம். கூலிக்கு மாறடிப்பவனைப் போல் பற்றின்றி உன் கனவைக் கழித்துவா போ என திருவாய் மலர்ந்தருளினாள்.

வெறும் ஆளாக இருந்த அவனுக்கு குண்டுமில்லாமல் மருந்துமில்லாமல் ஆறுதலுக்கு ஆறுவூர்களில மில் தொழிற் சாலைகளைக் கொடுத்தும், ஞானாம்பா ளென்னும் தேவியையும் சிவானந்தம் நித்தியானந்தம் என்னும் ஆனந்த குமாரர்களும் இராஜலட்சுமி, ஞானசரஸ்வதி, இராஜராஜேஸ்வரி, ஞான குமாரி முதலிய புத்திரிகளையும் புவன போக பாக்கியங்களையும் கொடுக்க, ஓடும் சக்கரம், என்றும் இப்படியே ஓடாதென்றும், ஓர் சமயம் நின்றே தீருமென்றும் தெளிவுடன் இவ்வற்ப சொற்பனக் காட்சியில் தன்னைக் காண்பதும், தலைவனைக் காண்பதும் மாயா காரிய கூத்தைக் காண்பதும், இவைகளில் விவகார வேளையெல்லாம் சகஜ சமாதியிலிருக்கின்றதும் என்னே காட்சி.

## PART - 8

அஷ்டகோணம் பொருந்திய, நவத்துவாரம் அமைந்த பெரிய சபைக் கட்டடம் ஒன்று தோன்றிற்று. அங்கே டங்கா டமாரம், மணி முதலிய பல இன்னொலிகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. பின்பு அவ்வொலி நின்று, சபையின் வாயிற் கதவு படாரென்று திறக்கப்பட்டது.

1. கருப்புத் திரை ஒன்று தோன்றியது. அதில் "**மாமாயை**" என்று குறிப்பிட்டிருந்தது. அதுவும் மறைந்தது.

2. நீலத்திரை ஒன்று தோன்றியது, அதில் "**மாயாசக்தி**" என்று குறிப்பிட்டிருந்தது, அதுவும் மறைந்தது.

3. பச்சைச் திரை ஒன்று தோன்றியது, அதில் "**கிரியா சக்தி**" என்று குறிப்பிட்டிருந்தது. அதுவும் மறைந்தது.

4. சிகப்புத் திரை ஒன்று தோன்றியது. அதில் "**பராசக்தி**" என்று குறிப்பிட்டிருந்தது. அதுவும் மறைந்தது.

5. பொன்மைக் கலருள்ள திரை ஒன்று தோன்றியது, அதில் "**இச்சாசக்தி**" என்று குறிப்பிட்டிருந்தது. அதுவும் மறைந்தது.

6. வெண்மைத் திரை ஒன்று தோன்றியது, அதில் "**ஞான சக்தி**" என்று குறிப்பிட்டிருந்தது. அதுவும் மறைந்தது.

7. பலகலருள்ள திரை ஒன்று தோன்றிற்று, அதில் "**ஆதிசக்தி**" என்றும், கமலம் போன்றும் நடுவிருந்தது, அதுவும் மறைந்தது.

முறையே இந்த ஏழு திரையும் போய், **இருளும் ஒளியுமில்லாத, இரவும் பகலுமல்லாத பிரகாச வடிவம்** தோன்றிற்று. அதுதான் ஜோதி ஸ்வரூபம்.

*குறிப்பு* : இது வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் தனக்குள் அகமுகத்தில் கண்ட ஆன்ம தரிசனத்தைக் கருணை மேலீட்டினாலே, பகிர் முகத்தில் ஜீவர்கள் எளிதிலுணர்ந்து கொள்ளின், பின்பு அவர்கள் அகமுகத்தில் ஆண்டவனைத் தரிசிப்பது சுலபமென்பதாக ஸ்தாபித்த வடலூர் ஞானசபை போலும்.

## END GOOD NIGHT

**C C C**

இப்படி நடைபெற்ற 8 ரீல்களும் முடிவுபெற்றன. உடனே நாங்களிருவரும் கண்ட காக்ஷிக்குக் காரணத்தைக் கண்டு பிடிக்க புரொஜெக்டர் ரூம் சென்றோம். அங்குள்ள ஆயிரம் காண்டில் பவர் பல்ப் வெளிச்சம் காணக் கண் கூசின. பார்க்க முடியவில்லை. சுருணை சுற்றும் யந்திரம், பிலிம், ரோல்கள், லென்ஸ், ஆப்பரேட்டர், டயனமோ, ஸ்விச்போர்டு முதலியவைகளைப் பார்த்துத் தெளிந்துலேடியும் நானும் வெளிவந்து எங்களுக்கென்று காத்திருந்த மோட்டார் காரிலமர்ந்து கின்னெட்லேன் மோஹன விலாஸ் பங்களாவிற்குச் சென்றோம். சென்றதும் அலோ மைடீயர் என்று தனது படுக்கை யறைக்கு அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்து, தாம்பூலம் மடித்துக் கொடுத்து இன்னிசைக்கருவியில், பல மோகப் பாட்டுகளைப் பாடி சந்தோஷத்தை யுண்டாக்கி கடைசியில் தன் ஆபரணங்களைக் களைந்து, தலையிலுள்ள சுருள் நிறைந்த கறள் டோப்பா மயிரைக் கூடாகக் கழற்றி வைத்தாள். (தலை மொட்டை வழுக்கைத் தலை) பின்பு வலது கையினுதவியால் இடது கையைக் கழற்றி வைத்தாள் எனக்கு ஆச்சர்யமுண்டாயிற்று. இவளுக்கு தலை மொட்டையென்றும், ஒருகை தான் உண்டென்றும் மற்றொரு கை போலிக் கையென்றும், எனக்கு முன்னமே தெரியாது. பிறகு, அம்மாது ஒரு காலைக் கழற்றி வைத்தாள். என் மனது பீதி அடைந்தது. ஷை லேடி தனது ஒரு கண்ணைப் பெயர்த்து வைத்தாள், வாயைத் திறந்து இரண்டு தந்த வரிசைகளையும் கூடாகக் கழற்றி மேஜையின் பேரில் வைத்தாள்.

---

பார்த்தேன் பிரமித்தேன், உரித்துவிட்ட கோழியைப் போல் தலைமொட்டை கண் பொட்டை, பொக்கை வாய், ஒரு கை, ஒரு காலில்லா முண்டம் இதைக் கண்ணால் பார்ப்பதே கஷ்டம். பார்த்தும் எவ்விதம் இவளைச் சேர மனம் வரும்? ஐயையோ இந்த முண்டத்தின் பேரில் ஆசைவைத்தேனே என்ற துக்கம் அதிகமாகி ஒரே ஓட்டமாக ஓடியிருப்பிடம் போய்ச் சேர்ந்தேன். தூக்கம் வரவில்லை அப்போது அடடா என்று இப்படி மோசம் போனேனே! இணையில்லாச இந்திரபோகம் அனுபவிக்க வல்லவோ போனேன். வெளிப் பகட்டை கண்டு ஏமாந்து ரூ. 250 நோட்டு கொடுத்தேனே, பகுத்தறிவில்லா தோஷத்தால் இத்தனை கஷ்டமுண்டாயிற்று என்று எண்ணி எண்ணி துக்கப்பட்டேன். இந்த பர்மா லேடியிடம் நான் ஆசைப்பட்டது தலை மயிருக்கா, கழற்றி வைத்த கண்ணாடிக் கண்ணுக்கா மெஷினால் செய்த பீங்கான் பல்லுக்கா, மரத்துண்டும் பஞ்சினாலுமமைந்த கைக்கா, காலுக்கா, அவள் சிவப்பாக யிருக்கிறாள், தோல் கனத்துமிருதுவாயிருக்கிறது என்று தோலை கூர்ந்து நினைத்தேனல்லவா? ஹா! ஹா!! நல்ல தோல் கருப்புத் தோல், சிவப்புத் தோல், கனத்த தோல், மிருது வான தோல் என்று கூர்ந்து பார்ப்பது சக்கிலியனுடைய வேலையல்லவோ. அந்த சக்கிலி புத்தி எனக்கிருந்த படியினால் இந் நிலைக்கு வந்தேன். போனது போகட்டும் என்று, சற்று அயர்ந்து தூங்கலாமென நினைத்தேன். சினிமாவில் கண்ட ஒவ்வொரு விஷயங்களும், நான் கண்மூடிப்படுத்திருக்கும் போதே என் கண்முன்னால் நடப்பதாகவே தோன்றுகின்றதே, இதென்ன, "**தின்ற ஆகாரத்தை மாடானது மீண்டும் வாயில் கொண்டு வந்து அசைபோடுவது**" போல இப்படி மனம் கண்டதைக் கொண்டு வந்து காட்டுகின்றதே. இப்படியே மனதிற்கு இடங்கொடுத்தால் மனது தனதிஷ்டப்படி சற்று நேரத்திற்கு முன்மோஹன விலாஸ பங்களாவில் நிகழ்ந்த கதையிலும் கொண்டு போய்விடும் போலிருக்கிறது. மனதைச் சற்று நிதானித்துக் கண்களை மூடி ஊன்றிப் பார்ப்போம். "**ஊன்றிப் பார்த்தால் மனமென்று ஒரு பொருளைக் காணோம்**" ஒன்றுமில்லா பாழடைந்த இடம் போலல்லவோ தெரிகின்றது. சரிதான், சரிதான் சினிமா படுதாவில் அனேகவித உருவங்கள் இயற்கையாகவும், செயற்கையாகவும், இயற்கைக்கு மாறுபாடாக (விரோதமாக)வும் சில சில இடங்களில் ஒன்றிற்கொன்று சம்பந்தமில்லாமாலும், சில விடங்களில் பிலிம் தயாரிப்போர் தமது

கற்பனா சக்திக்குத் தக்கபடி இஷ்டம் போலும், மனம் வாக்குக் கெட்டாத அளவு கடந்த விதமாகக் கண்டேனல்லவா. அந்தப்படி தான் மனதின் இயற்கை போலிருக்கிறது. ஆகவே மனதின் எண்ணத்தை எடுத்துவிட்டுப் பார்த்த இடமும், சினிமாவில் பிலிம் உருவங்கள் ஓடாமல் கார்பன் லைட்டைக் கொண்டு படுதா வெண்மையாக தெரிந்த விடமும், ஒன்றுதான் போலிருக்கிறது. நாடாவிலுள்ள உருவங்கள் ஆபாசப்படுத்தி உருவம் வேலை செய்வதுபோல், மனதின் ரூபமும் கற்பான வடிவம் போலிருக்கிறது. எப்படி ஜெகன் மோஹன ஞான விலாச சினிமாவில், காக்ஷிகளைக் கண்டவுடன் காரணத்தைக் கண்டுபிடிக்க முயற்சியெடுத்து, புரொஜெக்டர், ஆபரேட்டர், ரோல்பிலிம், லென்ஸ், ஆர்க்லாம்ப், டைனமோ, ஸ்விச்போர்டு முதலியவைகளைக் கண்டு பிடித்தது போல கவனிக்கிறேன். மனதில் எண்ணங்களுடன் கூடிய இடத்தையும் (அசுத்தமனது) பாழடைந்ததைப் போலுள்ள எண்ணங்களற்ற சும்மா இருந்த இடத்தையும் (சுத்தமானது) எது தெரியச் செய்ததோ அதுதான் **"ஜோதி"** அதுதான் "**ஆன்மா**". ரோல்பிலிம் சுற்றும் வரையில் திரையில் உருவங்கள் தோன்றினது போல அந்தக் கரணத்தில் வாசனையுள்ள வரையில் ஜாக்ர ஸ்வப்பனங்களில் நானா விசித்திரங்களாகத் தோன்றி நிற்கும் படுதாவில் உருவங்கள் விளங்கிய போதும், உருவ ஓட்டமில்லாமல் சுத்த வெண்மையாகத் தோன்றிய போதும், ஆர்க்லாம்ப் எல்லாவற்றையும் விளங்க வைத்து, தான் அசைவற்றிருந்தது போல, ஆன்மாவும், மனம், தேகம், ஜகம் முதலியவைகளை தோற்றுவித்தும், தான் இருந்தபடி இருந்தது.

நான் இத்தனை நாளும் எனக்குள் புகுந்து பார்க்காமல், ஜகத்துள் புகுந்து பார்த்தல்லவோ, உண்மையுணராமல் இத்தனை அல்லற் குட்பட்டேன். போதும், போதும், சென்னைக்கு வந்து **"சித்துப் பொருளைக் கண்டதும்"** சென்னைக்கு வந்து **"சிவனைக் கண்டதும்"** என்று பிரலாபித்துக் கொண்டிருந்த சமயம் நான்கு மணிக்கு விழிக்கவேண்டுமென்று அலாரம் கொடுத்து வைத்திருந்த Big Ben டைம்பீஸ் டுற்... ற்... ற்... ற் என்று ஒரே சப்தம் சப்திக்க ஆரம்பித்தது கண்களை விழித்துப் பார்க்கவே யான் படுத்திருந்த ஸ்பிரிங்கட்டில் தவிர வேறொன்றையுங் கண்டேனில்லை. காக்ஷிகளனைத்தும் பொய்யாய்ப் பழங்கதையாய் வெறுங் கனவாய்ப் போயின.

C C C

---

உள்ளும் புறமும் ஒத்துநட

## 58. நான்கு செய்யுளில் ஞான ரகசியம்



ஓர் அமாவாசை நள்ளிரவு, சென்னையிலுள்ள சிந்தாதிரிப் பேட்டையில் கொள்ளைக் கூட்டத்தார் 12- பெயர் கூடி இன்றிரவு எங்கே கொள்ளையடிக்கலாமென் றாலோசித்து, அதிலொருவன், மவுண்ட்ரோட்டிலுள்ள போயார் அண்டு சன்ஸ் கம்பெனி தான் பிரபலமாக வியாபாரம் நடந்து வருகின்றது. இன்று போனால் ஏராளமாக பவுன்கள், டாலர்கள், வைரம், கோமேதகம் முதலிய அமைந்த உயர்தர நகைகளை கொள்ளையடிக்கலா மெனச் சொல்ல, அதிலொருவன், மிக்க பந்தோபஸ்தா யிருக்கின்ற விடமாயிற்றே, எப்படி கொள்ளை யடிக்கக் கூடுமென கேட்க, மற்றொருவன் எனக்கு மிகுந்த சாமாத்தியமுண்டு உளவனில்லாமல் களவாடமுடியாது, அந்தக் கம்பெனியின் வாயிற் காவல்காரன், அஸன்கானாலுளவு கண்டு, பின்பு கொள்ளையடிக்கலா மென்று சொல்லி அஸன்கானைக் கண்டுபிடித்து 50-பவுனை முன்னதாக அவன் கையிற் கொடுத்து, உளவறிந்து, பின்னர் யாவரு மொன்று கூடி கம்பெனிக்கு வந்து, ஒருவன் கதவின் நிலையின் மேலுள்ள ஓர் பட்டனை அழுத்தினான். திடீரென்று கதவு படீரென்று

திறக்கப்பட்டது. யாவரும் ஒன்றுகூடி காணப்பட்ட ரூமில் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டார்கள். அதிலொருவன் அங்குள்ள பட்டனை அழுத்தினான், அந்த அறையோடு அங்குள்ளவர்களை யெல்லாம் மேலே சரேலென்று (எலக்ட்ரிக் சக்தி) ககனமார்க்கமாக 7-வது மாடியில் கொண்டு நிறுத்தினது. இவர்கள் போன ரூம் திறக்க அந்த நிலைக்குச் சென்று பார்த்துத் தாக்குத் தகவலில்லாமல் (எலக்ட்ரிக் ஸ்விச்) போர்டிலுள்ள பட்டனை ஒருவன் அழுத்திவிட்டான். பட்டனை அழுத்தியதால் புரோப்ரைட்டர் இருக்குமிடத்திற்குப் போய் காலிங் பெல் அடித்துக் கொண்டிருந்தது. ஏற்கனவே 1000 வாட்ஸ் பவர் எலெக்ட்ரிக் லைட் வெளிச்சம் அடித்துக் கொண்டிருந்து. கண்ணாடி பீரோவிலுள்ள பொருள்களையும் பெட்டி பேழை முதலிய பொருளிருக்கு மிடத்தையும் கண்டுபிடித்தார்கள். எலெக்ட்ரிக் பவர் வெளிச்சம் இவர்கள் கண்களைத் திகைக்கச் செய்தன. அதிலொருவன் அவ்வெளிச்சத்தைப் பாணாத் தடியினாலடித்து உடைத்து நிறுத்தினான். அவர்கள் கையிலுள்ள சிறிய செர்ச் லைட்டைக் கொண்டு பார்த்து பீரோபெட்டி பேழை முதலியவைகளைத் திறந்தெடுக்க காலதாமத மாகுமென்று தூக்கித் தூக்கிப் போட்டுடைத்து தூள் தூளாக்கினார்கள். வேண்டிய பொருள்களைப் பொறுக்கிக் கொண்டு வழி தெரியாமல் படிக்கட்டின் மார்க்கமாவே இறங்கி ஓடி வருகின்றார்கள். நித்திரையிலிருக்கும் புரோப்ரைட்டர் ஓயாமலடிக்கும் காலிங்பெல் சத்தம் கேட்டு, நித்திரை தெளிந்தெழுந்து, இந்நள்ளிரவில் கம்பெனி ஸ்டாக் ரூமிலிருந்து காலிங் பெல் அடிக்க வேண்டிய காரணமென்ன ஏதோ மோசம் நடக்கின்றதெனத் தெளிந்து, ஓடோடியும் வந்து கதவைத் திறக்க திருடர்கள் இவரைக் கீழே தள்ளி மேலே மிதித்து ஓட்டம் பிடித்தார்கள். துரை எழுந்து மிக்க நடுக்கமுற்று, உட்சென்று பார்த்து வயிற்றிலும் வாயிலுமடித்துக் கொண்டு ரவுண்ட் டாணாவில் வந்து நின்று, இச் சென்னையில் இப்படியும் அக்கிரமுண்டாவென ஹோவென்று அழுது சத்தம் போட்டு, நீதியில்லையா? நெறியில்லையா? ஓ ஜவான்களே எங்கே தூங்குகிறீர்கள்? ஓடிப் பிடிக்கமாட்டீர்களா? நான் அலறுவது உங்கள் காதில் கேட்கவில்லையா? ஓ பராபரக் கடவுளே? என்று புலம்பி நின்றார்.

ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அருட்பா

மாயையெனு மிரவில் என் மனையகத் தேவிடய
வாதனை யெனுங் கள்வர்தாம்

---

முகஸ்துதியாய் பேசாதே

வந்துமன வடிமையை யெழுப்பி அவனைத் தமது
வசமாக வுளது கண்டு
மேயமதி யெனுமொரு விளக்கினையவித்து எனது
மெய் நிலைச் சாளிகை யெலாம்
வேறுறவுடைத்துள்ள பொருளெலாங் கொள்ளைகொள
மிகநடுக் குற்று நினையே
நேயமுற வோவாது கூவுகின்றேன் சற்று
நின் செவிக் கேறவிலையோ
நீதியிலை யோதரும நெறியுமிலை யோவருளி
னிறைவு மிலையோ என்செய்கேன்
ஆயமறை முடிநின்ற தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழு மணியே
அகிலாண்ட மும்சரா சரமுமீன் றருள்பரசி
வானந்த வல்லி யுமையே.

அமாவாசை நள்ளிரவில், சென்னையம்பதி சிந்தாதிரிப் பேட்டையிலுள்ள 12 திருடர்கள் மவுண்ட்ரோடு போயார் அண்டு சன்ஸ் கம்பெனி வாசற் காவற்காரனால் எப்படி உளவு கண்டு பிடித்தார்களோ, அதைப் போல வடலூர் ஸ்ரீ மத் இராமலிங்க சுவாமிகளும், தனது ஆரம்ப நிஷ்டானுபவத்திலிருக்கும் போது, அந்தரங்க இருதய மனையில், மயக்கத்தைத் தரக்கூடிய மாயையென்னும்சக்தி மறைப்பின் சந்தர்ப்பத்தில் இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மத்சரம், டம்பம், தர்ப்பம், ஈரிஷை, அசூயை யென்னும் 12 திருடர்களும், அடிமை மனம் என்பவனால் உளவு கண்டு, துணைபிடித்து - கம்பெனியிலுள்ள மிக்க பிரகாசம் பொருந்திய எலெக்ட்ரிக் வெளிச்சம் திருடர்களின் கண் பார்வையை மறைத்துக் கெடுத்துவிடுகிறதென நினைத்து உடைத்து அணைத்து, பீரோ பெட்டி பேழை முதலியவைகளை யெல்லாம் தூக்கிப் போட்டு உடைத்து, சின்னா பின்னப்படுத்தி அதில் கிடைத்த வைர நகைகள், டாலர்கள், பவுன்கள் எல்லாற்வற்றையும் வாரிக் கொள்ளை கொண்டு போக, கம்பெனி புரோப்ரைட்டர் பார்த்து, மிக்க நடுக்கமுற்று, எப்படி அவஸ்தைப் பட்டாரோ, அதைப் போல, இராமலிங்க சுவாமிகளும், தன்னையறியும் ஆன்மப் பிரகாசத்தை விஷய வாசனைத் திருடர்கள் தெரியவொட்டாமல் தடுத்து மேலும் ஈவு, இரக்கம், தயை, தாக்ஷிண்யம், ஜீவகாருண்யம், உண்மை நிலை யென்னும் பொக்கிஷ மாளிகையை பஞ்சமா பாதகர்கள் உடைத்து நாசமாக்க அதிலுள்ள

புண்ணியப் பொருள்களை யெல்லாம் கொள்ளை கொண்டுபோக, உளம் பதறி நடுக்கமுற்று - கம்பெனி துரை மவுண்ட்ரோடு ரவுண்டாணாவில் வந்து வயிற்றிலும், வாயிலு மடித்துக் கொண்டு ஹோவென்று சத்தம் போட்டு அழுது போலீஸ் டாணாக்காரர்களே தூங்கி விட்டீர்களா? நான் அலறுவது உங்கள் காதில் கேட்கவில்லையா? என்ன அநியாயம், நீதியில்லையா? தருமமில்லையா? அந்தோ! என் செய்வேன் ஓ பராபரக் கடவுளே! என்றழுததைப் போல, இராமலிங்க சுவாமிகளும், ஸ்ரீ மந் நடராஜப் பெருமானைக் குறித்து, அடிக்கடி எத்தனை முறை ஓயாது கூவியும் நின்செவி கேட்கவில்லையோ? நீதியில்லையோ? தரும நெறியுமில்லையோ! வேதத்தின் முடிவாக நின்று படைத்தல், காத்தல், அழித்தல், திரோபவம், அனுக்கிரஹம், என்னுமைந் தொழிலையும் நினது சந்நிதான விசேஷ வல்லபத்தால் நடத்தும் சிவசுகாதீத அகண்டப் பெருவெளியில் ஆனந்த நிருத்தமிடும் ஹே! ஸ்ரீமந் நடராஜப் பெருமானே! என்று ஓலமிடுகிறார் நமது வள்ளற் பெருமான். ஸ்ரீ மத் இராமலிங்க சுவாமிகள். இத்தகைய கருத்தை யொருங்கே யமைத்து, தமது அருட்பாவில் ''**மாயை யெனுமிரவில்**'' என்னும் பாசுரத்தை யமைத்தார் போலும்!

C C C

-2-

சித்திரை மாதம் வெய்யிலில் அழகிய யௌவன மாது ஒருவள், ஒரு கால் பொடி ஒரு காலில் ஒட்ட உஷ்ணம் தாங்க முடியாமல் ஓடும்போது, சமீபத்தில் மாமரம் ஒன்று தோன்ற அம் மரத்தின் குளிர்ந்த நிழலுக்கு வந்து சேர்ந்தாள். சிறிதுநேரத்தில் களைப்பாறி சுகம்தோன்ற, பக்கத்தில் ஊற்று நீரோடை ஓடிக் கொண்டிருப்பதைக் கண்டு, அதில் மதுரங் கனிந்த தீஞ்சுவைத் தண்ணீரை உளமகிழப்பருகினாள். பின்னர் அந்நீரோடையில் மலர்ந்து சுகந்த வாசனையுடன் பரிமளித்துக் கொண்டிருக்கும் புஷ்பத்தைப் பறித்து மரத் தடியில் அழகிய மேடை ஒன்றிருக்கக் கண்டு அதிலமர்ந்து கையிலுள்ள புஷ்பத்தின் இயற்கையழகிலும் நறுமணத்திலும் மனதைச் செலுத்திக் கொண்டிருக்க இளந்தளிர்களின் மெல்லிய பூங்காற்று வீசவே, ஆனந்தமடைந்து அவளையும் அறியாது எழுந்து பரவசத்துடன் ஆடிக் கொண்டிருந்தாள். அப்போது எதிரில் யௌவன புருஷனொருவன்

தோன்றி இவள் நடனத்திற்கு மகிழ்ந்து மாலை சூட்ட இருவரும் ஆனந்தத்திலாழ்ந்தார்கள்.

> கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த
> குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே,
> ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே
> யுகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே,
> மேடையிலே வீசுகின்ற மெல்லியங்பூங் காற்றே
> மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே,
> ஆடையிலே யெனைமணந்த மணவாளா பொதுவில்
> ஆடுகின்ற அரசேயென் னலங்கலணிந் தருளே.
> (திருவருட்பா)

கோடை வெய்யிலில் யௌவன மாது ஒருவள் பூமியின் வெப்பம் தாங்கமுடியாமல் மாமரத்தடியில் குளிர்ந்த நிழலில் தங்கி எப்படி களை தெளிந்தாளோ, அதைப்போல முன்ஜன்ம பரிபக்குவ யௌவன வள்ளற் பெருமான் இராமலிங்க சுவாமிகளும் தனது அறியாப்பருவத்தில் மனக் கோட்டத்திலகப்பட்டு மன வெப்பத்தின் துன்பத்தை சகிக்கமாட்டாமல், உண்முகத்தில் கனிந்த நிழலில் வீழ்ந்து, உபசாந்தமென்னும் குளிர்ந்த தன்மை மேலோங்க - அந்த மாது பக்கத்தில் தோன்றிய நீரோடையின் தண்ணீரை அருந்தி அதிலுள்ள புஷ்பத்தை எடுத்துக்கொண்டு, மேடைமேலமர்ந்ததும் மெல்லிய பூங்காற்று வீச ஆனந்த பரவச முற்றிருந்ததைப் போல ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும் ஞானவாரிதியாகிய ஓடையிற் சென்று தாகந்தணிய மௌன தீஞ்சுவைத் தண்ணீரைச் சாப்பிட்டு அந்நீரிடைக் கிடைத்த துரிய நிலையென்னும் புஷ்பத்தினை அடைந்து மிகுந்த அனுபவமென்னும் மேடைமேலேறி பரம சகஜ ஆனந்தமென்னும்தென்றற் காற்று வீசப் புளகாங்கித முற்றிருக்கும் சமயம் யௌவன மாதானவள் தன்னை மீறிய பரவசத்துடன் ஆடிக் கொண்டிருக்கும்போது எதிரில் ஓர் புருஷன் தோன்றி மாலை சூட்டி மகிழ்ந்ததைப் போல ஸ்ரீ மத் இராமலிங்க சுவாமிகளும் தனது துயர்காணா நிலையில் மகிழ்ந்து சிதாகாசப் பெருவெளியில் ஆடிக் கொண்டிருக்கவும் ஸ்ரீமந் நடராஜப் பெருமானும் நாட்டியத்திற்கு மகிழ்ந்து உன்னை நான் ஆட்கொண்டேனென்று நேரில் ஞானரஞ்சித மாலைசூட்டி குருதுரிய பரவெளியில் ஒன்றுபட்டார்கள். இதைவள்ளற் பெருமானும் அருட்பாவில் "கோடையிலே இளைப்பாற்றி" என்று உருவகப்படுத்தி பாடி அமைத்தார் போலும்.

---

பொய் இருட்டில் போகாதே

-3-

மலைச் சாரலில் மரம் செடி புதர்கள் அடர்ந்து தரிசாக கிடக்கும் நிலத்தை தனக்கு சுதந்திரப் படுத்திக் கொண்டு ஆட்கள் மூலம் அக்காட்டை வேறற வெட்டி ஆங்குள்ள மேடுபள்ளங்களை சமமாக்கும்போது, அதில் தடையாக யிருந்தசிறு கற்பாறைகளை வெடிமருந்து வைத்து உடைத்து வெளிப்படுத்தி பூமியை சமமாக்கி, உழுது திருத்தி, நல்ல பலன்தரும் தானிய விதைகளை விதைத்து, நீரைப் பாய்ச்சி, விதைகள் முளைவிட்டு பயிர்கள் சுபிட்சமாகக் கிளம்பி காலக்கிரமத்தில் பூவிட்டு கதிர்தாங்கி முற்றிவருவதை, (நாளைக்கு வேண்டுமென்று அபேட்சிக்காது அன்று பசியை மாத்திரம் தணித்துக் கொள்ளும்) அழகிய பஞ்சவர்ண சிட்டுகளும் மற்றும் சிற்றின பட்சி ஜாலங்களும், நாகணவாய்ப் புட்களும், பச்சைக் கிளிகளும், கூட்டங் கூட்டமாகத் தினந்தினம் வந்து விழுந்து சாப்பிட்டு ஒழிக்க ஆரம்பித்தன. இதைப் பார்த்து பயிரிட்டவர் "பிரயாசையின் பலன் வீணாய்ப் போகிறதே", என்று அவ்வகண்ட வெளியில் நாற்புறமும் பறணிட்டு பறவைகளணுகாத வண்ணம் கவணெறிந்து, காத்து தானியக் கதிர்களைப் பக்குவ காலத்தில் அறுத்து அறுவடை செய்து கொண்டு போய், உறவினருடன் உண்டுகளித்து எல்லோரும் பரமனைப் போற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக் கண்டகங்கார மென்னும்
 கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
 காணத்திருத்தி மென்மேல்,
பாராதி யறியாத மோனமாம் வித்தைப் பதித்தன்பு நீராகவே
 பாய்ச்சியது பயிராகுமட்டு மாமாயைவன்
 பறவை யணுகாதவண்ணம்,
நேராக நின்று விளைபோகம் புசித்துய்ந்த நின்னன்பர் கூட்டமெய்த
 நினைவின்படிக்கு நீ முன்னின்று
 காப்பதே நின்னருட் பாரமென்றும்,
ஆராரு மறியாத சூதானவெளியில் வெளியாகின்ற துரியமயமே
 அண்டபகி ரண்டமு மடங்கவொரு
 நிறைவாகி யானந்தமான பரமே. (ஸ்ரீதாயுமானவர்)

மலையடிவாரத்தில் புதர்களடர்ந்துள்ள காட்டை வெட்டி நிலத்தைப் பயிரிட பண்படுத்தியது போல, தாயுமானாரும் தனது ஆணவமென்னும் காட்டைக்களைந்தும், அகங்கார மென்னும்

கல்லைப் பிளந்தும் சங்கற்ப விகற்பம் தரும் மனமாகிய பூமி வெளியாகும்படி, அதில் மகாமௌன மென்னும் விதையை விதைத்து அன்பையே நீராகப் பாய்ச்சி, பெரிய மாயையாகிய வலிய பறவைகள் வந்து அதை அழிக்காமல் ஒழுங்காகக் காத்து பின்னர் விளையும் பேரின்ப மாகிய, போகத்தையனுபவித்து, "எத்தகைய நுண்ணறிவுடையாரும் காணாத அநிர்வசனீயமான ஞான ஆகாயத்தில் தோன்று கின்ற அரிய வடிவே! சூதான வெளியில் வெளியாகும் துரியமயமே" என்று உஜ்ஜீவனமடைந்த உன்னுடைய மெய்யன்பர் கூட்டத்தை, நானும் அடைய எனதெண்ணப்படி காட்சியளித்து காத்தல் நினது திருவருட் கடமையாகுமென்று தனது பாடலில், "காராரு மாணவக் காட்டை" என்னும் பாட்டை அமைத்தார் போலும்.

C C C

- 4 -

சிதம்பரம் அண்ணாமலை (யுனிவர்ஸிட்டி) சர்வகலாசாலையில் படித்துவரும் தேசபக்தி நிறைந்த, ஆடம்பரமற்ற பரிசுத்தமான உடைகளணிந்த, நெஞ்சம் களங்கமில்லாத, யாவரிடத்திலும் அன்புபூண்ட, பக்திமிகுந்த உத்தம குணங்கள் வகித்த, சூட்சும புத்தியுள்ள, தொடுத்ததை முடிக்கும் வைராக்கிய, அஞ்சாத நெஞ்சுள்ள ஆத்மநாதன் என்னும் யுவன் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, முதலிய உத்தம குணங்கள் நிறைந்த சிறுமியான அம்மாப்பேட்டையிலுள்ள அக்காள் மகள் லோகநாயகியை மணந்து தமக்கை வீட்டிலேயே விட்டுத் தனது படிப்பை நிறுத்தி, அதமமாகிய அடிமைத் தொழிலில் உத்தியோகம் செய்ய, மனமில்லாமல் உத்தமமாகிய சுதந்தர வாழ்வு வாழ எண்ணி, சென்னையம்பதி கோமளீஸ்வரன் பேட்டையில் (எஞ்ஜினீயரிங் வொர்க்ஸ்) கைத்தொழிற் சாலை ஒன்று நியமித்து, உத்தம வழியில் பொருளைச் சம்பாதித்துவரும் நாளில், எஞ்ஜினீயர் ஆத்மநாதனுக்கு சிதம்பரம் காலேஜ் வகுப்புத் தோழன் (கிளாஸ்மெட்) சிவானந்தனுக்கு விவாஹமென்று நிருபம் வர, மிஸ் லோகநாயகியின் ஞாபகமும் போராட, சென்னை எழும்பூரில் இரவு 9.30 மணிக்கு புறப்படும் போட் மெயிலில் ஏறினார். அம்மாப் பேட்டையில் லோகநாயகி தனது

உயிர்த்தோழி ஞானம்பாளுடன், மாலை 4 மணிக்கு உத்தியான வனத்திலுலாவி, உல்லாச மேடையிலமர்ந்து மெல்லிய காற்றில் சல்லாப முற்றிருக்கும் சமயம் தோழியை நோக்கி, என்ன! என் மனமானது சின்னாட்களாக ஓர்வித மாறுதலையடைந்து வருகின்றது. புத்தி ஓர்விதமான மாறுதலையடைந்து வருகின்றது. புத்தி ஓர்விதமான நிலையிலில்லை. நான் புஷ்பவதியாகி வருஷம் இரண்டாகிறது. எனது தாயும் தந்தையும், என்னைப் பற்றிக் கவலைகொள்ளவில்லை. என் மனதிலுள்ள கவலையை என்ன சொல்லப் போகிறேன். ஒரு சமயம் எனது காதலர் என்னையே மறந்திருப்பாரா? என்ன! அவருடைய க்ஷேமத்தை யெப்படி அறிய முடியும். என்னாயகரை எப்பொழுது கண்குளிர பார்த்து, வாயாரப் பேசி, மனமார மகிழ்ந்து, சந்தோஷ சாகரத்திலிருப்பேன். நித்திரைக்குச் சென்றாலோ நித்திரையும் வரமாட்டே னென்கின்றதே! இதுதான் விரக வேதனை என்பதோ? ஏண்டி; உனக்கேதேனும் என் நாயகரைப் பற்றி சமாச்சாரம் தெரியவருமா? ஆனாலும் நீ நாளை காலை கண்ணன்குடிநகர் ஆனந்த விலாஸம் சென்று அந்தரங்கமாய் ஏதேனும் சமாசாரம் வந்ததா எப்பொழுது வருவார் என்று தெரிந்துவா, எனப் பலவாறு பிதற்றிப் பின்னர் வீடு சென்று, வேதநாயகம் பிள்ளை எழுதிய மாதரொழுக்கம், பதிபக்தி, மாதர் நீதிமஞ்சரி, குடும்ப ஒழுக்கம், கற்புநிலைமை, உத்தம பதிவிரதா சிரோமணிகளின் சரித்திரம், ஆண்டாள் பக்தி, சக்குபாய் சரித்திரம், முதலிய புராதன உத்தம பக்தி மாதர்களின் சரித்திரத்தைத் தனக்குத் தூக்கம்வரும்வரையில் படித்து நித்திரைக்குப் போய்விட்டாள்.

எஞ்சிஜினீயர் வருகையை எதிர்பார்த்து சிதம்பரம் ஸ்டேஷனில் கார் காத்துக் கொண்டிருந்தது. ரயிலை விட்டு இறங்கினார். என்ஜினீயர் நண்பர்களும் கலியாணத்திற்கு வந்திருந்தவர்களும், எதிர்பார்த்திருந்தபடி எஞ்ஜினீயர் தோன்றவில்லை. தலைக்கு ஹாட்டு, கழுத்துக்கு நெக்டை, காலர், ட்ரௌஸர், கோட், ஸ்டாக்கிங்ஸ், பூட்ஸ் முதலியவை யில்லாமல், ஆடம்பரமற்ற பரிசுத்த உடையணிந்த பெரியார் என்ஜினீயர் வந்து காரிலமர பூம் பூம் என்று ஊதி மோட்டார் வேகமாய்ச் சென்று கண்ணன் குடிநகர் ஆனந்த விலாசம் சென்று நின்றது. இவர் விஷயமாய் நேற்று மாலை லோகநாயகி கட்டளைப்படி தோழி ஞானாம்பாள் இங்கு விஜயம் செய்து, சமாச்சாரம் தெரிந்து, சந்தோஷச்

செய்தியை ஓடோடியும் வந்து மிக்க ஆவலோடெதிர்பார்த்திருந்த லோகநாயகியிடம் உனது காதலர் ஆத்மநாதன் வந்துவிட்டார் என்றாள். ஆஹா! என்ன நிஜந்தானா!! நீ நேரில் பார்த்தாயா பார்த்தது உண்மையானால் எப்படியிருக்கிறார் சொல் பார்ப்போம் என்றாள். மலர்ந்த புன்னகையுள்ள முகத்துடன் உன்னை மணந்தபோது இருந்ததைவிட சற்று தேகம் பருத்திருக்கிறார் என்றாள்.

எஞ்சிஜினீயர் ஆத்மநாதன் தனது ஆப்த நண்பர் சிவானந்தன் விவாஹம் நாளைய தினமான படியினால் இன்று சாதாரணமாக வாக்கிங் போவது போல அம்மாப்பேட்டை சென்று தனது காதலியைப் பார்க்காமல் பார்த்து வருவோமெனத் தீர்மானித்து, அம்மாப்போட்டைக்குத் தெற்கு நோக்கி ரோட்டின் பாதி வழி சென்று கொண்டிருக்கிறார். லோக நாயகியின் மனம் வேலைசெய்கிறது. "திடீரென்று என்ன காரணமாக எனது காதலர் வந்திருக்கலாம்! எப்பொழுது அவரைப் பார்க்கும் பாக்கியம் கிடைக்கும்? ஒரு வேளை வந்தவேலை முடிந்த மறுநாள் ட்ரெயினில் போய்விடுவாரோ என்னமோ? இதற்கென்செய்வது? என்னாசைக் காதலரை எப்பொழுது பார்ப்பேன்? ட்ரெயினில் வந்ததில் ஏதேனும் அலுத்துக் களைத்து உறங்குவாரோ? என்னுயிர்க் காதலரே! நீவிர் நேரில் நிற்பது போல் தோன்றுகின்றதே திடீரென்று மார்போடிறுகத்தழுவி முத்தங் கொடுத்து ஓடுகின்றாரே! அதோ.... போகின்றார் அதோ... போகின்றார் கூப்பிடு.... கூப்பிடு.... சே, சே... இல்லை.... என் எண்ணத்தின் வடிவம்...." தோழியின் மனம் சொல்லுகிறது. "லோகநாயகி தனது புருஷனிடத்துள்ள வாத்சல்ய மிகுதியினால் காமலாகிரி மீறி மனம் பைத்தியம் பிடித்துவிட்டது நேரில் உருவம் தோன்றுகின்றது என்கிறாளே இதற்கு என்ன செய்வது?"

லோகநாயகி சித்தம் தெளிந்து, புத்தி சற்று நிதானித்து இனி ஒரு நிமிஷமும் இங்கிருக்கலாகாது. எனது தந்தையும் தாயும் உன் நாயகனைப் போய்ப் பார்த்துவா வென்று சமீபத்தில் சொல்வதாகத் தெரியவில்லை. எனது உயிர் தோழியாலும் இவ்விஷயத்தில் ஒன்றும் பயன்படாதென்றே நினைக்கிறேன் என்று தீர்மானித்துத் தனது வீட்டையும் அன்னையையும் அப்பனையும் அப்பொழுதே மறந்தாள். அம்மாப் பேட்டையை விட்டுப் புறப்பட்டு சாலை வழியாக வடக்கு நோக்கி வந்து கொண்டிருக்கிறாள். தானெ திர்பார்த்த உள்ளத்தைக் கொள்ளை கொண்ட உயிர்க்காதலர் எதிரில் வந்ததைப் பிரத்தியட்சத்ததில் பார்த்தாள். அன்னவரும் எதிர்பார்த்த காதலியை

---

மழுப்பும் வழவழப்பான பதில் சொல்லாதே

தரிசித்தார். அன்பு மேலீட்டினாலே இவளும் அவ்விசாலமான வெட்டவெளியில் எங்கிருக்கிறோம், என் செய்கிறோம், என்பதையும் தனது ஒழுக்கம் தேகநிலை, சாலையில் நடந்துவந்தது, முற்றும் மறந்து, தனது நாயகனை இன்புறத் தழுவி, தன்னையே மறந்து, நாயக நாயகி இருவரும் ஒன்றுபட்ட மனதாய் லயித்து ஆனந்தா தீதரானார்கள்.

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சியானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தா ராசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே."
(சுவாமி திருநாவுக்கரசர்)

ஆத்மநாதனை லோகநாயகி எப்படிக் காதலித்து எதிர் பார்த்துத் தன் தோழியினால் முதலில் பெயரை அறிந்து மனமகிழ்ந்து யோக க்ஷேமங்களையும் இருக்கும் தன்மையையும் விசாரித்தாளோ அது போல - திருநாவுக்கரசு சுவாமிகளும் பரசிவத்தினை நாயகனாக பாவித்து, ஒருமைப்பட்ட மனத்துடன் ககிந்துருகி முதலிலே திருநாமத்தைக் கேட்டும், அவன்மேற் கொண்டிருக்கும் அன்பினால் மூர்த்தி தன்மையை தியானித்து விசாரித்தும், - லோகநாயகி தன் நாயகன் எங்கு எவ்வூரிலிருக்கிறாரென்று விசாரித்தும், அவரையடைய மிகுந்த பைத்தியம் பிடித்ததைப் போல - திருநாவுக்கரசு சுவாமிகளும் திரு ஆரூரை விசாரித்தும், அத்திரு ஆரூர்க் கடவுளையே அடைய ஞானப் பைத்தியம் பிடித்தும் - லோக நாயகி இருந்த ஊரையும் பெற்ற தாயையும் தகப்பனையும் தோழியையும் மறந்து ஒழித்துப் புறப்பட்டுப் போனதைப் போல திருநாவுக்கரசு சுவாமிகள் தனது ஊரையும் உலக நடைக்குள்ள உறவினரையும், தன் மாதா பிதாவையும் அன்றைக்கே முற்றுந் துறந்து ஒழித்து அவ்விடத்தைவிட்டு நீங்கினார். லோகநாயகி விசாலமான சாலை வழியே நாயகனைக் காணத் தேடிச் செல்ல நாயகனு மெதிர்ப்பட, உலக ஒழுக்கம் நிலைமை முழுதும் அந்த விடத்தில் மறந்து, இன்புறத் தழுவி ஆனந்த மேலீட்டால் பிரக்ஞையே யில்லாமல் ஆத்மநாதனுடன் மனம் இரண்டற்று ஒன்றானதைப் போல - திருநாவுக்கரசு சுவாமிகளும், தனது அந்தர்முக சூட்சும அகண்ட

அனுபவத்தில் நின்று உலகத்திலே உள்ளவர்களது ஒழுக்கத்தை முழுவதும் மறந்து, மேலும் ஆத்மாவாகிய ஸ்தூல சூட்சும தத்துவக் குப்பை நிரம்பிய தன்னையும் தன் பெற்றோர்களாலிடப்பட்ட தன்னாமத்தையு மறந்து ஆன்மாவாகிய தலை மகனுடைய அந்தரங்க வுலக நிற்குண அகண்ட துவாத சாந்தப் பெருவெளியில், காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்னும்திரிபுடி நீக்கி அத்வைத ஞான நிலையில் திருவருளோடு இரண்டறக் கலந்தாரென்பதைப் பக்திமான்கள் தனது யதார்த்த நிலையாகிய சொரூபத்தை எளிதிலுணர்ந்து அனுபவிக்குமாறு, பக்தி, யோக, ஞான, சோபான முறையில் நமது திருநாவுக்கரசு சுவாமிகள் தேரவாப் பதிகத்தில், "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்," என்னும் பாட்டில் மிக்க அழகாய் அமைத்தார் போலும்.

C C C

## 59. சஞ்சலந்தீர்க்கும் அஞ்சனமை

அநேக நாளாய் அநேகரிடம் தொண்டு செய்து கண்டு பிடித்த மை ஒன்றைப் பற்றி சொல்லப்போகிறேன். பெருமை பொருந்திய இந்தமையை நீங்கள் யாவரும் சந்தேகமன்னியில் அணிந்து கொள்வீர்களென்றும் முழு நம்பிக்கை எனக்குண்டு. அகாரணமான மையை இங்கு கொடுக்க மாட்டேனென்னும் முழு நம்பிக்கை உங்களுக்குமுண்டு. இம் மையை அணிந்து கொள்வதற்கு எளியவர் பணக்கார ரென்னும் வரன்முறை கிடையாது. என்றாலும் இம்மையை நல்ல அறிவாளிகளாகிய ஞானவான்கள் முறையே கையாண்டு வந்தார்கள். இம் மை உத்தமர்கட்கு ஓர் அணிகலம் போல் துலங்கும் ரத்னம். ஆனாலும் இம்மையை மேலும் மேலும் விடா முயற்சியுடன் கையாண்டுவரின் பூரண சந்திரனைப் போல் பிரகாசிக்கும் தன்மை உங்களுக்குண்டு. இம் மையை வைத்துக் காப்பாற்றும் திறமையும் உங்களுக்குண்டு. என்னப்பனுடைய அருளைப் பெறவோ அல்லது வேறெந்த காரிய வெற்றியிலோ யாவருக்கும் இம் மை அத்தியாவசியம். இம் மையினுடைய பிரயோஜனத்தை இங்கு சொல்வது அசாத்யம். ஏனென்றால் நீங்கள் சிலகால மணிந்து அனுபவித்தால் பின்பு எப்பொழுதும் கைவிடமாட்டீர்களென்பது நிச்சியம். ஏன்? எப்படி நெய்யினுடைய சுவையை, புளிப்பு, தித்திப்பு, கசப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பவைகளால் சொல்ல முடியாமல் நெய்யினுடைய சுவை நெய்யைப் போலிருந்தது என்று சொல்வதைப் போல இம் மையினுடைய மகாத்மியத்தை என்னால் சொல்லத் தரமன்று. இம் மை அனுபவிக்கின்றவர்கட்கு படபடப்பு துடிதுடிப்பு முதலியவை உண்டாக்காது இம்மை அடைந்த காலத்தில் சாந்த மூர்த்தியாயிருந்து உபாஸிக்கும் திறமையை யுண்டுபண்ணும். இம் மையானது எதிரியை வணங்கி வரும்படி செய்யும். இம் மையணிந்தால் விரோதமென்பதே கிடையாது. இம் மையை யணிந்து கொண்டு வெளிக் கிளம்பினால் பெரிய மஹான் முதற் சிறு குழந்தைகள் வரையில் யாவரும் வசியமே. இவ்வுலகத்தை வெல்வித்து இம் மையானது மோட்ச சாதகத்திற்கு முதல் படித்திறத்தை சீக்கிரத்தில் கூட்டுவிக்கும். இம் மை சேர்ப்பதற்கு மூலிகைகள் அத்யாவசியமல்ல. இம் மையில் கரு சம்பந்தங் கிடையாது. இம் மையினுடைய குணாதிசயங்களை முற்றும் உற்று நோக்கினால் அருள் நோக்கமே பெரும் நோக்கமாக விளங்கும். இம் மைக்கு (பர்ஸனல் மாக்னட்டிஸம்) என்னும் மனிதனுக்கு மனிதனை வசப்படுத்தும்படியான பவர் உண்டு. இம்மையை நம்மவர்களில்

---

பெரும்பாலும் புண்ணியர்களே கைப்பற்ற எண்ணங் கொள்ளுவார்கள். இம் மையை அணிந்து கொண்டால் சுவற்றில் வரைந்த சித்திரப் பாவை போலும் சிலசமய மிருக்கக்கூடும். இம் மையை சிலகால மணிந்துவரின் பகவத் அருள் நோக்கமும் பைய நுழையும், இம் மையை விடா முயற்சியுடனும் வைராக்கியத்துடனும் உபயோகித்தால் அதி தீவிர பக்குவனெனப் பெயர் பெறலாம். எப்படி தெய்வத்தை தொழுவதற்கு முன் விக்னேசுவரரை வணங்கி தியானித்துக் கொள்ளுகிறோமோ, அது போலவே நாம் செய்யப்புகும் ஒவ்வொரு காரியத்திற்கும் இம்மையை உபயோகப்படுத்தினால் மிக்க நன்மையைக் கூட்டுவிக்கும். அப்பொது நமக்கு அதிக வெற்றியுண்டு. அதை அனுபவத்திற் கண்டு கொள்ளலாம். இம்மையை யணிந்து கையாள்வதற்கு பிரத்தியேகமான காலங்கிடையாது. வீண் சிரமமில்லை. பசி பட்டினி விரதம் முதலிய நிபந்தனைகள் கிடையாது. இம்மையைக் கையாடின் கௌவரமே மேலிடும், இம்மையினுடைய பெயர் மூன்றெழுத்தாகும். புதுப் பழக்கக்காரர் இம்மையைச் சிலகாலம் முயற்சியுட னனுபவித்து விட்டால் பின்பு நம் முயற்சி இல்லாமலே தூண்டாமணி விளக்காய் துலங்கும். இம்மையை அணிந்து கொண்டால் சந்தோஷமான முகக் குறியுடன் இன்சொல் வசனித்துத் தயவையெதிர்பார்த்த வண்ணமா யிருக்கும்படி செய்யும். பெரியோர்களைப் பெருமைப்பட வணங்கும்படிச் செய்யும். அடியார்களை உபசரிக்கும் படியான தன்மையையும் கூட்டுவிக்கும். இம்மைக்கு ஜீவகாருண்யமே பத்தியவிரதமாகும். இம் மையை யணிந்து கொண்டால் பொய், சூது, வாது, புலை, கொலை, களவு, கோபம் இவைகளை நீக்கும். நீக்காவிடில் மையினுடைய வெற்றிக்கு பெருந்தடையாகும். இம்மையானது பெரும்பாலும் அருள் நோக்கமுடையவர்கள் பேரிலும் ஜீவகாருண்யம், ஈவு, இரக்கம், தயை, பச்சாதாபம் என்னும் நல்ல எண்ணமுடையவர்கள் பேரிலும் ஆரோகணித்துத் துலங்கும் திலதம். இம் மைக்கு விலையே கிடையாது. மதிப்பிட முடியாது. இம் மை இல்லாமல் கெட்டவர்கள் அநேகர். இம்மை ஒன்று விசுவாமித்திர மகரிஷியினிடமும் இலங்கை யதிபன் இராவணனிடமும் கிட்டாமல் அவர்கள் பட்ட பாட்டிற்கு அளவே கிடையாது. இம்மையை நாம் அடைவோ மாயின் முன் ஜன்மாந்திரத்தின் புண்ணிய வசமென்றே நினைக்க வேண்டும். மேலும் சேவற் கொடியோன் வெற்றிவேலெனத் துலங்கும்படி வஜ்ராயுதமாய்

நம்மிடத்தில் விளங்கும். இம் மைக்கு என்றும் ப்ரகாசிக்கும் தன்மையுண்டு. நீங்கள் நினைத்தைப் போல் உங்களை ஆக்குவிக்கும். இம் மை மனம் போல் வாழ்வைச் கொடுக்கும். இம் மை சுயஞான ஊற்றின் துவாரத்தை திறக்க முயற்சிக்கும். சிறு வித்திலிருந்து பெரிய மரமுண்டாவது போல் இம்மையிலிருந்து மகிமையுண்டாகிறது. நினைப்புகளைக் கெட்டவழியிற் செலுத்தினால் இம் மைமறைந்து விடும். ப்ரகாசம் குன்றிவிடும். ஆழமாகிய சுரங்கந் தோண்டி கவனத்துடன் தேடுதலால் தங்கமும் வைரமும் கிடைக்கின்றன. அதைப் போல் ஆன்மாவாகிய சுரங்கத்தைத் தோண்டி பரம ஆன்ம தெரிசனம் பெற இம் மைதான் தேவை. மனமாகிய தோட்டத்தில் குணமாகிய மையை வைத்தால் இனமாகிய களைகள் முளைப்பது செவ்வனே தெரியும். இம் மையில்லாமல் களை மண்டிவிட்ட தோட்ட மனேகமுண்டு. எப்படி விட்டிற் பூச்சிகள் தீபத்தில் மடிகின்றனவோ அது போலிம்மை யொளியால் களை முளைகள் கருகிவிடும். இம் மையை விடா முயற்சியுடனணிந்து அனுஷ்டிக்குங் காலத்தில் கணத்திலழிந்துபோகும். மனவிருப்பம், மனோராஜ்யம், மனோபாவனை முதலிய மனச் சலனம்கூடாது. இம்மை அடையும் காலத்தில் சந்தேகம், பயம், ஆலஸ்யம் இவை கொண்டால் மையினுடைய வெற்றியைக் குறைக்கும், நூலாசிரியர், சிலையாக்குபவர், சித்திரமெழுதுவோர், கவிவாணர், தீர்க்கதரிசி, ஞானி இவர்களிடத்தில் திருநடனஞ் செய்து குருவடிவாய்க் குடி கொண்டிருப்பது இம்மையே ஒருவன் இம்மையை யணிந்து கொண்டு ஞானியாக வேண்டுமென்று நினைத்தாலும் ஆகலாம். தியானியாக வேண்டுமென்றாலும் ஆகலாம். மேனி பெற வேண்டுமென்றாலும் பெறலாம். தேனீயைப் போல் சுறு சுறுப்புள்ளவனாக வேண்டுமென்றாலும் ஆகலாம். எப்படி நினைக்கிறோமோ, அப்படியெல்லாமாகலாம். ஆனால் அழுத்தமாய் மையைக் கையாள வேண்டும். முட்டைக்குள் ஆகாயத்தில் பறக்கும் பட்சி காத்திருப்பது போல இம் மைக்குள் நாமடைய வேண்டிய அனந்தம் சக்திகள் அபாரமாய்ப் பொங்கித் ததும்பக் கிடக்கின்றன. இது கற்பனையல்ல, புனைந் துரைப்பதல்ல, பொய் புகலுவதல்ல, உத்தேசமாய்ச் சொன்னதல்ல, இம்மையிலுள்ள முடிவாகிய மகிமையைப் பெற்றால் உலகத்தைச் சீர்படுத்தும் வாளையும் சீவுளியையும் பெற்றவராவோம். (நாமெல்லாம் பெற பாத்திய முடையவர்களே) இம் மையுள்ளவன் மற்றவர்களோடு தான் நடந்து

கொள்ளும் விதமறிவான். இம் மையை அதி தீட்சண்யமாகக் கொண்டவனிடம் ஆன்ம பலத்தைப் பெற அன்பர்கள் கோடானுகோடி சுற்றுவார்கள். இவன் பெரும்பாலும் உலகத்தில் சுற்றமாட்டான். உலகம் இவனைச் சுற்றும், ஒருவன் எவ்வளவிற்கு விடாமுயற்சியுடன் இம்மையை அனுஷ்டிக்கிறானோ அவ்வளவிற்கு அவனது காரிய சித்தியும் செல்வாக்கும் நன்மையும் சக்தியுமதிகரிக்கும். இம்மை ஞானிகட்கு மாத்திரமல்ல ஏனையோர் வியாபாரத்திலோ வேறெந்த காரிய வெற்றியிலோ மையின் அநுசந்தானமுள்ளவர் மகிமையாய் விளங்கி நிற்பர். இம்மையுடைய ஒருவன் உலகிற்கு ஒரு பாலை வனத்தில் நிழலைக் கொடுக்கும் மரத்திற்குச் சமானமாகவும், சூறைக் காற்றில் தங்குதற்கு இடங்கொடுக்கும் மலைக்குச் சமானமாகவு மிருக்கிறான். இம்மையே குடிகொண்டவர்கட்கு மழை பெய்தாலும் வெய்யலடித்தாலும் அல்லது வேறெவ்வித மாறுதல்கள் நேர்ந்தாலும் ஒன்றுமில்லை. மையின் இனிமையால் திருவருட் பிரகாச வள்ளலார், சமயாசாரிகள், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர், அருணை மாநகரிலெழுந்தருளியுள்ள ஸ்ரீ ரமண மஹரிஷிகள், மற்றுமுள்ள தவஞானிகளெல்லாம் ஆண்டனுபவித்தும் அனுபவிக்கிறதும் இம்மையே, எட்டுமிரண்டும் காணச் செய்யும் இம்மை, எட்டாத நிலையிலும் சேர்ப்பிக்கும். இம்மை அகிலத்திலுள்ள அனைவரும் குறிக்கும் மையத்திற் சேர்க்கும். இம்மையே மூலகாரணம். இம்மையானது மனிதனிடத்திலுள்ள பாயும் சக்தி, தாங்கும் சக்தி, அமைதி நிலை, ஏகாக்ரசித்தம் இவை கட்கு அஸ்திவாரத்தி னடிப்படையாகும். சாதன சதுஷ்டயத்தைக் கைக்கொள்ளும் காலத்தில் நிலைபெறச் செய்வது இம்மை. ஆவரண சக்தியை யொழித்து விட்சேபம் பரோட்சம் நீங்கி அபரோட்ச ஞான அனுபவத்தை உண்டு பண்ணுவதும் இம் மையே. பஞ்ச கோசங்களை இம் மையில்லாமல் ஜெயித்த மஹான்கள் ஒருவருமே கிடையாது. தற்பதம், த்வம்பதம், அஸீபதம், முறையே பதம் பெற இம் மைதான் துணைக்கருவி. சகல நிலை கேவல நிலையிலுங்கூட இம்மை ஆனந்தத் தாண்டவமாடும். இம்மை ஒன்று துணையாக விருந்தால் தான் இருக், யஜுர், சாமம், அதர்வணமென்னும் வேதத்தில் கூறப்பட்ட பிரக்ஞானம் பிரமம், அஹம் பிரம்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரம்மம், முதலிய வாக்கியங்களை இடைவிடாது பாவனை செய்யும்படிச் செய்யும். இம்மையினாலேயே மனமென்னும் மாயாஜால மாதினை மஹான்கள் வசமாக்கியது. அஹங்காராதி ஆணவாதிகளை

அல்லற்படும்படி விட்டது. மாயையாதி மன்னர்களை மடியச் செய்தது. காம, க்ரோத, மத, மத்ஸராதி மக்களை மண்ணில் கண்காணா தடித்தது. மாயவாத இராணி மனோவதியின் அந்தப்புர ரகஸ்யத்தில் புஷ்பித்து ஆனந்தாதீத சுகந்தமாகப் பரிமளிப்பது இம் மை. ஹா! ஹா! என்ன இதன் பெருமை உங்கள் வறுமையைத் தீர்த்து பெருமையி லிருந்து உண்மையை யறிய பன்மையிலிருந்து ஒருமையாகி வன்மைபெற நீங்கள் உரிமை யுள்ளவர்களாகிவிட்டபடியினால் உங்களிடத்தில் குடிகொண்ட திம்மையே அருமையுள்ள இம்மையை அனுஷ்டிப்பது சிறு மையாயிருக்கு மென்று நினைத்து விட்டுவிடாதீர்கள். (தொடங்குங்கால் துன்பமாய்ப் பின்பு இன்பம் பயக்கும்) நீங்கள் நிலமையிலிருக்க இருக்க அது தங்கள் நிலமையில் யாதொரு பிரயத் தன மில்லாமலே தானே வழிகாட்டி அழைத்துக் கொண்டு போய்த் தன்னிலைமையிலிருந்து விடும். இம்மை அலங்காரத் துடனும், ஐந்தெழுத்தாலுள்ள மந்திரப் படைகளுடனும் ஆரோகணித்து அதி உல்லாசமாய் வேலை செய்யுமிடம் புருவ மத்தியஸ்தானமே. அவ்விடம் தவறினால் வெறும் தூக்கமாகவே தான் முடியும். இம்மையை யணிந்து கொண்டவர்களை ஒரு சமயம் தெய்வச் செயலினாலே சோதிப்பதற்கு ஒருவன் நையப் புடைத்து அநேக இடையூறுகளைச் செய்யினும் முன் செய்த தீவினையையே நாடி அமைதி நிலையிலிருக்கும்படி செய்யும். இவைகளை சகித்து முடிவுவரை வெற்றிபெற்றால் பின்னால் அம்மைக்கு பெரும் வெற்றியும் மகிமையுண்டு. இவ்வளவு திறமையை யடைந்துவிட்டால் கொண்ட வெண்ணத்தை முடிக்கும் அரிய தவ ஞானியென்றே சொல்ல வேண்டும். இம் மகிமையுள்ள மையை அடைந்துள்ளவனை இவன் யோகசாலி, அதிருஷ்டசாலி, நல்லயோகம், நல்ல அதிருஷ்டம் இவனுக்கு நல்ல காலம், ஒவ்வொரு வழியிலும் எப்படியும் உதவி புரிகிறதென்று ஜனங்கள் ஆச்சர்யமடைந்து கூறுவர். இவன் இம் மையையடைய மனதாரப் பட்டிருக்கிற கஷ்டங்களையும், தவறுதல்களையும், போராட்டங்களையும், திண்டாட்டங்களையும், செய்திருக்கிற பரித்தியாகங்களையும், இவனது துணிகரமான முயற்சிகளையும், நம்பிக்கைகளையும், மனவருத்தங்களையும், நீண்ட பிரயாசையான யாத்திரைகளையும் பார்க்காமல் அவசரப்பட்டு அதி ஆச்சர்யத்துடன் அறிவு நிறைவின்மையால் சுகத்தையும் சந்தோஷத்தையும் தூய குணத்தையும் விரிந்த செல்வாக்கையும் சென்று சேர்ந்திருக்கும் இடத்தையுமட்டும் பார்த்து வியந்து

கொண்டாடுவர். இப்படிப்பட்ட மையானது ஞானத்தின் அழகிய மணிகளிலொன்று இம்மையையுடைய ஒருவன் தன்னை அடக்கியாளும் சக்தியை யறிவான். ஒன்று கடைசி வார்த்தை. இம்மை தான் வாழ்க்கையின் மலர்; ஆன்மாவின் கனி; இது ஞானத்தை யொத்து விலையுயர்ந்தது. பத்தரை மாற்றுத் தங்கத்தைப் பார்க்கிலுங்கூட அதிகமாக விரும்பத்தக்கது. நாம் மை நிலைமை யிலிருந்தால் அது மெய் நிலைமையுடன் அகமை நிலைமைக்குக் கொண்டுபோய் பெருந்தகை மையாக்கி தெய்வீக மகிமை நிலையில் நிற்கும். இச சத்யம்! ஏன்? ஒடிந்த காலுக்கு சிம்புவைத்துக் கட்டுவதுபோ· இம்மைக்கு இவ்வளவு விபரம் சொல்ல வேண்டுவதென்றால் புது அப்பியாசி கட்கு மையினுடைய மகாத்மியம் தெரியவராது இவ்வளவு விபரங்கள் சொன்னால்தான் ஒருவாறு சந்தேகமன்னியில் கைப்பற்றுவார்கள். இங்கு தெரிந்த அறிவாளிகளாகிய அருள் நோக்கமுடையவர்கள் அதிலகுவில் முதலிலேயே பொறுமை யென்பதாகவே தெரிந்திருப்பார்கள். என தன்பார்த்த அரிய நண்பர்களாகிய நம்மவர்கள் கைப்பற்ற வேண்டியதும் அருமையும் பெருமையுமாகியதும் இந்தப் **பொறுமையேயாகும்** அவா மேலீட்டினாலே அன்பர்கட் கிசைந்து உணர்ந்துய்யுமாறு சிற்றறிவுடைய கடையேன் இரக்கத்தினால் இப்படிச் செய்ய வேண்டியது என் கடமைகளிலொன்றானபடியினால் அடிமைக்குக் கிருபை பாலித்த திருவண்ணாமலை மகான் ஸ்ரீ ரமண சற்குருவின் பாதபத்மங்களில் இதைச் சமர்ப்பித்துள்ளேன். தன்னை யடக்குதல் பலம், சரியான நினைப்பு, ஆண்மை, அமைதி, உங்கள் ஹிருதயத்தைப் பார்த்து "**சாந்தி சாந்தமாயிரு**" என்று சொல்லுங்கள். எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவான்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
(திருமந்திரம்)

C C C

## 60. ஞான வாழ்க்கை

தென்னாட்டின் சிறப்புமிக்க திருத்தலங்களில் ஒன்றான சிதம்பரம் நகருக்கு வடமேற்கில் இருபது கிலோ மீட்டர் தூரத்திலும் திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் ஞான அரசு செலுத்திய வடலூர் புனித பூமியிலிருந்து, தெற்கே சுமார் பத்து கிலோ மீட்டர் தூரத்திலும், சென்னை செல்லும் சாலையருகில் அமைந்துள்ள பின்னலூர் கிராமத்தில், கார்காத்த சைவ வேளாளர் பரம்பரையில், சிதம்பரம் பிள்ளைக்கும் அருந்தவம் அம்மாளுக்கும், கர ஆண்டு வைகாசி மாதம் 22ம்தேதி (3-6-1981) இல் தவப்புதல்வனாகப் பிறந்தேன்.

### பெயர் வைத்ததும் எழுத்தறிவித்ததும்

வள்ளலாரிடம் அளவு கடந்த பக்தியிருந்தமையினால் தான் என் பெற்றோர்கள் எனக்கு அன்னாரது பெயர் என்றும் தமது வாக்கிலும் நினைவிலும் இருக்கும் வண்ணம் "இராமலிங்கம்" என்ற பெயரையே சூட்டினார்கள்.

எங்கள் வீட்டில் ஆறுமுகசாமி என்ற சாமியார் ஒருவர் தங்கி சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் மிக்க ஆச்சாரசீலர், வீபூதிப் பட்டையும், நெற்றியில் பெரிய சந்தனப் பொட்டிடையே குங்குமப் பொட்டும் தான், அவரது தனிச் சிறப்பான தோற்றம். அவரது கையில் எப்போதும் ஒரு முழ நீளமுள்ள இரும்பாலான வேலாயுதம் இருக்கும் அவ்வேலாயுதத்தின் மறு முனை கூர்மையான எழுத்தாணியாகும். கண்ணால் பாராமலேயே ஓலையைத் தன் முதுகுப் பக்கம் (பிடறிமேல்) வைத்து ஓலை முழுதும் வரிதவறாமல் அழகாக எழுதி விடுவார். அவர் தான் அடியேனுக்கு முதலில் தன்கையினால் பனையோலையில் ஓர் நன்னாளில் ஹரி ஓம் என்று எழுதிக் கொடுத்தும், என்கையைப் பிடித்து தரையில் ஹரி என்றும் எழுதச் செய்தும் எழுத்தறி வித்த இறைவனாகும்.

### ஞான வித்து

எங்கள் வீட்டுக்கு முன்னால் சிறு குடிசையில் பட்சி சாமியார் என்னும் நிர்வாண சாமியார் ஒருவர் வசித்து வந்தார். அக்காலத்தில்

அப்பெரியாரிடம் இடைவிடாது அவர் சந்நிதியில் என் தாய் தந்தை நான் மூவரும் தரிசித்து, ஓய்வு நேரங்களில் அமந்து ஞானமார்க்க போதனைகளைக் கேட்டு ரசித்து இன்புறும் பாக்கியத்தைப் பெற்றோம் (இவர் பிற்காலம் வத்தராயன் தெத்து, என்ற ஊரில் சமாதியானார்)

அக்காலத்தில் எனது பெற்றோர்கள் இராமலிங்க சுவாமிகளை நேரில் தரிசித்தும், அவர்களது அருளைப் பெற்றும், பக்தி மார்க்கத்தில் ஈடுபாடாயிருந்தனர்.

வடலூர் திருவருட் பிரகாச வள்ளலாரின் பிரதம சீடர்களில் ஒருவரான திருமருதநாயகம் பிள்ளை என்பவர், என் தந்தையாருக்கு நெருங்கிய நண்பர் என்பதுடன் எங்கள் பக்கத்து வீட்டில் குடியிருந்தவரும் ஆவார். அன்னாரது மனைவியாரிடம் தான் என் தாயார் அருந்தவம் அம்மாள் முறையே கல்வி பயின்று, திருவருட்பாவின் உட் கருத்துக்களையும் படித்துணர்ந்தார்கள் தந்தையார் சிதம்பரம் பிள்ளையும் திருமருதநாயகம் பிள்ளையவர் களிடம் அருட்பாவிலுள்ள நுட்பக் கருத்துக்களை உணர்ந்து வேதாந்த தத்துவ விசாரணைகளையும் செய்து வல்லவரானார்கள்.

என் தந்தையார் நியமனப்படி வீட்டில் பூஜை அலமாரியில் நடராஜர் படம், வினாயகரின் செம்பு விக்கிரகம் முதலியன அமைத்து தினம் தவறாமல் எங்கள் சொந்த மடத்திலுள்ள நந்த வனத்தில் பத்திர புஷ்பமெடுத்து வந்து அபிஷேக ஆராதனை செய்வதுடன் ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்த வினாயகர் அகவல் முழுதும் பாராமல் சொல்லச் சொல்லி தூப தீப நைவேத்தியம் செய்து வந்தேன்.

அப்போது எங்கள் குடும்பம் மிக எளிய நிலை சொற்ப நில வருவாயில், ஒரு ஆண்டு காலத்தில் ஒன்பது மாதங்கள் போக, மூன்று மாதங்களுக்கு சாப்பாட்டிற்கு சிரமம் ஏற்படும். அப்போது நெல், கேழ்வரகு முதலியன கடனாகப் பெற்று காலட்சேபம் நடக்கும்.

நான் பிறந்த எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு, எனக்குப் பின் சகோதரிகளாகப் பிறந்தவர்கள். குழந்தைப் பருவத்திலேயே

காலமாகிவிட்டனர். அடுத்து ஒன்பதாவது ஆண்டில், சார்வாரி ஆண்டு, சித்திரை மாதம் 12-ஆம் தேதி எட்டாவது பிள்ளையாகப் பிறந்தவன் தம்பி சிவகுருநாதன், சிதம்பரம் மேலவீதி செட்டியார் பாட சாலையில் தேவாரம் பயில இளம் வயதிலேயே சேர்க்கப்பட்டான்.

**கல்வியும் ஞானமும்**

எனக்குப் பதினைந்தாவது வயதில் அக்காலத்திய கல்வித் திட்டப்படி நான்காவது வகுப்பு (பிரைமரி) பாஸ் செய்தேன்.

அப்போது மனோ தத்துவ சாஸ்திரங்கள் பலவற்றைப் படித்து மனத்தை அடக்க கண்மூடித் தியானம் செய்தும் பழகி வந்தேன் பின்னலூர் அருகே தென்மேற்கில் மூன்றாவது மைலில் எரும்பூர் தத்துவராய சுவாமி கோயிலின் குளத்துத் தென்கரை மாமரத்தடியிலுள்ள (ஒருவரும் என்னைக் காண முடியாத) நாணல் புதரின் மத்தியில் அமர்ந்து வாக்கு மௌனம் காய மௌனம், மனோ மௌனமென்னும் முறையில் சதா தியானத்திலிருந்து கொண்டு மௌன விரதத்தைக் கையாண்டேன். அப்போ தெல்லாம் ஒருவேளை தான் ஆகாரம். அதுவும் அக்கோயில் குருக்கள் எனது நிலையுணர்ந்து பூஜையான நைவேந்தியப் பிரசாதம் ஒன்று உதவி செய்து வந்தார். அப்படி ஆறுமாத காலங்கள் கழிந்தன.

**தந்தை எனக்கு வைத்துப் போன ஞானச் செல்வம்**

அப்போது எனது வயது இருபத்தி ஏழு முடிந்த சமயம். இது சமயம் தான் எனது தந்தையார் சிதம்பரம் பிள்ளை பிங்கள ஆண்டு புரட்டாசி மாதம் 5-ஆம் தேதி, இவ்வுலகை நீத்தார்கள். (17-9-1917).

தந்தையார் இறந்தபின் எனக்காக அவர் ஏதேனும் பெட்டியில் வைத்திருப்பாரென நினைத்துத் திறந்து பார்த்தேன் அதில் இரண்டு பொருள்களைத் தவிர வேறு எதையும் காணப்படவில்லை. அவ்விரண்டு பொருட் களாவன உரையுடன் கூடிய "கைவல்ய நவநீதம்" புத்தகம் ஒன்றும், உயரிய வேலைப்பாட்டுடன் மேலிரண்டு பக்கங்களிலும் யாளி முகம் அமைத்த யோகத் தண்டு, ஒன்றும் ஆக இவை இரண்டும் தான் எனக்குக் கிடைக்க வேண்டியன போலும், என்று எண்ணி மிக்க சந்தோஷத்துடன்

எடுத்துக் கொண்டேன். பிற்காலம் இவை இரண்டையும், பின்னலூரில் குப்புசாமி என்பவர் (ஆதித்திராவிட சாமியார்) தனது பூஜையில் வைத்திருக்க விரும்பிக் கேட்க, அதன்படி கொடுத்துவிட்டேன்.

**மடம் நிறுவியதும், சமாதி முறையும்**

பின்னலூரில் ராஜன் வாய்க்கால் மேல்கரையில் எங்கள் மூதாதையர்களுக்குச் சொந்தமான புஞ்செய் நிலத்தில் எங்கள் பாட்டனார் திரு வைத்தியநாதப் பிள்ளையவர்கள் என் (தந்தை - சிதம்பரம் பிள்ளைக்குத் தந்தை) பத்தொன்பதாம் நூற்றாண்டில் மடம் ஒன்றை நிறுவினார்கள்.

அக்காலத்தில் இராமலிங்க சுவாமிகள், வடலூரிலிருந்து சிதம்பரம் நடந்து செல்லும்போது, மடம் நிறுவப்பட்ட இடத்தில் வந்து சில நாழிகை இளைப் பாறிச் செல்வார்களாம். அதைக் கருத்தில் கொண்டு அவ்விடத்தில் வழிப் போக்கு சாதுக்கள் தங்கி இளைப் பாறும் நோக்கத்தில் மடத்தை நிறுவினார்கள்.

மடத்தின் தெற்கில், மடத்தை நிறுவிய பாட்டனார் திரு வைத்தியநாதப் பிள்ளையவர்களின் சமாதி, எங்கள் தந்தையார் திரு. சிதம்பரம் பிள்ளையால் நிறுவப் பட்டுள்ளது.

திரு சிதம்பரம் பிள்ளை சமாதியும் அதன் அருகிலேயே நேர் கிழக்கில் என்னால் நிறுவப்பட்டுள்ளது. இராமலிங்க சுவாமிகளின் கூற்றுப்படி இறந்தவரை சமாதி வைப்பது என்ற முறையை, முன்னோர்கள் காலத்திலிருந்து பின் பற்றி வருகிறோம்.

**வாலிப வயதில் ஞான வாழ்க்கை**

பின்னலூருக்கு வடக்கே ஒரு மைல் தொலைவில் ஏரிக்கரையில் எழுந்தருளியிருக்கும் கரைமேட்டுப் பிள்ளையார் கோவிலுக்குச் சென்று, எனது குறைகளையெல்லாம் விண்ணப்பித்து, வாய்விட்டுப் புலம்பி அழுவேன். இப்படி மூன்று மாத காலங்கள் சென்றன.

சிலகாலம் உதவி உபாத்தியாயராகவும். சிலகாலம் உதவி போஸ்ட் மாஸ்டராகவும், சிலகாலம் கல்யாண பண்டு, மரண பண்டு ஏஜண்டாகவும், பணியாற்றி வந்திருக்கிறேன். (தெருக்கூத்து) நாடகங்களுக்கு கால் ஆர்மோனியம் வாசிப்பேன். நாடகங்களில்

கள்ளபார்ட், பபூன், மோகினிராஜன் ஆகிய பாத்திரங்களை ஏற்றும் கூத்தாடியிருக்கிறேன் அப்போதிருந்தே சொந்தமாக போட்டோ படம் எடுக்கும் பழக்கமும் இருந்து வந்தது. பின்னலூருக்கு சுமார் 15 மைல்கள் சுற்றளவிலுள்ள அனேக கிராமங்களில் நான் போட்டோ படம் எடுக்கும் தொழிலைச் செய்திருக்கிறேன். அத்துடன் கிராமபோன், கெடிகாரம், ரைஸ்மில் எஞ்ஜின்கள் முதலிய மெக்கானிசம் தெரிந்து அவைகளைப் பழுது பார்த்தும் வந்தேன் தற்போது ரேடியோ மெக்கானிசமும் தெரியும்.

சில ஆண்டு காலம் ஞாயிறுதோறும் மௌன விரதமிருந்து வந்திருக்கிறேன். மௌனமாயிருக்கும் காலத்தில் திருவருட்பா ஆறு திரு முறைகளையும், மற்றும் கைவல்யம், ஞானவாசிட்டம், சசிவர்ணபோதம், ஒழுவிலொடுக்கம், தாயுமானார் பாடல், பட்டினத்தார் பாடல், பக்த விஜயம், சிவஞான போதம், ஆத்ம புராணம், சித்தாந்த சாஸ்திரம் முதலியவற்றைப் படித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பேன்.

ஈசன் காட்டுக்குப்பம், மன்னார்குடி, புவனகிரி முதலிய பலஊர்களுக்கு பக்தி மார்க்கத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்ய அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறேன் ஆங்காங்கு - கர்மம், பக்தி, யோகம், ஞானம் இவைகளைப் பற்றி மேற்கோள்களுடன், எனக்குத் தெரிந்த கருத்துக்களை எடுத்துக் கூறுவேன்.

ஓர் நாள் புவனகிரி சப்ரிஜீஸ்டர் ஆபீசுக்கு முன்னாலிருந்த குளத்தில், நீரின் மேல் பத்மாசனத்திலும் கால் கைகளை நீட்டியும் - ஜலஸ்தம்பனம் செய்து நீண்ட நேரம் படுத்திருந்தேன், இதை வேடிக்கை பார்த்தபடி அனேகர் கூடியிருந்தனர்.

## ஞான வேட்கை தணித்த ஞானகுரு

எனக்குத் திடீரென்று உலக விவகாரங்களில் மிகுந்த வெறுப்பு ஏற்பட்டது. சொந்த பந்தங்களை நீக்கி, வெகு தொலைவு சென்று துறவியாகிவிடத் தீர்மானித்தேன். அப்போது தற்செயலாக இறைவனருளால், பால்ய சன்னியாசியின் படம் ஒன்றைப் பார்க்க நேர்ந்தது. அதில் திருவண்ணாமலை ரமணர் என்ற விபரம் இருந்தது.

மனவண்டியை முடுக்கியாயிற்று, திருவண்ணாமலை விரைந்தேன். மலைமேல் ஸ்கந்தாஸ்ரமத்தில் அப்பெரியாரைச் சந்தித்தேன். அவர் முன்னால் வணங்கி நிற்கும் போது என்னை யுமறியாமல், உணர்ச்சி வசப்பட்டு ஓ!வென்று வாய்விட்டலறிக் கண்ணீர் பெருக்குடன் உள்ளம் கனிந்து நின்றேன். மகரிஷியவர்கள் அடியேனைப் பார்த்து மலர்ந்த புன் முருவலுடன் உட்கார்!" என்றார். மனம் இன்பக் கடலாடியது. என் எண்ணங்கள் அனைத்தையும் மடை திறந்த வெள்ளம் போல் கொட்டித் தீர்த்தேன். அப்போது அங்கு ஒரு சில பக்தர்களே தங்கி இருந்தனர். அவர்களோடு நானும் ஒருவனாகத் தங்கிவிடத் தீர்மானித்தேன். துறவு நிலைக்கு என்னைத் தயார் செய்து கொள்ள ஒரு திட்டம் வகுத்தேன்.

**குடும்பச் சுமையை இறக்க, குறி வைத்த இடம்**

எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பங்காளி பெரிய தகப்பனார் சதாசிவம் பிள்ளையின் குமாரர் வைத்திநாதப் பிள்ளை எனக்கு இளைய சகோதரர் (எங்கள் பாட்டனார் பெயர் கொண்டவர்) அவரிடம் எங்களுக்குச் சொந்தமான சுமார் ஐந்து ஏக்கர்கள் நஞ்செய் புஞ்செய் நிலங்கள் சொந்தவீடு, தோட்டம் மாடு கன்றுகள் அனைத்தையும் செட்டில்மெண்டு மூலம் ஒப்படைக்கப் போவதையும், அதன் பயனாக எங்கள் தாயார், உடையூர் இரத்தினம் பிள்ளை தம்பி சிவகுருநாதன் மூவருக்கும் ஆண்டுதோறும் சாப்பாட்டுக்கான நெல்லும், ஆடை அணிகள் முதலிய அவசியமான செலவுக்குப் பணமும் கிடைக்க ஏற்பாடு செய்வதாகவும் தாயாரிடமும், தம்பியிடமும் தெரிவித்தேன் "நாங்கள் இருக்கும் காலம்வரை எங்களால் இயன்ற அளவு பாடுபட்டு சாப்பிட்டுக் கொள்ளுகிறோம்! இயலாவிட்டால் சொத்துக்களை விற்றாவது காலம் கழிப்போம், உன் வேலையைப் பார்!" என்று மறுத்துவிட்டனர். மீண்டும் தீவிரமாக சிந்தித்தேன். தாயாருக்கும் போதாது என்று எண்ணியதால், அவர்களைச் சமாதானம் செய்து, பங்காளியின் பராமரிப்பில் இருப்பது ஒரு பாதுகாப்பு என்று முடிவு செய்து நம்பிக்கையோடு, பங்காளி வைத்தியநாதப் பிள்ளைக்கு எங்கள் சொத்துக்களை செட்டில்மெண்டு செய்து கொடுத்துவிட்டேன்.

தாயாரையும் தம்பியையும் சமாதானம் செய்து திருவண்ணாமலை ஸ்கந்தாஸ்ரமம் வந்து சேர்ந்தேன், அப்போது சிதம்பரம் சமீபமுள்ள சி. முட்லூர் இராமசாமிப் பிள்ளையும் என்னோடு வந்து சேர்ந்தார்கள். இராமசாமி பிள்ளை இன்றும் ஆஸ்ரம பக்தர்களில் ஒரு வராக ஞான அனுபவ நிலையில் இருந்து வருகிறார் பக்தகோடிகளில் ஒருவனாக வந்து சீடர்களில் ஒருவனாக விளங்கினேன்.

அடியேனுக்கு பகவான் ரமணர் ஞான மார்க்கங்களை சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் தெளிவுபட விளக்கிச் சொல்லுவார்கள். அத்துடன் கவிபாடும் முறையையும் கற்பித்தார்கள்.

"நாம் நம் நிலையிலிருந்தால், நடப்பவையெல்லாம் தானே நடக்கும்!" என சூட்சமமாக எனக்குச் சொல்லுவார்கள். அதுகாலம் சுவாமி விலட்சனானந்தர், கடப்பை ஸ்ரீ சச்சிதானந்த யோகீஸ்வரர் ஆகியோர்களிடமும் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது.

### குறி தவறிய குடும்பச் சுமை

பின்னலூரில் எங்கள் தாயாருக்கு சுமார் மூன்று ஆண்டுகள் வரை சாப்பாட்டுக்குத் தேவையான நெல்லைக் கொடுத்து வந்த பங்காளி வைத்தியநாதப் பிள்ளை, அடுத்து அடுத்து எங்கள் தாயார் குடும்பத்துக்குத் தேவையான எந்த உதவியையும் செய்யாமல் அவர்களை அலட்சியப் படுத்திப் பேசியும், விரட்டியும், தம்பி சிவகுருநாதனைக் கீழே தள்ளி கழுத்தில் காலால் மிதித்தும் துன்புறுத்தினார்.

வேதனையும், வெறுப்பும் அடைந்த தாயாரும் தம்பியும், ஒரு முடிவுக்கு வந்தனர். மறுதினமே தம்பி சிவகுருநாதன், திருவண்ணாமலை ரமணாஸ் ரமத்துக்கு, என்னைப் பார்க்க ரயில் பிரயாண மூலம் வந்து சேர்ந்தான்.

ஆஸ்ரமத்தில் மகரிஷிமுன்னிலையில் பக்தர்கள் கூடியிருந்த சமயம், நானும் பக்தர்கள் குழுவில் அமர்ந்திருந்தேன். என்னையும் மகரிஷிகளையும் பார்த்த தம்பி இங்கிதம் தெரியாமல்,

"எங்க அண்ணன் ராமலிங்கம், எங்களை திண்டாட விட்டுவிட்டு இங்கு வந்து தங்கிவிட்டார்!" என்று ஆவேசத்துடன் சப்தமிட்டான். அவன் நிலையைப் பார்த்த பக்தர்களும், மகரிஷியவர்களும் என்னைப் பார்த்தார்கள் என்ன சொல்வதென்றே தெரியாமல் வெட்கித் தவித்தேன்.

தம்பியைத் தனியே அழைத்துச் சென்று அவன் தெரிவித்த குறைகளைக் கேட்டுக் கொண்டு சமாதானப் படுத்தி தங்க வைத்தேன்.

**மகரிஷிகள் காட்டிய மகத்தான வாழ்க்கை!**

மறுதினம் மகரிஷியவர்கள் என்னைத்தனியே அழைத்து விசாரித்து விஷயங்களைப் புரிந்து கொண்டார்கள். கண்கலங்கி நின்றேன். கருணையோடு என்னைப் பார்த்து, "நீங்கள் ஊருக்குப் போகலாம்!" என்றார்கள். எனக்கு தூக்கிவாரிப் போட்டது. மகரிஷிகளோடு ஆஸ்ரமத்தில் நிரந்தரமாகத் தங்கியிருக்கும் நம்மை, போகச் சொல்லுகிறார்களே! என்று ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றேன்,

"நீங்கள் ஊருக்குப் போங்கள் எல்லாம் தானே நடக்கும்!" என்று மறுபடியும் தெரிவித்தார்கள். மகரிஷியின் உத்தரவை மீறத் துணிவின்றி விடைபெற்று, தம்பியோடு ஊர்வந்து சேர்ந்தேன்.

பின்னலூரில் அப்போது, அம்பாபுரம் திரு கைலாசம் பிள்ளையும், பின்னலூர் திரு இரத்தினசபாபதிப் பிள்ளையும், கூட்டாக ஆயில் எஞ்சின் மூலம் ரைஸ்மில் தொழிலை நடத்தி வந்தார்கள். நான் வந்து விட்டேன் என்று தெரிந்து அவர்கள் என்னை அழைத்து, ரைஸ்மில் தொழிலைப் பொறுப்பேற்று நடத்தும்படி தெரிவித்தார்கள்! இது ஒரு நல்ல வாய்ப்பு எனக் கருதிரைஸ்மில்லில் டிரைவராக வேலை செய்து கொண்டே மிகவும் சிறப்பாகத் தொழிலை நடத்தினேன். இதன் மூலம் சாப்பாட்டுக்கும், இதரச் செலவுகளுக்கும் இருந்த பஞ்சம் நீங்கியது.

குத்தகை முறையில் ஒப்புக் கொண்டு நடத்திவந்த ரைஸ்மில் தொழிலில் ரூபாய் எழுநூற்றி ஐம்பது ஆதாயத்தோடு வெளியே

வந்தேன். இத்தொகையைக் கொண்டு ஒரு பழைய ஆயில் எஞ்சினும், பழைய அல்லர்சாமான்களும் விலைக்கு வாங்கி, ஆறுமாத காலத்துக்குள் சொந்தமாக ரைஸ்மில் தொழிலை நடத்தினேன். இதனால் திரு கைலாசம் பிள்ளை அவர்கள் ரைஸ்மில்லை விற்று விட்டார்.

இந்த சம்பவங்களுக்கிடையில் அடிக்கடி திருவண்ணாமலை சென்று அருட்குரு ரமண மகரிஷி அவர்களிடம் என் குடும்ப நலன்களைப் பற்றி தெரிவித்து வந்தேன்.

## திருமணத்தில் திருப்பு முனை

எனக்கு வயது முப்பத்திநான்கு துவங்கிய சமயம் என் தாயார் என்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். சாமியாராகத் திரிந்தவன் என்ற கருத்தில் சொந்த உறவில் பெண் தர எவரும் முன்வரவில்லை. எங்காவது ஏழை சைவக் குடும்பத்தில் பெண் எடுப்பது என்று நானும் தாயாரும் முடிவு செய்தோம்.

காஞ்சீபுரத்தைப் பூர்வீகமாகக் கொண்ட தொண்ட மண்டல முதலியார் சைவக் குடும்பத்தினர் விழுப்பும் ரயில்வே இலாகாவில் வேலை செய்து கொண்டிருந்தனர். அந்த ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த ஞானாம்பாள் என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தோம். பின்னலூர் திரு. தெய்வசிகாமணிப் பிள்ளை மூலம் அப்பெண்ணை அழைத்து வந்து, சிதம்பரம் கீழத்தெரு மாரியம்மன் கோயில் சன்னதியிலேயே, எளிய முறையில் நண்பர் திரு. நாகரத்தினம் பிள்ளையின் தாயார் ஏற்பாட்டில், 27-11-1926 ம் ஆண்டு திருமணம் செய்து கொண்டேன்.

மனைவி வந்த யோகம் ரைஸ்மில் தொழில் நல்ல லாபகர மாக நடக்கத் துவங்கியது. புதிதாக ஒரு ஆயில் எஞ்சினை வாங்கி வந்து ரைஸ்மில் தொழிலை மேலும் சிறப்பாக நடத்தி வந்தேன்.

## நம்பிக்கைத் துரோகம் திசை மாறியது

பங்காளி வைத்திநாதப் பிள்ளை பெரிய கடனாளியானார். கடன் நெருக்கடிகுப் பயுந்து. (**I, P,** இன்சால்வென்ட்)

கொடுத்துவிட்டார். அதனால் அவர் சொத்துக்கள் அனைத்தும், ஏலத்துக்குக் கொண்டுவரப் பட்டது. ஏலம் விடப்பட்ட சொத்துக்களில் எங்கள் செட்டில்மெண்டு சொத்துக்களும் கட்டுப்பட்டிருந்ததால், எங்கள் சொத்துக்களை மட்டும் நான் ஏலம் எடுத்துக் கொள்ள எனக்கு மிகவும் பழக்கமான திரு ஜீவானந்தம் மேஸ்திரி அவர்கள் தக்கபடி ஏற்பாடு செய்தார்கள். அந்த ஏற்பாட்டில் அபிஷியல் ரிஸீவர் மூலம் எங்கள் சொத்துக்கள் அனைத்தையும் 7-2-1938ல் கிரயம் பெற்றுக் கொண்டேன். அதற்கான அனைத்து ஆவணங்களும் இன்னும் பத்திரமாக இருக்கின்றன.

ரைஸ்மில் தொழில் வருவாயோடு, இழந்த சொத்துக் களையும் மீட்டுக் கொண்ட என் நிலை பின்னலூரில் பலருக்கும் ஆச்சரியத்தைத் தந்தது.

**நெஞ்சு பொறுக்குதில்லையே!**

எங்கள் நல்ல நிலையைக் காணச் சகியாத பங்காளி வைத்தியநாதம்பிள்ளையும் அவர் மைத்துனரும் என் மனைவி யின் குலத்தைப்பற்றி இழிவாக ஊரில் பலரிடமும் பிரச்சாரம் செய்தார்கள். அதைக் கேட்டுக்கொண்ட ஒரு சில பொறாமை கொண்ட அன்பர்கள் சிலர் எங்களிடம் வித்தியாசமாக நடந்து கொண்டனர். அவர்களுக்கு ஆண்டவனே வழிவகுப்பான் என்று அவர்களையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் என் வாழ்க்கையில், என் கடமைகளில் கண்ணும் கருத்துமாக இருந்தேன்.

**தொழில் வளத்துடன் ஞானவளம்**

1924 ம் ஆண்டு முதல் 1949 ம் ஆண்டு இருபத்தி ஐந்து ஆண்டுகளில், பின்னனலூருக்கு சுமார் பத்து மைல்கள் சுற்றளவில் குமாரகுடி, வளையமாதேவி, கம்மாபுரம், ஆயிவரம் ஆகிய ஊர்களிலும் ஆயில் எஞ்சின்கள் மூலம் ரைஸ்மில் தொழிலை அமைத்து, பின்னலூர் உட்பட ஐந்து ரைஸ்மில்களையும் நான் ஒருவனே சைக்கிள் மூலம் சென்று ரைஸ்மில் தொழிலை நிர்வகித்து வந்தேன்.

இல்லறத்திலிருந்து கொண்டே நான் கண்ட துரிய வெளி தரிசனத்தை, இவ்வையகத்தாரும் பெறவேண்டும் என்ற எண்ணம் தான் **துரியவெளி அல்லது எனது அனுபவம்** என்ற நூலை எழுதத் தூண்டியது.

**அருட்பெருஞ்ஜோதி, ஆத்மஞானம் அடையும் வழி தெய்வ உணர்ச்சி, ரமண மணிமாலை; இராமலிங்க சுவாமிகள் நாடகம்**, முதலிய ஞான நூல்களை எழுதி சொந்தமாக வெளியிட்டேன்.

அப்போது ரங்கூன் தேசத்திலிருந்து கல்வி என்ற மாதப் பத்திரிக்கை வந்து கொண்டிருந்தது அப்பத்திரிக்கையில் '**துரிய வெளி அல்லது எனது அனுபவம்** என்ற' தலைப்பில் தொடர் கட்டுரையாக எழுதி வந்தேன். கல்வி இதழில் அட்டைப்படமாக எனது உருவத்தையும் அப்போது வெளியிட்டார்கள்.

அக்கட்டுரைத் தொகுப்பையே, துரிய வெளி அல்லது எனது அனுபவம் என்ற நூலாக மூன்றாம் பதிப்பாக 1949-ம் ஆண்டில் வெளியிட்டேன்.

**எங்கள் குடும்பம் பெரிது**

காலக்கிரமத்தில் எனக்கு இரண்டு ஆண்பிள்ளைகளும், நான்கு பெண் பிள்ளைகளும் பிறந்தனர். தக்க வயதில் அவர்கள் கல்வியறிவையும் பெற்றனர்.

2-7-37ல் என் தம்பி சிவகுருநாதனுக்கு திருமணம் செய்து வைத்தேன். ஏலம் எடுக்கப்பட்ட எங்கள் பூர்வீக நிலபுலன்கள் வீடு வாசல்கள் முதலியவற்றோடு, என் சுய சம்பாத்தியத்தில் வாங்கிய நிலமும் சேர்த்து சுமார் ஐந்து ஏக்கர் நிலங்களும், எங்கள் பூர்வீக வீடு, மனைகளையும் தம்பி சிவகுருநாதனுக்கு செட்டில்மெண்டு செய்து கொடுத்துவிட்டேன். பூர்வீக சொத்தில் எனக்கென்று எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை.

என்னால் சுயமாக சம்பாதிக்கப்பட்ட நிலபுலன்கள் வீடு, மனைகள் முதலானவற்றை என் பிள்ளைகள் பெயருக்கே கிரயம் வாங்கினேன்.

---

அருள் ஒளிரும் இடம் கடவுள் தோன்றும்

அவர்கள் விருப்பப்படியே, அன்று மாலை, எங்கள் மடத்தின் நந்தவனத்தில் அவர்கள் குறிப்பிட்ட இடத்திலேயே சமாதி வைத்துள்ளோம்.

ஆண்டு தோறும் கார்த்திகை மாதம், அமாவாசைக்குப் பிறகு வரும் உத்திராட நட்சத்திரத்தில் குரு பூஜையை சிறப்பாக நடத்தி வருகிறோம்.

**வள்ளலார் காட்டிய வழி**

1975 ம் ஆண்டு முதல் இன்று வரை, மதுரை மாவட்டம் தேனியிலிருந்து, வடலூர் தைப்பூசத்துக்குப் பாதயாத்திரையாக வரும் வள்ளலார் அன்பர்கள் பின்னலூர் எங்கள் இல்லத்துக்கு மதியம் வருவார்கள். துரியானந்தர் சமாதிக்கு வழிபாடுகள் செய்து முடிந்ததும் பாதயாத்திரை அன்பர்கள் சுமார் எண்பது முதல் தொண்ணூறு பேர்களுக்கு எங்கள் இல்லங்களில் மதிய விருந்தும், இரவு சிற்றுண்டியும் அளித்து வருகிறோம்.

**வேண்டுகோள்**

எங்களுக்குத் தோன்றாத்துணையாக இருந்து அருளும், பொருளும் வழங்கி வரும் திருவருட்பிரகாச வள்ளலார், ஸ்ரீரமண மகரிஷிகள், தந்தை துரியானந்தர் மற்றும் முன்னோர்கள் அனைவருக்கும் இந்த நூற்றாண்டு விழாவில் கலந்து கொண்ட குடும்பத்தினர் அனைவருக்கும் நாங்கள் மேலும் மேலும் இம்மாதிரி தெய்வீகப் பணிகளைத் தொடர்ந்து செய்து வர அருள்புரியும்படி எங்கள் வேண்டுகோளை சமர்ப்பிக்கிறோம்.

(8-6-91 & 9-6-91 ஆகிய நாட்களில் நடந்த துரியானந்தர் நூற்றாண்டு விழா நினைவு மலரில் ஒரு பகுதி)

சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

ஓம் தத் ஸத்.

---

கனவிலும் கருணை வேண்டும்!



கந்தாஸ்ரமம் ஸ்ரீரமண மகரிஷிகளுடன்
ஆரம்பகால பக்தர்கள் (1936)
மகரிஷிகளின் அருகில் கைமேல் கைவைத்து
நிற்கும் பக்தர் - பின்னலூர் துரியானந்தர்